அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு



॥ श्रीः ॥




"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला-१९



# ஸ்ரீஜகத்குரு க்ரந்தமாலா
# 19

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்

1966



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

உ ஸ்ரீ:

# பதிப்புரை.

ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம், ஸ்ரீ விஷ்ணு புஜங்க ப்ரயாத ஸ்தோத்திரம், கோவிந்தாஷ்டகம், பாண்டுரங்காஷ்டகம், ஜகந்நாதாஷ்டகம் என்ற ஐந்து ஸ்தோத்ரங்கள் கொண்ட இம்மலர் ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலாவில் 19-வது. வழக்கம்போல் தேவநாகரியிலும் தமிழிலும் மூலமும் பதவுரையும், விரிவான கருத்துரையும் ஒவ்வொரு சுலோகத்திற்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. கடைசியில் சுலோகாநுக்ரமணிகையும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

மோக்ஷத்திற்குக்காரணமான ஞானத்திற்கு அந்தரங்க ஸாதனம் த்யானம். தியானத்தால்தான் ஸமாதி நிலையை அடைகிறான். த்யானத்திற்கு ஸாதனமாக யோக சாஸ்திரத்தில் தாரணை கூறப்பட்டிருக்கிறது. புலன்களை அடக்கி மனதை ஒரே இடத்தில் நிலைநிறுத்துவதுதான் தாரணையாகும். பகவத் விக்ரஹத்தில் மனம் நிலைபெற்று அதையே எப்பொழுதும் தியானம் செய்வதற்கு உபயோகமாகத்தான் இந்த ஸ்தோத்திரத்தில் பாதம் முதல் கேசம் வரையுள்ள ஒவ்வொரு அவயவத்தையும் கடைசியில் ஸம்பூர்ண விக்ரஹத்தையும் ஆசார்ய பாதாள் வர்ணிக்கிறார். இதே மாதிரியாக பகவத்பாதாளால் அருளப்பட்ட சிவகேசாதி பாதாந்த ஸ்தோத்ரம் 8-வது மலரிலும் சிவ பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் 15-வது மலரிலும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத் பாகவதத்திலும் இம்மாதிரியே 'संचिन्तयेत् भगवतश्चरणारविन्दं' என்று கபிலர் தன் தாயான தேவஹூதிக்கு பகவன் மூர்த்தியை வர்ணிக்கிறார்.

இம்மாதிரி த்யானம் செய்பவர்கள் இவ்வுலகிலும் எல்லா ஸௌபாக்யங்களையும் பெற்று பகவானின் அருளால் எல்லாப்பாபங்களும் தொலைந்து பகவத் ஸாயுஜ்யத்தையும் நிரதிசயாநந்த ரூபமான மோக்ஷத்தையும் அடைவார்கள். இதைக் கடைசி சுலோகத்தில் கூறுகிறார். இந்த சுலோகத்

தில் 'मोदात्पादादिकेशस्तुति' என்றும், 51வது சுலோகத்தில் 'आपादात् आच शीर्षात्' என்றும் இந்த ஸ்தோத்ரத்திற்கு 'பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்' என்றே பெயர் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனாலும் ஆரம்பத்தில் சங்கம், சக்ரம், தநுஸ், கட்கம், கதை என்னும் பஞ்சாயுததேவதைகளையும் கருடன் அநந்தன், லக்ஷ்மீ, பூதேவி என்ற பரிவார தேவதை களையும் வர்ணித்துவிட்டு 10-வது சுலோகத்தில் தான் பகவானின் பாதவர்ணனத்தை ஆரம்பிக்கிறார். ஏனெனில் பகவானுக்கு அருகில் இருந்து ஸேவை புரியும் பரிவார தேவதைகளின் அருள் இருந்தால்தான் இடைஞ்சலில்லாமல் நம் மனம் பகவன் மூர்த்தியில் நிலைபெற்று தியானத்தால் பகவானின் அருளைப்பெற முடியும். அதிலும் எல்லா ஞானங்களையும் தரும் வேதமயமான பாஞ்சஜன்ய சங்கத்தை முதலில் பிரார்த்திக்கிறார். அதன் பின் ஸுதர்சன சக்ரத்தையும் சார்ங்கம் என்ற வில்லையும், நந்தகம் என்னும் கட்கத்தையும், கௌமோதகீ என்னும் கதாயுதத்தையும் பிரார்த்திக்கிறார். இவ்வைந்தும் தேவதா ரூபம். பிறகு சந்தோமயமான கருடனையும் ஆதிசேஷனையும் பிரார்த்தித்து ஜகன்மாதாவான லக்ஷ்மீ தேவதையையும் பூமி தேவியை யும் வணங்குகிறார்.

இவ்வாறு பரிவார தேவதைகளை வேண்டிக்கொண்டு பிறகு பகவானுடைய ஸ்ரீபாததூளியிலிருந்து ஆரம்பித்து க்ரமமாக ஒவ்வொரு அவயவத்தையும் மனதில் தியானிப் பதற்குத் தக்கபடி வர்ணிப்பதுடன் அந்த ஒவ்வொரு அவயவமும் நன்மைகளைத் தரவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார். கடைசியில் ஸம்பூர்ணமான பகவத் விக்ரஹத்தையும், ஒரே சுலோகத்தில் பக்தர்களைக் காக்க எடுத்துக்கொண்ட பத்து அவதாரங்களையும் கூறிவிட்டு ஸகுணமான இந்த பகவன்மூர்த்திக்கும் அதிஷ்டானமான பரமார்த்தமான நிர்குண ஸ்வரூபத்தையும் வர்ணிக்கிறார். பிறகு இங்கு வர்ணிக்கப்பட்ட பகவத் விக்ரஹத்தை தியானிக்கும் பக்தர்களை வணங்கிவிட்டு இந்த ஸ்தோத்ரத் தின் பலனைக் கூறி முடிக்கிறார்.

இந்நூலுக்கு ஸ்ரீ பூர்ண ஸரஸ்வதி என்பவர் எழுதிய "பக்தி மந்தாகினி" என்னும் வியாக்யானம் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீவிலாஸ் ப்ரஸ்ஸில் அச்சிடப்பட்டுள்ளது. இதில் பல விசேஷமான கருத்துக்களும் மேற்கோள்களுடன் அரிய சாஸ்திர தத்வங்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. முக்யமாக பிரபஞ்சத்தையே சரீரமாகக் கொண்ட விராட் ஸ்வரூபத்தில் அந்தந்த அவயவங்களை தியானிக்கும் முறையைக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

சப்தப்ரஹ்மாத்மகமான சங்கத்தை பூதாதியான அஹங்கார தத்வமாகவும், சக்ரத்தை மனஸ் தத்வமாகவும், சார்ங்க தனுஸ்ஸை இந்திரியாதியான அஹங்கார தத்வமாகவும், நந்தக கட்கத்தை அவித்யா கோசத்திலுள்ள வித்யையாகவும், கௌமோதகீகதையை புத்தி தத்வமாகவும், வேதஸ்வரூபமான கருடரையும் அனந்தரையும் பகவன் மூர்த்தியாகவும், லக்ஷ்மீதேவியை மஹா மாயா ரூபமாகவும், பூதேவியை ஆதார சக்தியாகவும், எல்லா பக்தர்களையும் காப்பாற்றும் திருவடிகளை பாதாள லோகமாகவும், கணுக்கால்களை ரஸாதலமாகவும், முழங்கால்களை தலாதலமாகவும், ஜானுவை ஸுதலமாகவும் இரண்டு துடைகளை அதல விதலங்களாகவும் ஜகநத்தை மஹீதலமாகவும், நாபியை ஆகாயமாகவும், ரோமராஜியை விருக்ஷங்களாகவும், மார்பை ஸ்வர்லோகமாகவும், ஸ்ரீவத்ஸத்தை ப்ரதான தத்வமாகவும், கௌஸ்துபத்தை ஆத்ம தத்வமாகவும் வைஜயந்தீமாலையை மஹா பூதங்களாகவும், பாஹுமூலத்தை மருத்துக்களாகவும், பாஹுக்களை இந்திராதி தேவதைகளாகவும், கண்டத்தை மஹர்லோகமாகவும், தந்தங்களை நக்ஷத்ரங்களாகவும், வாக்கை வேதமாகவும், முகத்தை ஜநோலோகமாகவும், நாஸாபுடங்களை அச்விநீ தேவதைகளாகவும், நேத்ரங்களை ஸூர்ய சந்திரர்களாகவும், புருவத்தை ப்ரஹ்மலோகமாகவும், லலாடத்தை தபோலோகமாகவும், கேசங்களை மேகங்களாகவும், உபாஸிக்கவேண்டிய ரஹஸ்யங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இரண்டாவதான விஷ்ணு புஜங்க ஸ்தோத்ரத்திலும் தம் சரீரத்தில் ஹிருதயத்தில் பக்தர்கள் தியானிப்பதற்காக பகவன் மூர்த்தியை சுருக்கமாகவும் மிக்க அழகாகவும் வர்ணிக்கிறார்.

மூன்றாவதான கோவிந்தாஷ்டகத்தில் கிருஷ்ணலீலைகளை வர்ணிக்கிறார்.

நான்காவதான பாண்டுரங்காஷ்டகம் பண்டரீபுரத்திலுள்ள மூர்த்தியைப்பற்றியது. இதில் 'परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम्' என்று கூறுகிறார். பகவானுடைய எல்லா மூர்த்திகளுமே மாயையால் பரப்ரஹ்மத்தில் தோன்றிய ரூபங்கள் ஆனபடியால் எல்லா ரூபங்களும் நிர்குணமான பரப்ரஹ்மத்தையே காட்டுகின்றன.

கடைசியான ஜகந்நாதாஷ்டகம் புரீ க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டுள்ள மூர்த்தியைப் பற்றியது. அங்கு இப்பொழுதும் நடைபெற்று வருகிற பிரஸித்தமான ரதோத்ஸவத்தை 5வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்.

இதிலுள்ள எல்லா ஸ்தோத்திரங்களுக்கும் சிருங்கேரி மடம் ஆஸ்தான வித்வான் வித்யாபூஷணம் ஸ்ரீ K. S. நரஸிம்ம சாஸ்திரிகள் பதவுரை, கருத்துரை எழுதித் தந்துள்ளார்கள். மற்ற விஷ்ணு ஸ்தோத்திரங்களும் அடுத்த மலர்களில் வெளிவரும்.

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியால் வெளியிடப்பட்டு வரும் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின், ஐந்து ஸ்தோத்திரங்கள் அடங்கிய இந்த 19வது மலரை ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அவர்களின் திவ்ய பாதபத்மங்களில் பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்கிறோம். மற்ற மலர்களும் விரைவில் வெளிவர அருள் புரியுமாறு ஸர்வேசுவரனை பிரார்த்திக்கிறோம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதர்சி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

॥ श्रीः ॥

# ॥ श्रीविष्णुपादादिकेशान्तस्तोत्रम् ॥

# விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்

---

[ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் அருளிய ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம் 52 சுலோகங்கள் கொண்டது. இதில் சங்கம், சக்கரம், சார்ங்கம், நந்தகம், கதை ஆகிய ஐந்து ஆயுத தேவதைகளையும் கருடர், அனந்தர், லக்ஷ்மீ, பூதேவி ஆகிய பரிவார தேவதைகளையும் வர்ணித்துவிட்டு பாத தூளியையும், ரேகைகளையும் பாதம் முதல் கேசம் வரையுள்ள ஒவ்வொரு அவயவத்தையும், கிரீடத்தையும், ஸம்பூர்ணமான பகவத் ஸ்வருபத்தையும், மத்ஸ்யம் முதலான அவதாரங்களையும் நிராகாரமான ஸ்வருபத்தையும் வர்ணித்து பக்தர்களை வணங்கி கடைசியில் இந்த ஸ்தோத்திரத்தின் பலனைக்கூறுகிறார்.]

பாஞ்சஜன்ய சங்க வர்ணனம் :—

लक्ष्मीभर्तुर्भुजाग्रे कृतवसति सितं यस्य रूपं विशालं
नीलाद्रेस्तुङ्गशृङ्गस्थितमिव रजनीनाथबिम्बं विभाति ।
पायान्नः पाञ्चजन्यः स दितिसुतकुलत्रासनैः पूरयन्स्वै-
र्निध्वानैर्नीरदौघध्वनिपरिभवदैरम्बरं कम्बुराजः ॥ १ ॥

லக்ஷ்மீபர்துர் புஜாக்ரே க்ருத வஸதி ஸிதம் யஸ்ய ரூபம் விஸாலம்
நீலாத்ரேஸ் துங்கச்ருங்கஸ்திதமிவ ரஜநீநாதபிம்பம் விபாதி।
பாயாந்ந: பாஞ்சஜந்ய: ஸ திதி ஸுதகுல த்ராஸநை: பூரயன் ஸ்வைர்
நித்வாநைர் நீரதௌகத்வனி பரிபவதைரம்பரம் கம்புராஜ: ॥

लक्ष्मीभर्तुः-லக்ஷ்மீபதி விஷ்ணுவினுடைய भुजाग्रे-நுனிக் கையில், कृतवसति-வாஸம் செய்வதும், सितं-வெண்மை நிற

முடையதும், विशालं–அகன்றதாயும் உள்ள, यस्य रूपं–எந்த பாஞ்சஜன்யத்தின் உருவம், नीलाद्रेः–இந்திர நீலமலையி னுடைய तुङ्गशृङ्गस्थितं–உயரமான சிகரத்திலிருக்கும் (உதித் திருக்கும்) रजनीनाथबिम्बमिव–சந்திரமண்டலம்போல, विभाति–விளங்குகிறதோ, सः–அந்தவிதமாயும், नीरदौघध्वनि-परिभवदैः–மேகங்களின் இடிமுழக்கங்களை அவமதிப்பவை களும் (அதுபோன்றவைகளும்) दितिसुतकुलत्रासनैः–அசுர குலத்திற்கு பயத்தை உண்டுபண்ணுபவைகளுமான स्वैः निध्वानैः–தனது சப்தங்களினுல் अम्बरं–ஆகாயத்தை पूरयन्–நிரப்புகிறதாயுமுள்ள, पाञ्चजन्यः–பாஞ்ச ஜன்யமென்னும் பெயருடைய कम्बुराजः–சிறந்த சங்கம், नः–நம்மை, पायात्–காப்பாற்ற வேண்டும்.

*லக்ஷ்மீபதியின் கைநுனியில் வாஸம் செய்வதும் வெண்ணிற மாயும் அகன்றதாயும் உள்ள எதனுடைய திவ்ய உருவம் இந்திர நீல பர்வதத்தின் உயரமான சிகரத்தின் கண் உதித்திருக்கும் சந்திரமண்டலம்போல் விளங்குகிறதோ, அந்த பாஞ்சஜன்யம் என்னும் பெயர்பூண்டதாயும் மேகங்களின் இடி முழக்கத்தையும் அவமதிக்கவல்லதும் அசுரகுலத்திற்கு மிக்க அச்சம் விளைவிப்பது மான தனது கம்பீர சப்தங்களினுல் ஆகாயம் பூருவையும் நிரபபுவ தாயும் உள்ள, சிறந்த சங்கம் நம் அனைவரையும் காப்பாற்றுக.* (1)

**சுதர்சன சக்கரம் :—**

**आहुर्यस्य स्वरूपं क्षणमुखमखिलं सूरयः कालमेतं**
**ध्वान्तस्यैकान्तमन्तं यदपि च परमं सर्वधाम्नां च धाम ।**
**चक्रं तच्चक्रपाणेर्दितिजतनुगलद्रक्तधाराक्तधारं**
**शश्वन्नो विश्ववन्द्यं वितरतु विपुलं शर्म घर्मांशुशोभम् ॥**

ஆஹுர் யஸ்ய ஸ்வரூபம் க்ஷணமுகமகிலம் ஸூரய:
காலமேதம்
த்வாந்தஸ்யைகாந்தமந்தம் யதபி ச பரமம் ஸர்வ
தாம்னும் ச தாம]

சக்ரம் தச்சக்ரபாணேர் திதிஜ தநு கலத்
ரக்ததாராக்த தாரம்
ஶச்வந்நோ விச்வவந்த்யம் விதரது விபுலம் ஶர்ம
கர்மாம்ஶு-ஶோபம் ll

यस्य स्वरूपं-(சுழன்று கொண்டிருக்கும்) எதனுடைய உருவத்தை, क्षणमुखं-க்ஷணிகநேரம் என்பதை முதலாகக் கொண்ட (க்ஷணம் நாழி, ஜாமம் பகல் நாள் மாசம் வருஷம் யுகம் என்று கூறப்படுகிற) एतं-இந்த (ப்ரஸித்தமான) अखिलं कालं-பூர்ணகால சக்ரமாக सूरयः-அதன் தத்வமறிந்த வித்வான்கள் आहुः-கூறுகிறார்களோ. अपि च-மேலும், यद्-எந்த சக்ரத்தின் உருவத்தை, ध्वान्तस्य-இருளை एकान्तं-நிச்சயமாக, अन्तं-அழிக்கக்கூடிய परमं-மிக்க உயர்ந்த सर्वधाम्नां च धाम-எல்லா ஒளிகளுக்கும் இருப்பிடமாக (आहुः-சொல்லுகிறார்களோ) तत्-அந்த விதமாயும், दितिजतनुगल-द्रक्तधाराक्तधारं-(யுத்தங்களில் அறுத்துத் தள்ளப்பட்ட) அசுர சரீரங்களிலிருந்து பெருகிய ரக்த பிரவாஹத்தால் பூசப்பட்ட நுனியையுடையதாயும், विश्ववन्द्यं-உலகமனைத்திலும் நமஸ்கரிக்கத்தக்கதும், विपुलं-விசாலமானதும், घर्मांशुशोभं-சூரியனின அழகையுடையதாயும் உள்ள, चक्रपाणेः चक्रं-கையில் சக்ராயுதம் தரித்த விஷ்ணுவின் சக்ரம், नः-நமக்கு, शश्वत्-இடைவிடாது विपुलं-விஸ்தாரமான, शर्म-சுகத்தை, वितरतु-அளிக்கவேண்டும்.

ஞானிகள் எதனுடைய உருவத்தை க்ஷணம் விநாடி நாள் முதலான ஸகல காலரூபமாகக் கூறுகிறார்களோ, எதை இருளை சேஷமின்றி நிச்சயமாக அழிக்க வல்லதும், சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள், அக்னி முதலிய தேஜோ வஸ்துக்களுக்கும் ஒளி அளிக்கும் உயர்ந்த தேஜோ வஸ்துவாகக் கூறுகிறார்களோ, அவ்விதமாயும் அரக்கர்களின் சரீரத்திலிருந்து பெருகும் ரக்த தாரைகள் தோய்ந்துள்ள கூரையுடையதும், உலகத்திலுள்ள வணங்கத்தக்கதாயும், உஷ்ணகிரணம் நிறைந்த சூர்யமண்டலத்தின் அழகையுடையதாயுமுள்ள சக்ரபாணியான விஷ்ணுவின் சக்ராயுதம் நமக்கு எப்பொழுதும் அதிகமான சுகத்தை அளிக்க வேண்டும். (2)

சார்ங்கம் என்னும் வில்:—

अव्यान्निर्घातघोरो हरिभुजपवनामर्शनाध्मातमूर्ते-
रस्मान्विस्मेरनेत्रत्रिदशनुतिवचःसाधुकारैः सुतारः ।
सर्वं संहर्तुमिच्छोररिकुलभुवनं स्फारविष्फारनादः
संयत्कल्पान्तसिन्धौ शरसलिलघटावार्मुचः कार्मुकस्य ॥

அவ்யாந் நிர்காத கோரோ ஹரிபுஜ பவநாமர்ஶநாத்மாத மூர்த்தே-
ரஸ்மாந் விஸ்மேர நேத்ர த்ரிதஶ நுதிவசஸ்ஸாது காரை: ஸுதார: ।
ஸர்வம் ஸம்ஹர்த்துமிச்சோரரிகுல புவநம் ஸ்பார விஷ்பார நாத:
ஸம்யத் கல்பாந்த ஸிந்தௌ ஶர ஸலில கடா வார்முச: கார்முகஸ்ய ॥

संयत्कल्पान्तसिन्धौ-பிரளய கால ஸமுத்திரம்போன்ற யுத்தத்தில், शरसलिलघटावार्मुचः-ஜலதாரைகளைப்போன்ற பாணங்களை வர்ஷிக்கும் மேகம் போன்றதும், सर्वं-எல்லா अरिकुलभुवनं-சத்ருகுலம் நிறைந்த உலகத்தை, संहर्तु-அழிப்பதற்கு, इच्छोः-விரும்புகிறதும், हरिभुजपवनामर्शनाध्मातमूर्तेः-விஷ்ணுவின் கைகளாகிற வாயுவின் ஸம்பந்தத்தால் விஸ்தாரமடைந்த உருவமுள்ளதுமான, कार्मुकस्य-சார்ங்கம் என்னும் வில்லினுடைய, निर्घातघोरः-இடிமுழக்கம்போல் பயங்கரமாயும், विस्मेरनेत्रत्रिदशनुतिवचःसाधुकारैः-ஆச்சரியத்தினல் பூரித்த கண்களுடன் தேவர்கள் செய்யும் ஸ்துதி வார்த்தைகளினாலும் நன்கு நன்கு என்ற புகழ்ச்சிச் சொற்களாலும், सुतारः-நல்ல பேரிரைச்சலுடன் கூடியதுமான, स्फारविष्फारनादः-எங்கும் பரவும் டங்காரத்வனியானது, अस्मान्-த்யானம் செய்யும் நம்மை, अव्यात्-ரக்ஷிக்க வேண்டும்.

எல்லா சத்ருகுல லோகங்களையும் அழிக்க விரும்புவதும், விஷ்ணுவின் கைகளாகிற காற்றின் ஸம்பந்தத்தால் விஸ்தார

மடைந்த உருவமுள்ளதும், ப்ரளய காலத்தில் கலங்கிய கடல் போன்ற யுத்தத்தில் நீர்த்தாரைகளைப்போன்ற அம்புகளைப் பொழியும் மேகம் போன்றதாயும் உள்ள சார்ங்கம் என்னும் வில்லின் இடி முழக்கம்போல் பயங்கரமானதும், கம்பீரமானதும், ஆச்சர்யமடைந்த கண்களையுடைய தேவர்களின் ஸ்துதிகளினாலும் "நல்லது நல்லது பலே பலே" என்ற புகழ்ச்சொற்களினாலும் மிக்க உரத்த த்வனியாக ஆனதாயும் உள்ள எங்கும் பரவும் உரத்த டங்கார சப்தம் நம் அனைவரையும் காப்பாற்றட்டும். (3)

நந்தகமென்னும் கத்தி :—

जीमूतश्यामभासा मुहुरपि भगवद्बाहुना मोहयन्ती
युद्धेषूद्धूयमाना झटिति तटिदिवालक्ष्यते यस्य मूर्तिः ।
सोऽसिस्त्रासाकुलाक्षत्रिदशरिपुवपुःशोणितास्वादतृप्तो
नित्यानन्दाय भूयान्मधुमथनमनोनन्दनो नन्दको नः ॥

ஜீமூத ச்யாமபாஸா முஹுரபி பகவத்பாஹுநா மோஹயந்தீ
யுத்தேஷூத்தூயமாநா ஜடிதி தடிதிவாலக்ஷ்யதே யஸ்ய மூர்த்தி: ।
ஸோऽஸிஸ்த்ராஸாகுலாக்ஷ த்ரிதச ரிபு வபு: சோணிதாஸ்வாத த்ருப்தோ
நித்யாநந்தாய பூயான் மதுமதந மநோ நந்தநோ நந்தகோ ந: ॥

यस्य-எந்தக்கத்தியினுடைய, मूर्तिः-உருவம், जीमूतश्याम-भासा-மேகம்போல் கருநிறமுடைய, भगवद्बाहुना-பகவான் விஷ்ணுவின் கையினால், युद्धेषु-அசுரர்களுடன் நடந்த போர்களில், मुहुः-அடிக்கடி, उद्धूयमानापि-சுழட்டப்படுகிற தாக இருந்தபோதிலும், मोहयन्ती-காண்போரை மயங்கும் படி செய்துகொண்டு, झटिति-வெகு சீக்ரத்தில், तटिदिव-மின்னல்போல், आलक्ष्यते-காணப்படுகிறதோ, सः-அவ்வித மாயும், त्रासाकुलाक्ष-பயத்தினால் கலங்கிய கண்களையுடைய त्रिदशरिपु-தேவ விரோதி அசுரர்களின், वपुःशोणित-சரீரங் களிலிருந்து பெருகும் ரத்தத்தை, आस्वादतृप्तः-ருசித்துப்

பருகுவதில் திருப்திகொண்டதும், मधुमथनमनोनन्दनः–மது என்னும் அரக்கனை அழித்த விஷ்ணுவின் மனத்தை சந்தோஷப்படுத்துவதாயுமுள்ள, नन्दकःअसिः- நந்தகமென்று பெயர் பூண்ட கத்தி, नः–நமக்கு, नित्यानन्दाय–எப்பொழுதும் ஆனந்தமேற்படுவதின் பொருட்டு, (அழிவற்ற மோக்ஷரூப ஆனந்தமேற்படுவதற்கு), भूयात् -விளங்கவேண்டும்.

எதனுடைய உருவம், மேகம்போல் கருத்த காந்தியையுடைய பகவானின் புஜத்தினல் யுத்தத்தில் அடிக்கடி வேகமாக சுழட்டப் பட்ட போதிலும் யாரையும் மயங்கும்படி செய்துகொண்டு சீக்கிர மாக மின்னல் போல் காணப்படுகிறதோ அவ்விதமாயும் பயத் தினல் கலங்கிய கண்களையுடையவர்களான தேவசத்ருக்களின் சரீரத்தின் ரத்தத்தை ரஸித்துப் பருகுவதில் திருப்தியடைந்த தாயும் மதுவென்னும் அசுரனை அழித்த விஷ்ணுவின் மனதிற்கு சந்தோஷமுண்டுபண்ணுவதாயும் உள்ள நந்தகமென்னும் கட்கம் (வாள்) நமக்கு அழிவற்ற ஆனந்தத்தை உண்டுபண்ண விளங்க வேண்டும். (4)

கௌமோதகீ என்னும் கதாயுதம் :—

कम्राकारा मुरारेः करकमलतलेनानुरागाद्गृहीता
सम्यग्वृत्ता स्थिताग्रे सपदि न सहते दर्शनं या परेषाम् ।
राजन्ती दैत्यजीवासवमदमुदिता लोहितालेपनार्द्रा
कामं दीप्तांशुकान्ता प्रदिशतु दयितेवास्य कौमोदकी नः ॥

கம்ராகாரா முராரே: கரகமலதலேநாநுராகாத் க்ருஹீதா
ஸம்யக்வ்ருத்தா ஸ்திதாக்ரே ஸபதி ந ஸஹதே
தர்ஶனம் யா பரேஷாம் ।
ராஜந்தீ தைத்ய ஜீவாஸவமதமுதிதா லோஹிதா-
லேபநார்த்ரா
காமம் தீப்தாம்ஶுகாந்தா ப்ரதிஶது தயிதே
வாஸ்ய கௌமோதகீ ந: ॥

कम्राकारा–அழகிய உருவ அமைப்பையுடையதும், சரீரத்தை உடையவளும் அதனல், मुरारेः-விஷ்ணுவினுடைய करकमलतलेन–தாமரைபோன்ற உள்ளங்கைத் தலத்தினல்,

**अनुरागात्**-ஆசையோடு, **गृहीता**-பிடிக்கப்பட்டிருப்பதும், கைபிடித்து நாயகியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பவளும், **सम्यग्वृत्ता**-நன்கு உருண்டு திரண்டவடிவம் கொண்டதாயும் நல்ல நடத்தையையுடையவளும், **अग्रे स्थिता**-ஏவப்படும் காரியத்தைச் செய்ய முன்நிற்பதுமான முன்னிற்பவளுமான **या**-எது எவள், **परेषां**-பிறர்களுடைய, **दर्शनं**-பார்வையை, **सपदि**-உடனேயே, **न सहते**-ஸஹிப்பதில்லையோ ஸஹிக்க மாட்டாளோ, **सा**-அவ்விதமாயும், **दैत्यजीवासवमदमुदिता**-அஸுரர்களின் பிராணனாகிற மத்யத்தின் லாஹிரியால் ஸந்தோஷமடைந்ததும் அஸுரர்களுக்குபிராணன்போல் மிகபிரியமான மத்யத்தின் மதத்தால் இன்பமடைந்தவளும், **लोहितालेपनार्द्रा**-அஸுர ரக்தப்பூச்சினால் ஈரப்பசையுள்ளதும், சிவந்த குங்குமப் பூச்சினால் சீதளமான அவயவமுள்ளவளும், **दीप्तांशुकान्ता**-ஒளியுள்ள கிரணங்களால் அழகியதும் பளபளப்பான பட்டுவஸ்திரத்தின் ஓரங்களை உடையவளுமான, **अस्य**-விஷ்ணுவினுடைய, **राजन्ती दयितेव**-சிறப்புடன் விளங்கும் பிராண நாயகிபோல் தோன்றும், **कौमोदकी**-கௌமோதகீ என்னும் பெயர்கொண்ட கதை, **नः**-நமக்கு, **कामं**-இஷ்டத்தை **प्रदिशतु**-அளித்து அருளவேண்டும்.

[இச் சுலோகத்தில் ஷ கதை என்னும் ஆயுதம் சிலேடையாக, விஷ்ணுவின் ஆசைக்குரிய நாயகிபோல இருப்பதாக வர்ணிக்கப் படுகிறதால் பதங்கள் சிலேடையினால் இருபொருள் கொண்டவைகள்.]

அழகிய உருவத்தையுடையதும் உடையவளும் முராரியினுடைய கமலம் போன்ற கரதலத்தினால் ஆசையுடன் பிடிக்கப்பட்டதாயும் பாணிக்கிரஹணம் செய்துகொள்ளப்பட்டவளாயும் நன்கு உருண்டு திரண்ட ரூபத்தையுடையதாயும் நல்ல நடத்தையையுடையவளாயும் (ஏவப்படும் பணியை ஏற்று செய்ய) நினைத்த உடனேயே எதிரில் நிற்பதாயும் நிற்பவளாயும் சத்ருக்கள் செருக்குடன் பார்ப்பதை ஸஹிக்காததும் பிற புருஷர்கள் காண்பதை ஸஹிக்காதவளாயும் அசுரர்களின் உயிராகும் மது அருந்தி மதம் கொண்டு சந்தோஷிப்பதும் சந்தோஷிப்பவளும், ரக்தம் தோய்ந்து உரைந்திருப்பதால் நனைந்திருப்பதாயும் புதிய

சிவந்த குங்கும பூச்சுகள் கொண்டவளாயும் ஒளிவீசும் கிரணங்களால் அழகியதாயும், ஒளிக்கும் ஜரிகை பட்டு வஸ்திர தலைப்பையுடையவளும், ஆதலால் அவ்விஷ்ணுவின் ப்ராணநாயகி போல் விளங்கும் கௌமோதகீ என்னும் கதை நமக்கு எல்லாவித இஷ்டத்தையும் அளிக்கட்டும். (5)

கருடவர்ணனம் :—

यो विश्वप्राणभूतस्तनुरपि च हरेर्यानकेतुस्वरूपो
यं संचिन्त्यैव सद्यः स्वयमुरगवधूवर्गगर्भाः पतन्ति ।
चञ्चच्चण्डोरुतुण्डत्रुटितफणिवसारक्तपङ्काङ्कितास्यं
वन्दे छन्दोमयं तं खगपतिममलस्वर्णवर्णं सुपर्णम् ॥ ६ ॥

யோ விச்வ ப்ராணபூதஸ் தநுரபி ச ஹரேர் யாநகேதுஸ்வரூபோ
யம் ஸஞ்சிந்த்யைவ ஸத்ய: ஸ்வயமுரகவதூவர்க கர்பா: பதந்தி ।
சஞ்சச்சண்டோருதுண்ட த்ருடித பணி வஸாரக்த பங்காங்கிதாஸ்யம்
வந்தே சந்தோமயம் தம் ககபதிமமல ஸ்வர்ண வர்ணம் ஸுபர்ணம் ॥

यः–எந்த கருடன், विश्वप्राणभूतः–உலகமனைத்தின் ப்ராண ரூபமாகவும், हरेः–விஷ்ணுவின், तनुः–மூர்த்தியாகவும் अपि–மேலும், यानकेतुस्वरूपः च–வாஹன ரூபமாகவும் த்வஜ ரூபமாகவும் (விளங்குகிறாரோ), यं–எந்த கருடனை सञ्चिन्त्यैव–நினைப்பதினாலேயே, सद्यः–உடனேயே, उरगवधूवर्गगर्भाः–நாகப்பெண் கூட்டங்களின் கர்ப்பகோசங்கள், स्वयं–தானாகவே, पतन्ति–சிதறி விழுகின்றனவோ, तं–அவ்வித மஹிமை கொண்டவனும், चञ्चच्चण्डोरुतुण्डत्रुटित–அசையும் பயங்கரமான நீண்ட மூக்கினால் கொத்தி பிளக்கப்பட்ட, फणिवसारक्तपङ्क–ஸர்ப்பங்களின் கொழுப்பு, ரக்தம் இவைகளின் சேற்றினால் (த்ரவத்தால்), अङ्कितास्यं–அடையாளமிடப்பட்ட முகத்தையுடையவனும், छन्दोमयं–வேதஸ்வரூப

மானவனும், अमलस्वर्णवर्ण-நிர்மல சுத்த தங்கநிறங்கொண்டவனும் ஆன, सुपर्ण–(அழகிய இறக்கைகள் உடையதுபற்றி) ஸுபர்ணமென்னும் பெயருடைய, खगपतिं–பக்ஷிராஜனை கருடனை, वन्दे-நமஸ்கரிக்கிறேன்.

*எவன் உலகமனைத்திற்கும் பிராணனாகவும், விஷ்ணுவினுடைய சரீரமாகவும் (அவ்வளவு ப்ரியமானது பற்றி அவ்விதம் கூறப்படுகிறது) மேலும் விஷ்ணுவின் வாஹனமாயும் த்வஜமாகவுமுள்ள ஸ்வருபத்தை உடையவனாகவும் விளங்குகிறாரோ எவனை நினைத்த மாத்திரத்திலேயே நாக ஸ்திரீ ஸமூஹத்தின் கர்ப்ப கோசங்களிலிருந்து கர்ப்ப சிசுநாகர்கள் தானாகவே சிதறி விழுகிறார்களோ, அவ்விதமாயும் அசையும் க்ரூரமான தனது பெரிய மூக்கினால் கொத்திக்கொல்லப்படும் ஸர்ப்பங்களின் வசை (கொழுப்பு)ரத்தம்இவைகளினால் தோய்ந்த முகத்தையுடையவரும் வேதஸ்வரூபியாகவும் பரிசுத்த தங்கம்போன்ற நிறம் கொண்டவனாகவும் உள்ள பக்ஷிராஜனை கருடனை நமஸ்கரிக்கிறேன். (6)*

**அனந்தன் (ஆதிசேஷன்):—**

**विष्णोर्विश्वेश्वरस्य प्रवरशयनकृत्सर्वलोकैकधर्ता**
**सोऽनन्तः सर्वभूतः पृथुविमलयशाः सर्ववेदैश्च वेद्यः।**
**पाता विश्वस्य शश्वत्सकलसुररिपुध्वंसनः पापहन्ता**
**सर्वज्ञः सर्वसाक्षी सकलविषभयात्पातु भोगीश्वरो नः॥**

விஷ்ணோர் விச்வேச்வரஸ்ய ப்ரவர ஶயந க்ருத்
ஸர்வலோகைக தர்த்தா
ஸோऽநந்த: ஸர்வபூத: ப்ருதுவிமலயஶா: ஸர்வ
வேதைச்ச வேத்ய: ।
பாதா விச்வஸ்ய ஶச்வத் ஸகல ஸுரரிபு த்வம்ஸந:
பாபஹந்தா
ஸர்வக்ஞ: ஸர்வஸாக்ஷீ ஸகல விஷபயாத் பாது
போகீச்வரோ ந: ॥

विश्वेश्वरस्य–உலகிற்கதிபதியான, विष्णोः-விஷ்ணுவிற்கு प्रवरशयनकृत्–உயர்ந்த படுக்கையாக ஆனவரும், सर्वलोकैक-

**धर्ता**-எல்லா உலகங்களையும் தானொருவனாகவே தாங்கி தரிக்கிறவரும், **सर्वभूतः**-எல்லாமாக இருப்பவரும், **पृथुविमल-यशाः**-விசால நிர்மல புகழ் கொண்டவரும், **सर्ववेदैश्च**-எல்லா வேதங்களினாலும், **वेद्यः**-அறியத்தக்கவரும், **विश्वस्य पाता**-உலகத்தை ரக்ஷிப்பவரும், **सकलसुररिपुध्वंसनः**-எல்லா தேவ சத்ருக்களையும் அழிக்கிறவரும், **पापहन्ता**-பாபங்களைப் போக்குகிறவரும், **सर्वज्ञः**-எல்லாமறிந்தவரும், **सर्वसाक्षी**-எல்லாவற்றையும் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருப்பவருமான, **सः**-அந்த, **अनन्तः**-அனந்தன் என்று பெயர் கொண்ட, **भोगीश्वरः**-ஸர்ப்ப அரசன், **नः**-நம்மை, **सकलविष-भयात्**-எல்லாவிதமான விஷங்களிலிருந்து ஏற்படும் பயத்திலிருந்து, **शश्वत्**-எப்பொழுதும், **पातु**-காக்கவேண்டும்.

உலகிற்குத் தலைவரான பகவான் விஷ்ணுவிற்கு சயனிக்க உயர்ந்த படுக்கையாக விளங்குபவனும், ஒருவனாகவே எல்லா உலகங்களையும் (தனது ஆயிரம் தலைகளினால்) தரிப்பவனும் அந்தமற்றவனும், எல்லா வஸ்துவாக இருப்பவனும், சிறந்த பெரும் புகழ் உடையவனும் எல்லா வேதங்களினாலும் அறியத் தக்கவனும் உலகமனைத்தையும் ரக்ஷிப்பவனும் எல்லா அசுரர் களையும் அழிப்பவனும் எல்லாப்பாபங்களையும் போக்குகிறவனும் ஸர்வக்ஞனும், ஸர்வ ஸாக்ஷியாயும் இருக்கிற ஸர்ப்ப அரசனை ஆதிசேஷன் நம்மை எல்லாவித விஷபயத்திலிருந்தும் எப்பொழுதும் காப்பாற்றுவாராக. (7)

**லக்ஷ்மீ தேவி :—**

**वाग्भूगौर्यादिभेदैर्विदुरिह मुनयो यां यदीयैश्च पुंसां**
**कारुण्यार्द्रैः कटाक्षैः सकृदपि पतितैः संपदः स्युः समग्राः ।**
**कुन्देन्दुस्वच्छमन्दस्मितमधुरमुखाम्भोरुहां सुन्दराङ्गीं**
**वन्दे वन्द्यामशेषैरपि मुरभिदुरोमन्दिरामिन्दिरां ताम् ॥ ८ ॥**

வாக்பூ கௌர்யாதிபேதைர் விதுரிஹ முநயோ யாம்
யதீயைச்ச பும்ஸாம்
காருண்யார்த்ரை: கடாக்ஷை: ஸக்ருதபி பதிதை: ஸம்பத:
ஸ்யு: ஸமக்ரா: ।

குந்தேந்து ஸ்வச்ச மந்தஸ்மித மதுர முகாம்போருஹாம் ஸுந்தராங்கீம்
வந்தே வந்த்யாமசேஷைரபி முரபிதுரோமந்திராமிந்திராம் தாம் ॥

मुनयः-உண்மை கண்ட முனிவர்கள், यां-எவளை, इह-இவ்வுலகில், वाग्भूगौर्यादिभेदैः-ஸரஸ்வதீ பூமி, கௌரீ முதலிய உருவபேதங்களாக, विदुः— அறிகிறார்களோ (லக்ஷ்மீதேவியே அவ்வித பல உருவங்களுடன் விளங்குகிறாள் என்பது கருத்து). सकृदपि-ஒரு தடவையாவது, पतितैः-விழுகிற, कारुण्यार्द्रैः-கருணை நிரம்பிய, यदीयैःकटाक्षैः-எந்த லக்ஷ்மீ தேவியினுடையதான கடாக்ஷங்களினால், पुंसां-மனிதர்களுக்கு, समग्राः-பூர்ணமான, संपदः-ஐசுவர்யங்கள், स्युः-ஏற்படுமோ, तां-அவ்வாறான, कुन्देन्दुस्वच्छमन्दस्मितमधुर-குந்த புஷ்பம், சந்திரன்போல் நிர்மல மந்தஹாஸத்தினால் அழகிய, मुखाम्भोरुहां-முககமலத்தையுடையவளும், सुन्दराङ्गीं-அழகிய சரீரமுடையவளும், अशेषैरपि-எல்லோராலும், वन्द्यां-நமஸ்கரிக்கத்தக்கவளும், मुरभिदुरोमन्दिरां-விஷ்ணுவின் மார்பைத் தனது திருமாளிகையாகக்கொண்டவளுமான इन्दिरां-லக்ஷ்மீ தேவியை, वन्दे-நமஸ்கரிக்கிறேன்.

முனிபுங்கவர்கள் எந்த லக்ஷ்மீதேவதையையே அவளது அம்சமாக விளங்கும் ஸரஸ்வதீ, பூமி, கௌரீ முதலிய பல உருவங்கொண்டவளாகக் கூறுகிறார்களோ! ஒரு தடவையாவது மனிதர்களின் மேல் விழும், கருணைபொழியும் அவளது கடைக்கண் பார்வைகளால் மனிதர்களுக்கு எல்லாவித ஸம்பத்துக்களும் ஏற்படுமோ, அவ்வித மஹிமை கொண்டவளும் குந்த புஷ்பம், சந்திரன் இவைபோல் நிர்மலமான மந்தஹாஸத்தினால் அழகிய முககமலத்தையுடையவளும், அழகிய சரீரமுடையவளும், எல்லோராலும் நமஸ்கரிக்கத் தக்கவளும், விஷ்ணுவின் மார்புப் பிரதேசத்தை தனது திருமாளிகையாகக் கொண்டவளுமாக விளங்கும் லெக்ஷ்மீதேவியை வணங்குகிறேன். (8)

பூதேவி :—

या सूते सत्त्वजालं सकलमपि सदा संनिधानेन पुंसो
धत्ते या तत्त्वयोगाच्चरमचरमिदं भूतये भूतजातम् ।

धात्रीं स्थात्रीं जनित्रीं प्रकृतिमविकृतिं विश्वशक्तिं विधात्रीं
विष्णोर्विश्वात्मनस्तां विपुलगुणमयीं प्राणनाथां प्रणौमि ॥

யா ஸூதே ஸத்வஜாலம் ஸகலமபி ஸதா ஸந்நிதானேன
பும்ஸோ
தத்தே யா தத்வயோகாச்சரமசரமிதம் பூதயே பூதஜாதம் ।
தாத்ரீம் ஸ்தாத்ரீம் ஜநித்ரீம் ப்ரக்ருதிமவிக்ருதிம்
விச்வசக்திம் விதாத்ரீம்
விஷ்ணோர் விச்வாத்மநஸ்தாம் விபுலகுணமயீம் ப்ராண
நாதாம் ப்ரணௌமி ॥

या-எவள், पुंसः-பரமபுருஷனை விஷ்ணுவினுடைய सन्निधाने-ஸந்நிதிமாத்திரத்திலேயே (நிமித்தமாக வைத்துக்கொண்டு), सकलमपि-ஸமஸ்தமான, सत्वजालं-பொருள் கூட்டமான உலகை, सदा-எப்பொழுதும், सूते-சிருஷ்டிக்கிருளோ, या-எவள், चरमचरं-அசையும் அசையாத இருவித इदं-இந்த, भूतजातं-வஸ்துக்கூட்டமான உலகை, भूतये-க்ஷேமத்தை உத்தேசித்து, तत्वयोगात्-உண்மை பொருளான விஷ்ணுவின் ஸந்நிதான சம்பந்தத்திலேயே, धत्ते-தரித்து ரக்ஷித்துக்கொண்டிருக்கிருளோ, जनित्रीं-(இவ்வாறு) சிருஷ்டி செய்கிறவளும், स्थात्रीं-நிலைத்து இருப்பவளும், धात्रीं-போஷிப்பவளும், प्रकृतिं-மூலப்ரக்ருதி ரூபமானவளும், अविकृतिं-விகாரமற்றவளும், विश्वशक्तिं-எல்லா சக்தியையும், विधात्रीं-நியமனம் செய்பவளும், विश्वात्मनः-உலகமனைத்தையும் தனது உருவமாகக்கொண்ட, உலகமனைத்திற்கும் ஆத்மாவாக விளங்கும், विष्णोः-விஷ்ணுவினுடைய, प्राणनाथां-உயிர்க்காதலியாகவும், विपुलगुणमयीं-விஸ்தாரமான தயை தாக்ஷிண்யம் அன்பு முதலிய நற்குணமயமாகவும் உள்ள, तां-அந்த பூதேவியை प्रणौमि-பக்தி சிரத்தையுடன் நன்கு நமஸ்கரிக்கிறேன்.

எவள் (மூலப்ரகிருதிரூபமாக இருந்துகொண்டு) பரமபுருஷனை விஷ்ணுவினுடைய, ஸன்னிதான மாத்ரத்திலே எல்லா வஸ்துக் கூட்டமயமான உலகத்தை எப்பொழுதும் உண்டுபண்ணு

கிறுளோ, அவ்விதமே பரம தத்வ ரூபியான பரமபுருஷனின் சேர்க்கையினல் (அல்லது எல்லாவித ஐச்வர்யமும் படைத்திருப் பதால்) பிராணிகளின் க்ஷேமத்தைக் கருதி ஸ்தாவர ஜங்கம ரூபமான ஜீவராசிகளைப் போஷிக்கிறுளோ; அவ்வித மஹிமை பொருந்தியவளும் உலகைப் படைப்பவளும், போஷிப்பவளும் அழிவற்று என்றும் விளங்குபவளும், மூலப்ரகிருதி ரூபமான வளும் எவ்வித விகாரமுமற்றவளும் எல்லா சக்திகளையும் நியமிப் புவளும் பரந்த அனந்த நற்குணங்கள் நிரம்பியவளும் உலகத் திற்கு அந்தராத்மாவான (உலக மயமான) விஷ்ணுவின் உயிர்க் காதலியாகவும் உள்ள பூதேவியை நமஸ்கரிக்கிறேன். (9)

பகவத் பாத தூளிகள்:—

येभ्योऽसूयद्भिरुच्चैः सपदि पदमुरु त्यज्यते दैत्यवर्गै-
येभ्यो धर्तुं च मूर्ध्ना स्पृहयति सततं सर्वगीर्वाणवर्गः ।
नित्यं निर्मूलयेयुर्निचिततरममी भक्तिनिघ्नात्मनां नः
पद्माक्षस्याङ्घ्रिपद्मद्वयतलनिलयाः पांसवः पापपङ्कम् ॥

யேப்யோऽஸூயத்பிருச்சை: ஸபதி பதமுரு த்யஜ்யதே
தைத்யவர்கைர்
யேப்யோ தர்தும் ச மூர்த்நா ஸ்ப்ருஹயதி ஸததம் ஸர்வ
கீர்வாணவர்க: 1
நித்யம் நிர்மூலயேயுர் நிசிததரமமீ பக்தி நிக்நாத்மநாம் ந:
பத்மாக்ஷஸ்யாங்க்ரிபத்மத்வயதல நிலயா: பாம்ஸவ:
பாபபங்கம் 11

येभ्यः—எந்த பகவானின் பாததூளிகளிடம், असूयद्भिः— அசூயை கொண்ட, दैत्यवर्गैः—அஸுரக் கூட்டங்களினல், सपदि-அசூயை கொள்ளும் க்ஷணமே, उच्चैः ऊरुपदं—உயர்ந்த சிறந்த பதவி, त्यज्यते—விடப்படுகிறதோ, सर्वगीर्वाणवर्गः— எல்லா தேவக்கூட்டமும், सततं—எப்பொழுதும், मूर्ध्ना-சிரசால் (சிரசில்), धर्तुं च—தரித்துக்கொள்வதற்கு, येभ्यः—எந்த தூளி களை, स्पृहयति-விரும்புகிறதோ, अमी—அவ்விதமான, पद्माक्षस्य अंघ्रिपद्मद्वयतलनिलयाः-தாமரைக் கண்ணன் விஷ்ணு வினுடைய, இருபாதகமல அடித்தலத்தை இருப்பிடமாகக்

கொண்ட, **पांसवः**-தூளிகள், **नित्यं भक्तिनिघ्नात्मना**-எப்பொழுதும் பக்தி பரவசமான மனதையுடைய, **नः**-நம்முடைய, **निचिततरं**-வெகுகாலமாக சேர்த்துவைக்கப்பட்டுள்ள, **पापपङ्कं**-பாபரூபமான சேற்றை, **निर्मूलयेयुः**-அழிக்கட்டும்.

எவைகளிடம் (பகவத் பாதங்களில் படிந்திருக்கும் தூளிகளிடம்) பொருமை கொள்ளும் அசுரர்கள் உடனேயே தங்களது உயர்ந்த பதவிகளைத் துறந்துவிட்டு பயந்து ஓடுகிருர்களோ, எல்லா தேவக்கூட்டமும் எப்பொழுதும் தங்கள் சிரஸ்ஸில் பக்தி மேலீட்டால் எவைகளை தரிக்க விரும்புகிறதோ; அவ்விதமான செந்தாமரைக் கண்ணனின் திருவடிக் கமலங்களில் இடம் கொண்ட இந்த தூளிகள் பக்தியில் ஈடுபட்ட மனதையுடைய நம்முடைய வெகுகாலமாக விடாமல் ஒட்டியிருக்கும் பாபமாகும் சேற்றை, பிறகு எப்பொழுதும் சேரவிடாமல் அழிக்கவேண்டும்.

பாதங்களில் விளங்கும் ரேகைகள்:—

रेखा लेखादिवन्द्याश्चरणतलगताश्चक्रमत्स्यादिरूपाः
स्निग्धाः सूक्ष्माः सुजाता मृदुललिततरक्षौमसूत्रायमाणाः ।
दद्युर्नो मङ्गलानि भ्रमरभरजुषा कोमलेनाब्जिजायाः
कम्रेणाम्रेड्यमानाः किसलयमृदुना पाणिना चक्रपाणेः ॥

ரேகா லேகாதி வந்த்யாச் சரணதலகதாச் சக்ர
மத்ஸ்யாதிரூபா:
ஸ்நிக்தா: ஸூக்ஷ்மா: ஸுஜாதா ம்ருது லலிததர க்ஷௌம
ஸூத்ராயமாணு: ।
தத்யுர் நோ மங்களானி ப்ரமர பர ஜுஷா
கோமலேநாப்தி ஜாயா:
கம்ரேணும்ரேட்யமாநா: கிஸலய ம்ருதுநா பாணிநா
சக்ரபாணே: ॥

**लेखादिवन्द्याः**—தேவர்கள் முதலானவர்களினுல் நமஸ்கரிக்கத்தக்கவைகளும், **चक्रमत्स्यादिरूपाः**—சக்ரம், மத்ஸ்யம் முதலியவற்றின் ரூபமுடையவைகளும், **स्निग्धाः**—அழகுடையவைகளும், **सूक्ष्माः**—மெல்லிய கோடு ரூபங்களாகவும்,

**सुजाताः**-நன்கு சுபலக்ஷணம் கொண்டவைகளாகவும், **मृदु-ललिततरक्षौमसूत्रायमाणाः**-மிருதுவாயும் மிக அழகுவாய்ந்தவைகளுமான, பட்டு நூல்கள்போல் காணப்படுகின்றனவைகளும், **अब्धिजायाः**-பாற்கடலிலிருந்து பிறந்த லக்ஷ்மீ தேவியின், **कोमलेन**-மழமழப்பானதும், **कम्रेण**-அழகியதும், **किसलयमृदुना**-இளந்தளிர்போல் மிருதுவாயும், **भ्रमरभरजुषा**-(தாமரைப் புஷ்பமென பிரமித்து வந்த) வண்டுக் கூட்டம் சூழ்ந்துகொண்டதுமான, **पाणिना**-கையினுல், **आम्रेड्यमानाः**-இரட்டிப்பாக்கப்பட்டவைகளுமான, **चक्रपाणेः**-விஷ்ணுவினுடைய, **चरणतलगताः**-பாதங்களின் அடித்தலத்தில் காணப்படும், **रेखाः**-ரேகைகள், **नः**-நமக்கு, **मङ्गलानि**-மங்களங்களை, **दद्युः**-கொடுத்து அருள் செய்யவேண்டும்.

(தாமரைமலர் போலிருப்பதால்) வண்டுக்கூட்டத்தால் சூழப்பட்டதும் அழகியதும், தளிர்போல் மிருதுவாயுமுள்ள லக்ஷ்மீ தேவியின், கையினுல் திரும்ப இரட்டிப்பாக்கப்பட்டவைகளாக தோன்றுவதும் (லக்ஷ்மீ தேவியின் கையிலும் அவ்வித ரேகைகள் இருப்பதுபற்றி, லக்ஷ்மீதேவி விஷ்ணுவின் பாத கமலங்களைத் தன் கையினுல் பிடித்து சேவிக்கும்போது விஷ்ணுவின் திருவடிகளின் ரேகைகள் இரட்டித்தவைகளாகத் தோன்றுகின்றன) தேவர்கள் முதலியவர்களால் வணங்கப்படுபவைகளும், சக்ரம் மத்ஸ்யம் முதலிய உருவங்கொண்டவைகளும் அழகியதுகளும், மெல்லியதுகளும் நன்கு அமைந்ததுகளும், மெல்லிய அழகிய பட்டு நூல்கள்போல் காணப்படுபவைகளும் சக்ரபாணி விஷ்ணுவின் திருவடிகளின் அடிபிரதேசத்தில் காணப்படுபவைகளுமான ரேகைகள், நமக்கு மங்களங்களை அளிக்கவேண்டும். (11)

பாதகமலங்கள்:—

यस्मादाक्रामतो द्यां गरुडमणिशिलाकेतुदण्डायमाना-

दाश्च्योतन्ती बभासे सुरसरिदमला वैजयन्तीव कान्ता ।

भूमिष्ठो यस्तथान्यो भुवनगृहबृहत्स्तम्भशोभां दधौ नः

पातामेतौ पयोजोदरललिततलौ पङ्कजाक्षस्य पादौ ॥ १२ ॥

யஸ்மாதாக்ராமதோ த்யாம் கருடமணி ஶிலா கேது
தண்டாயமாநா-
தாச்ச்யோதந்தீ பபாஸே ஸுரஸரிதமலா வைஜயந்தீவ
காந்தா 1
பூமிஷ்ட்டோ யஸ்ததாந்யோ புவந க்ருஹ ப்ருஹத் ஸ்தம்ப
ஶோபாம் தத்தௌ ந:
பாதாமேதௌ பயோஜோதர லலிததலௌ பங்கஜாக்ஷஸ்ய
பாதௌ 11

द्यां-ஆகாயத்தை, आक्रामतः-(திரிவிக்ரமாவதாரத்தில் அளக்க) ஆக்ரமித்ததாயும், गरुडमणिशिलाकेतुदण्डायमानात्-மரகதக்கல்லினுல் செய்யப்பட்ட த்வஜஸ்தம்பம்போல் விளங்குகிறதாயும் உள்ள, यस्मात्-எந்த பாதத்திலிருந்து, आश्च्योतन्ती-பெருகுகிற, अमला-நிர்மலமான, सुरसरित्-தேவகங்கை कान्ता-அழகிய, वैजयन्तीव-வைஜயந்தீ என்னும் பாவட்டக் கொடித்துணிபோல், बभासे-விளங்கிற்றே, तथा-அவ் விதம், भूमिष्ठः-பூமியின்மேல் இருந்த, अन्यः-மற்றொரு, यः-எந்த பாதம், भुवनगृहबृहत्स्तम्भशोभां-உலகமென்னும் கிருஹத்தைத் தாங்கி நிற்கும் நடுவிலுள்ள பெருந்தூணினுடைய அழகை, दधौ-தரித்ததோ, एतौ-இந்தவிதமாயும், पयोजोदरललिततलौ-தாமரை மலரின் உள்பிரதேசம்போல் மிருதுவான அடிப்புறத்தை உடையதுகளுமான, पङ्कजाक्षस्य पादौ-தாமரைக் கண்ணன் விஷ்ணுவினுடைய இருபாதங்களும், नः-நம்மை, पाताम्-ரக்ஷிக்கவேண்டும்.

(த்ரிவிக்ரமாவதார சமயம்) ஆகாயமளந்ததாயும் மரகத மணியிணைமைத்த, த்வஜஸ்தம்பம்போல் தோன்றுவதுமான எந்த ஒருபாதத்திலிருந்து பெருகிவரும் நிர்மல கங்கை, அழகிய த்வஜ படம்போல் விளங்கிற்றே. அவ்விதமே பூமியின்மேல் நின்ற மற்றொரு பாதம், ப்ரஹ்மாண்டமாகிற பெரிய வீட்டின் மத்தியில் நாட்டப்பட்ட ஓர் ஆதார ஸ்தம்பத்தின் அழகை தரித்ததோ, அவ்விதமான தாமரை மலர்களின் உட்புறம்போல் மிருதுவான அடிப்புறத்தையுடைய ஸ்ரீ செந்தாமரைக்கண்ணனின் இந்த இருபாதங்களும் நம்மை ரக்ஷிக்கவேண்டும்.

('இந்த இருபாதங்கள்' என்று கூறுவது பக்திமேலீட்டால் தியானம் செய்யும் சமயம் ப்ரத்யக்ஷமாக எதிரில் காணப்படுவது பற்றி) (12)

आक्रामद्भ्यां त्रिलोकीमसुरसुरपती तत्क्षणादेव नीतौ
यान्यां वैरोचनीन्द्रौ युगपदपि विपत्संपदोरेकधाम ।
ताभ्यां ताम्रोदराभ्यां मुहुरहमजितस्याश्रिताभ्यामुभाभ्यां
प्राज्यैश्वर्यप्रदाभ्यां प्रणतिमुपगतः पादपङ्केरुहाभ्याम् ॥ १३ ॥

ஆக்ராமத்ப்யாம் த்ரிலோகீமஸுர ஸுரபதீ தத்க்ஷணாதேவ நீதௌ
யாப்யாம் வைரோசநீந்த்ரௌ யுகபதபி விபத் ஸம்பதோரேகதாம ।
தாப்யாம் தாம்ரோதராப்யாம் முஹுரஹமஜிதஸ்யாஞ்சிதாப்யாமுபாப்யாம்
ப்ராஜ்யைச்வர்ய ப்ரதாப்யாம் ப்ரணதிமுபகத: பாத பங்கேருஹாப்யாம் ॥

त्रिलोकीं–முவ்வுலகங்களையும், आक्रामद्भ्यां–வியாபிக்கிறதுகளான, याभ्यां–எந்த இருபாதகமலங்களினால் तत्क्षणादेव–அந்த க்ஷணத்திலேயே, युगपत्–சேர்ந்தாற்போலவே, असुरसुरपती–அசுர அரசனும் தேவராஜனுமான, वैरोचनीन्द्रौ–பலியும் இந்திரனும், विपत्संपदोरपि–ஆபத்தினுடையவும் ஸம்பத்தினுடையவும், एकधाम–ப்ரதான இடமாகிற பாதாளத்தையும் ஸ்வர்க்கத்தையும், नीतौ–அடைவிக்கப்பட்டார்களோ, ताभ्यां–அந்தவிதங்களாயும், ताम्रोदराभ्यां–சிவந்த அடிப்புறத்தையுடையதுகளும், अश्रिताभ्यां–ஒன்றோடொன்று இணைந்து அழகுகொண்டதுகளாயும், प्राज्यैश्वर्यप्रदाभ्यां–அதிக ஐசுவரியத்தை அளிப்பவைகளுமான, अजितस्य–எவராலும் ஜயிக்கப்படாத விஷ்ணுவினுடைய, उभाभ्यां–இரு, पादपङ्केरुहाभ्यां–பாதகமலங்களின் பொருட்டு, अहं–நான், मुहुः–அடிக்கடி, प्रणतिं–நமஸ்கரிப்பதை उपगतः–அடைந்தவனாக (செய்பவனாக), अस्मि–இருக்கிறேன்.

மூன்று உலகங்களையும் வியாபிக்கிறதுகளான எந்தத் திருவடி கமலங்களால், அந்த க்ஷணத்திலேயே அசுரத் தலைவனை பலி சக்ரவர்த்தி தேவத்தலைவனை இந்திரன் இவ்விருவர்களும் சேர்ந்தால்போலவே முறையே ஆபத்துக்களுக்கு இருப்பிடமான பாதாள லோகத்தையும், ஸம்பத்துக்களுக்கு இருப்பிடமான ஸ்வர்க்க லோகத்தையும் அடையும்படி செய்யப்பட்டார்களோ. (தேவர்களை ஜயித்து ஸ்வர்க்கத்தை கைப்பற்றி மூவுலகையும் ஆண்டுவந்த பலி சக்ரவர்த்தியை நிக்ரஹம் செய்து பாதாளத்திற்கு அனுப்பி தனது பக்தனை இந்திரனுக்கு ஸ்வர்க்கத்தைத் திரும்பக் கொடுத்து ரக்ஷிக்க எடுத்தது வாமனவதாரம்) அம் மஹிமை கொண்டதுகளும், சிவந்த அடிப்புறத்தையுடையதுகளும், ஒன்றோடொன்று இணைந்திருப்பதுகளும் பக்தர்களுக்கு மிக்க அதிக ஐச்வர்யத்தை அளிப்பதுகளுமான விஷ்ணுவுடைய அவ்விரு திருவடி கமலங்களின்பொருட்டு நான் தண்டமிட்டு வணங்குவதை மேற்கொண்டுள்ளேன். (13)

येभ्यो वर्णश्चतुर्थश्चरमत उदभूदादिसर्गे प्रजानां
साहस्री चापि संख्या प्रकटमभिहिता सर्ववेदेषु येषाम् ।
व्याप्ता विश्वंभरा यैरतिविततनोर्विश्वमूर्तेर्विराजो
विष्णोस्तेभ्यो महद्भ्यः सततमपि नमोऽस्त्वंघ्रिपंकेरुहेभ्यः ॥

யேப்யோ வர்ணச்சதுர்த்தச்சரமத உதபூதாதிஸர்கே
ப்ரஜாநாம்
ஸாஹஸ்ரீ சாபி ஸங்க்யா ப்ரகடமபிஹிதா ஸர்வவேதேஷு
யேஷாம் ।
வ்யாப்தா விச்வம்பரா யைரதிவிததநோர் விச்வமூர்த்தேர்
விராஜோ
விஷ்ணோஸ் தேப்யோ மஹத்ப்ய: ஸததமபி
நமோ ऽஸ்த்வங்க்ரி பங்கேருஹேப்ய: ॥

**प्रजानां**–பிராணிகளை, **आदिसर्गे**–முதன் முதலில் சிருஷ்டிக்கும் சமயம், **येभ्यः**–எந்த பாதங்களிலிருந்து, **चतुर्थो वर्णः**–நான்காவதான வர்ணம், **चरमतः**–கடைசியில், **उदभूत्**–உண்டாயிற்றோ, **येषां**–எந்த பாதங்களுடைய, **संख्या चापि**–எண்ணிக்கையும், **साहस्री**–ஆயிரமாக, **सर्ववेदेषु**–எல்லா

வேதங்களிலும், प्रकटं-தெளிவாக, अभिहिता-கூறப்பட்டுள்ளதோ, अतिविततनोः-மிக்க விசாலமான சரீரங் கொண்டவரும், विश्वमूर्तेः-உலகத்தையே தனது உருவமாக் உடையவருமான், विराजः-விராட் புருஷரூபியான பகவானுடைய, यैः-எந்த பாதங்களினுல், विश्वम्भरा-பூமி முழுவதும், व्याप्ता-வ்யாபிக்கப்பட்டதோ, विष्णोः-விஷ்ணுவினுடைய तेभ्यः-அவ்வித மஹிமையுடைய, महद्भ्यः-பூஜிக்கத்தக்க, अंघ्रिपङ्केरुहेभ्यः-பாதகமலங்களின் பொருட்டு, सततमपि-எப்பொழுதுமே, नमः-நமஸ்காரம், अस्तु-ஏற்படவேண்டும்.

*பிரஜைகளை முதன் முதலில் சிருஷ்டிக்கும் சமயம் நான்காவது வர்ணம் எவைகளிலிருந்து கடைசியில் உண்டாயிற்றோ ("पद्भ्याँ शूद्रो अजायत") எல்லா வேதங்களிலும் எவைகளின் எண்ணிக்கை ஆயிரம் (அநந்தம்) என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளதோ (புருஷஸூக்தம் போன்ற பாகங்களில் "सहस्राक्षः सहस्रपात्" என்றவாறு) உலகமனைத்தையும் தனது சரீரமாகக் கொண்டவனும் எங்கும் வியாபித்த உடலையுடையவனுமான விராட் புருஷன் எனக்கூறப்படும் விஷ்ணுவினுடைய, பூமி முழுவதையும் வியாபித்த பெரும் மஹிமைகொண்ட திருவடி கமலங்களின் பொருட்டு எப்பொழுதும் வணங்குவது இருக்க வேண்டும்.* (14)

திருவடி விரல்கள் :—

**विष्णोः पादद्वयाग्रे विमलनखमणिभ्राजिता राजते या**
**राजीवस्येव रम्या हिमजलकणिकालंकृताग्रा दलाली ।**
**अस्माकं विस्मयार्हाण्यखिलजनमनःप्रार्थनीयानि सेयं**
**दद्यादाद्यानवद्या ततिरतिरुचिरा मङ्गलान्यङ्गुलीनाम् ॥**

விஷ்ணோ: பாதத்வயாக்ரே விமல நகமணி ப்ராஜிதா
ராஜதே யா
ராஜீவஸ்யேவ ரம்யா ஹிமஜலகணிகாலங்க்ருதாக்ரா தளாளீ।
அஸ்மாகம் விஸ்மயார்ஹாண்யகில ஜநமந: ப்ரார்த்தநீயாநி
ஸேயம்
தத்யாதாத்யாநவத்யா ததிரதிருசிரா
மங்களாந்யங்குளீநாம் ||

विष्णोः—விஷ்ணுவினுடைய, पादद्वयाग्रे—இருபாதங்களின் நுனியில், विमलनखमणिभ्राजिता—நிர்மலமான ரத்னங்கள் போன்ற நகங்களினால் ப்ரகாசிக்கிற, या—எந்த விரல்களின் வரிசை, हिमजलकणिकालङ्कृताग्रा—பனி ஜலத்திவிலைகளினால் அழகுறச்செய்யப்பட்ட முன்பாகத்தையுடையதும், रम्या—அழகானதுமான, राजीवस्य दलालीव—தாமரை மலரின் இதழ் வரிசைபோல, राजते—விளங்குகிறதோ, आद्या—முதன்மையானதும், अनवद्या—தோஷமற்றதாயும், अतिरुचिरा—நன்கு ப்ரகாசிக்கிறதாயும் உள்ள, सेयं—அந்த விதமான இந்த (மனதில் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிற), अङ्गुलीनां ततिः—விரல்களின் வரிசை, अस्माकं—நமக்கு, अद्य—இப்பொழுது, विस्मयार्हाणि—ஆச்சர்யப்படத்தக்கவைகளும், अखिलजनमनःप्रार्थनीयानि—எல்லா ஜனங்களின் மனதினாலும் வேண்டத்தக்கவைகளுமான, मङ्गलानि—மங்களங்களை, दद्यात्—கொடுத்து அருளவேண்டும்.

ஸ்ரீ விஷ்ணுவின் இருபாதங்களின் நுனியில் நிர்மலமான முத்து மணிகள் போல் ப்ரகாசிக்கும் நகங்களினால் அழகு வாய்ந்து பனி நீர் திவிலைகளால் அழகுவாய்ந்த நுனிகளையுடைய தாமரை மலரின் அழகிய இதழ் அடுக்கைப்போல் எது விளங்குகிறதோ, அவ்விதமாயும் முதன்மையானதாயும் தோஷமற்றதாயும், மிக்க ஒளிக்கிறதாயும் உள்ள விரல்களின் வரிசை ஆச்சர்யப்படத்தக்கதாயும் எல்லா ஜனங்களின் மனதுகளால் பிரார்த்திக்கத்தக்கதாயும் உள்ள எல்லா மங்களங்களையும் கொடுக்கவேண்டும். (15)

நக வரிசைகள்:—

यस्यां दृष्ट्वामलायां प्रतिकृतिममराः संभवन्त्यानमन्तः
सेन्द्राः सान्द्रीकृतेर्ष्यास्त्वपरसुरकुलाशंकयातंकवन्तः ।
सा सद्यः सातिरेकां सकलसुखकरीं संपदं साधयेन्न-
श्चञ्चच्चार्वंशुचक्रा चरणनलिनयोश्चक्रपाणेर्नखाली ॥ १६ ॥

யஸ்யாம் த்ருஷ்ட்வாமலாயாம் ப்ரதிக்ருதிமமரா:
ஸம்பவந்த்யாநமந்த:

ஸேந்த்ரா: ஸாந்த்ரீக்ருதேர்ஷ்யாஸ்த்வபர ஸுர
குலாஸங்கயாதங்கவந்த: 1
ஸா ஸத்ய: ஸாதிரேகாம் ஸகல ஸுககரீம் ஸம்பதம்
ஸாதயேந்ந:
சஞ்சச்சார்வம்சுசக்ரா சரண நளிநயோச் சக்ரபாணேர்
நகாளீ 11

आनमन्तः – (பாதங்களில்) வணங்கிக்கொண்டிருக்கும், सेन्द्राः अमराः–இந்திரனுடன்கூடிய தேவர்கள், अमलायां–நிர்மலமான, यस्यां–எந்த நகவரிசையில், प्रतिकृतिं–தங்கள் ப்ரதிபிம்ப உருவத்தை, दृष्ट्वा–பார்த்து, अपरसुरकुलाशङ्कया–தங்களைத்தவிர வேறு தேவக்கூட்டம் என்ற சிந்தையினால் सान्द्रीकृतेर्ष्याः–வலுத்த்தான பொருமையுடையவர்களாக ஆகி, आतङ्कवन्तः–(போட்டி தேவர்கள் ஏற்பட்டுவிட்டதாக எண்ணி) பயம் கொண்டவர்களாக, संभवन्ति–ஆகிறார்களோ, सा–அவ்விதமானதும், चञ्चच्चार्वंशुचक्रा-மின்னுகிற அழகிய காந்தி மண்டலத்தையுடையதுமான, चक्रपाणेः–கையில் சக்ரம் ஏந்திய விஷ்ணுவின், चरणनलिनयोः–பாத கமலங்களின், नखाली–நக வரிசை, सकलसुखकरीं-எல்லாவித சுகங்களையும் உண்டுபண்ணுவதும், सातिरेकां-மிக்க அதிகமானதுமான, संपदं–ஐசுவரியத்தை, नः–நமக்கு, सद्यः–உடனேயே (தியானித்த காலத்திலேயே தாமதமின்றி), साधयेत् –உண்டுபண்ண அருளவேண்டும்.

விஷ்ணுவின் திருவடிகளில் வணங்கும் இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் நிர்மலமான எந்த நக வரிசையில் தங்களது பிரதிபிம்பத்தைக் கண்டு மற்றொரு தேவக் கூட்டம் உண்மையில் உள்ளதோ என சந்தேகம்கொண்டு பயமடைந்தவர்களாகவும், பொருமைகொண்டவர்களாகவும் ஆகிறார்களோ அவ்விதமாயும், ப்ரகாசிக்கும் அழகிய கிரணமண்டலங்களை வெளியிடுவதுமான சக்ரபாணி ஸ்ரீ விஷ்ணுவின் பாத கமலங்களின் நக வரிசை எல்லா சுகங்களையும் உண்டுபண்ணுவதும் உயர்வுடையதுமான ஸம்பத்தை நமக்கு உடனே உண்டுபண்ணவேண்டும். (16)

கணுக்கால்:—

पादाम्भोजन्मसेवासमवनतसुरव्रातभास्वत्किरीट-
प्रत्युप्तोच्चावचाश्मप्रकरकरगणैश्चित्रितं यद्विभाति ।
नम्राङ्गानां हरेर्नो हरिदुपलमहाकूर्मसौन्दर्यहारि-
च्छायं श्रेयःप्रदायि प्रपदयुगमिदं प्रापयेत्पापमन्तम् ॥ १७ ॥

பாதாம்போஜந்ம ஸேவா ஸமவநத ஸுர வ்ராத
பாஸ்வத் கிரீட
ப்ரத்யுப்தோச்சாவசாச்மப்ரகர கரகணைச்சித்ரிதம் யத்
விபாதி ।
நம்ராங்காநாம் ஹரேர் நோ ஹரிதுபல மஹா கூர்ம
ஸௌந்தர்ய ஹாரி
ச்சாயம் ச்ரேய: ப்ரதாயி ப்ரபதயுகமிதம் ப்ராபயேத்
பாபமந்தம் ||

यत्–பகவானின் எந்த இரு கணுக்கால்களும், पादाम्भोजन्म–தாமரைபோன்ற இரு பாதங்களையும், सेवा–சேவிக்கும் சமயம், समवनत–(பக்தி சிரத்தையுடன்) நன்கு வணங்கும், सुरव्रात–தேவக்கூட்டங்களுடைய, भास्वत्किरीट–ஒளிக்கும் கிரீடங்களில், प्रत्युप्त–பதித்த, उच्चावच–பலவிதமான, अश्मप्रकर–ரத்னக்கூட்டங்களின், करगणैः–கிரணக்கூட்டங்களினால், चित्रितं–அலங்கரிக்கப்பட்டதாக, विभाति–விளங்குகிறதோ, तत्–அந்த, हरिदुपल–மரகத ரத்னத்தால் செய்யப்பட்ட, महाकूर्म–பெரிய ஆமையினுடைய, सौन्दर्यहारिच्छायं–அழகையொக்கும் அழகையுடையதும், श्रेयःप्रदायि–நன்மைகளை அளிப்பதுமான, इदं–இந்த, हरेः प्रपदयुगं–விஷ்ணுவின் இரு கணுக்கால்களும், नम्राङ्गानां–(பக்தி பரவசத்தினால்) வணங்கிய சரீரத்தையுடையநः–நம்முடைய, पापं–பாபத்தை अन्तं–நாசத்தை, प्रापयेत्–அடையும்படி செய்யவேண்டும்.

விஷ்ணுவின் திருவடி மலரை சேவிக்கும் சமயம் பக்தி மேலீட்டால் நன்கு வணங்கும் தேவக்கூட்டங்களின் கிரீடங்கள் பகவானின் பாதக்கணுக்காலின் சமீபம் வருவதால் அவைகளில் பதித்துள்ள பலவித வர்ணமுள்ள ரத்ன கற்களின் சிறந்த ஒளிக் கூட்டங்களால், பலவித புஷ்பங்களினாலும் ஆபரணங்களாலும்

அலங்கரிக்கப்பட்டதுபோல் விளங்குகிறது. மேலும் மரகதப் பச்சையாலான பெரிய ஆமைபோல் அழகுடன் விளங்குகிறது. எல்லாவித க்ஷேமங்களையும் கொடுக்கக்கூடிய அந்த இரு கணுக்கால்களும் நமது பாபத்தை அழிக்கவேண்டும். (17)

பகவானின் ஜங்கைகள் :—

श्रीमत्यौ चानुवृत्ते करपरिमलनानन्दहृष्टे रमायाः
सौन्दर्याढ्येन्द्रनीलोपलरचितमहादण्डयोः कान्तिचोरे ।
सूरीन्द्रैः स्तूयमाने सुरकुलसुखदे सूदितारातिसंघे
जङ्घे नारायणीये मुहुरपि जयतामस्मदंहो हरन्त्यौ ॥ १८ ॥

ச்ரீமத்யௌ சானுவ்ருத்தே கரபரிமலநாநந்தஹ்ருஷ்டே ரமாயா:
ஸௌந்தர்யாட்யேந்த்ர நீலோபல ரசித மஹாதண்டயோ: காந்தி சோரே ।
ஸூரீந்த்ரை: ஸ்தூயமாநே ஸுரகுல ஸுகதே ஸூதிதாராதி ஸங்கே
ஜங்கே நாராயணீயே முஹுரபி ஜய்தாமஸ்மதம்ஹோ ஹரந்த்யௌ ॥

श्रीमत्यौ–அழகு பொருந்தியதுகளும், अनुवृत्ते–முறையாக உருண்டு திரண்ட வடிவங்கொண்டதுகளும், रमायाः–லக்ஷ்மீ தேவியினுடைய, करपरिमलन–கைகளால் பிடித்துவிடுவதால் आनन्द–(ஏற்படும்) சந்தோஷத்தினால், हृष्टे–(ஏற்படும்) ரோமாஞ்சத்தையுடையதுகளாயும், सौन्दर्याढ्य – அழகு நிரம்பிய, इन्द्रनीलोपलरचितमहादण्डयोः–இந்த்ர நீலக்கல்லில் செதுக்கி எடுக்கப்பட்ட சிறந்த நீளமான இருதண்டங்களுடைய (விஷ்ணுவின் சரீரம் நீலநிறம் கொண்டதுபற்றி) कान्तिचोरे–அழகைப்பறிப்பவைகளும் (அதுபோல் நீலநிறமானதுபற்றி), सूरीन्द्रैः–நாரத விஷ்வக்ஸேனாதி நித்யசூரிகளினால், स्तूयमाने–புகழப்படுகிறவைகளும், सुरकुलसुखदे–தேவக்கூட்டத்திற்கு இன்பமளிப்பவைகளும், सूदिताराति-संघे–சத்ருக்கூட்டங்களை அழித்தவைகளும் (வாமனாவதாரத்

தில் ஒரு பாதங்கொண்டு பலியை பாதாளம் செல்லும்படி அழுத்தி, மற்றொரு பாதத்தினால் ஆகாயம் அளந்தது போன்ற காரியங்களினாலும், முழங்கால் (जङ्घा) பலங் கொண்டவரே யுத்தங்களில் சத்ருக்களை வென்று ஜயங் கொள்ளமுடியுமாதலாலும்), असंहः–நமது பாபத்தை, हरन्त्यौ–போக்குகிறதுமான, नारायणीये जङ्घे–விஷ்ணுவின் இரு முழங்கால் பாகங்களும், मुहुरपि–அடிக்கடியே ஓய்வின்றியே, जयताम्–வெற்றியுடன் விளங்குக.

சாமுத்ரிகா லக்ஷணப்படி அமைந்திருப்பதால் சிறந்த அழகு பொலிந்ததுகளாயும், நன்கு முறையே உருண்டு திரண்ட வடிவங் கொண்டதுகளும் கால்புறம் உட்கார்ந்து அல்லது தனது மடியில் பகவானின் பாதங்களைக்கொண்டு ஹிதமாக பிடித்துவிடும் சுச்ருஷை செய்யும் லக்ஷ்மீ தேவியின் கரகமல ஸ்பர்சம் ஏற்படும் சமயம் சிருங்காரபாவ உணர்ச்சியால் மனதில் ஏற்படும் ஆனந்தானுபவத்தாலுண்டாகும் ரோமாஞ்சத்தையுடையதுகளும் இந்திர நீலக்கற்களில் செதுக்கியெடுக்கப்பட்ட அழகிய நீண்ட இரு தண்டங்களின் அழகைக்கொண்டதுகளும் வைகுண்டத்தில் நாரதர், ப்ரஹ்லாதர் விஷ்வக்ஸேனர் முதலிய நித்யசூரிகள் எனப் படும் பக்தர்களால் தோத்தரிக்கப்படுபவைகளும் தேவக்கூட்டங் களுக்கு இன்பமளிப்பவைகளும், சத்ருக்கூட்டங்களை அழித்தவை களும் நம்முடைய எல்லாப் பாபங்களையும் அழிப்பவைகளுமான ஸ்ரீநாராயணனுடைய இவ்விரு ஜங்கைகளும் அடிக்கடி விளங்குக. முழங்கால் முட்டிலிருந்து கணுக்கால் வரையுள்ள பாகம் 'ஜங்கா' என்ப்படும். (18)

सम्यक् साह्यं विधातुं सममिव सततं जङ्घयोः खिन्नयोर्ये
भारीभूतोरुदण्डद्वयभरणकृतोत्तम्भभावं भजेते ।
चित्तादर्शं निधातुं महितमिव सतां ते समुद्गायमाने
वृत्ताकारे विधत्तां हृदि मुदमजितस्यानिशं जानुनी नः ॥

ஸம்யக் ஸாஹ்யம் விதாதும் ஸமமிவ ஸததம் ஜங்கயோ:
கிந்நயோர் யே
பாரீபூதோருதண்ட த்வய பரணக்ருதோத்தம்ப பாவம்
பஜேதே ।

சித்தாதர்ஶம் நிதாதும் மஹிதமிஹ ஸதாம் தே
ஸமுத்காயமானே
வ்ருத்தாகாரே விதத்தாம் ஹ்ருதி முதமஜிதஸ்யாநிஶம்
ஜாநுநீ ந: 11

ये–எந்த இரு ஜாநுக்களும், खिन्नयोः–எப்பொழுதும் உதவியின்றித் தனித்தே இரு பெருந்துடை பாரங்களைத் தாங்குவதால்) சிரமங்கொண்ட, जङ्घयोः–ஜங்கை என்னும் இரு அவயவங்களுக்கு (முழங்கால் சந்தியிலிருந்து கணுக்கால் சந்திவரையுள்ள பாகம் ‘ஜங்கா’ என சொல்லப்படுவது) सततं–எப்பொழுதும், समं-சேர்ந்து, साह्यं-உதவியை, सम्यक्-நன்கு, विधातुमिव–செய்வதற்குப்போல, भारीभूतोरुदण्डद्वय–பாரமான தண்டம்போன்ற இரு துடைகளை, भरणकृतोत्तम्भभावं தூக்கி நிறுத்தும் பொருட்டுள்ள தூணின் காரியத்தை, भजेते–அடைகிறதுகளோ, ते– அவ்விதங்களாயும், वृत्ताकारे–உருண்டு திரண்ட வடிவங்கொண்டதுகளாயும், इह-இங்கு, सतां–ஸாதுக்களின், महितं-சிறந்த, चित्तादर्शं–மனம் என்னும் கண்ணுடியை, निधातुं-வைப்பதற்கு, समुद्गायमाने-வாய்திறந்த இரு சிறுபெட்டிகள்போல் விளங்குகிறதுமான अजितस्य जानुनी–ஒருவராலும் என்றும் ஜயிக்கப்படாத விஷ்ணுவினுடைய இருஜானுக்களும், नः-நம்முடைய, हृदि-ஹிருதயத்தில், अनिशं–எப்பொழுதும், मुदं–ஆனந்தத்தை, विधत्ताम्–உண்டுபண்ணவேண்டும்.

பருத்த இரு துடைகளைத் தாங்குவதால் மிகவும் வருந்திய முழங்கால்களுக்கு எப்பொழுதும் சேர்ந்து நன்கு உதவி செய்வதற்குப்போல பாரமான இரு துடைகளை தாங்கும் உதவியாக நிறுத்தப்பட்ட இரு தூண்களின் நிலைமையை அடைகிறவைகளும் உருண்டு திரண்ட அழகிய வடிவங்கொண்டதுகளும், ஸாதுக்கள் தங்கள் கண்ணுடி போன்ற நிர்மலமனதை வைப்பதற்கேற்ற இரு சிறு பெட்டிகள் போல் விளங்குபவைகளுமான விஷ்ணுவின் இரு ஜாநுக்கள் நமது ஹிருதயத்தில் எப்பொழுதும் ஆனந்தத்தை உண்டுபண்ணவேண்டும். (‘जानुनी रत्नमुकुराकारे तस्य महीभुजः’ என்பதுபோல் உத்தம புருஷர்களின் முழங்கால்

சந்திப்பு பிரதேசம் நிர்மல கண்ணாடி வட்டம்போல் விளங்குவதாகக் கவிகள் வர்ணிப்பது வழக்கம். அதன் அழகைக்கண்டு அங்கேயே பக்தர்களின் மனது உரைந்துவிடுவதால் மனதைவைக்கும் சிறு பெட்டிகளோவென உத்ப்ரேக்ஷிக்கப்பட்டது.) (19)

இரு துடைகள் :—

देवो भीतिं विधातुः सपदि विदधतौ कैटभाख्यं मधुं चा-
प्यारोप्यारूढगर्वावधिजलधि ययोरादिदैत्यौ जघान ।
वृत्तावन्योन्यतुल्यौ चतुरमुपचयं बिभ्रतावभ्रनीला-
वूरू चारू हरेस्तौ मुदमतिशयिनीं मानसे नो विधत्ताम् ॥

தேவோ பீதிம் விதாது: ஸபதி விதததௌ கைடபாக்யம் மதும் சா-
ப்யாரோப்யா ரூடகர்வாவதி ஜலதி யயோராதிதைத்யௌ ஜகாந ।
வ்ருத்தாவந்யோந்யதுல்யௌ சதுரமுபசயம் பிப்ரதாவப்ர நீலா-
வூரு சாரு ஹரேஸ்தௌ முதமதிஶயிநீம் மாநஸே நோ விதத்தாம் ॥

आरूढगर्वौ-மேலிட்ட கர்வங்கொண்டவர்களும், विधातुरपि-பிரம்மதேவனுக்கும், सपदि-சீக்கிரம், भीतिं-பயத்தை, विदधतौ-உண்டுபண்ணுகிறவர்களும், कैटभाख्यं-கைடபன் என்ற பெயருடையவனும், मधुं च-மது என்ற பெயருடையவனுமான, आदिदैत्यौ-முதல் முதலில் ஏற்பட்ட இரு அசுரர்களை, देवः-பகவான் விஷ்ணு, अधिजलधि-சமுத்ர மத்யத்தில், ययोः-தனது எந்த துடைகளில், आरोप्य-ஏற்றி வைத்து, जघान-கொன்றாரோ. तौ-அவ்விதமாயும், चतुरं-சமமான, उपचयं-வளர்ச்சியை, बिभ्रतौ-தரிக்கிறதுகளும், वृत्तौ-உருண்டு திரண்ட வடிவங்கொண்டதுகளும், अन्योन्य-तुल्यौ-ஒன்றோடொன்றுக்கு ஒப்பிடத்தக்கதாயும், अभ्रनीलौ-ஆகாயம்போல் நீலநிறங்கொண்டதுகளும், चारू-அழகு வாய்ந்தவைகளுமான, हरेः ऊरू-விஷ்ணுவின் இரு துடை

களும், नः-நம்முடைய, मानसे-மனதில், अतिशयिनीं-மிக அதிசயமான मुदं-ஆனந்தத்தை, विधत्ताम्-உண்டுபண்ண வேண்டும்.

ஆதியில் உலகமனைத்தையும் படைத்த பிரம்மதேவனும் பயங்கொள்ளும்படி உலகை வருத்திவந்த கைடபன், மது என்னும் முதலில் தோன்றிய பலமிக்க அசுரத் தலைவர்களை சண்டையிட்டு அவர்கள் சமுத்திரத்தில் மறைய, அங்கும் சென்று சண்டையிட்டு அவர்களைப்பிடித்து தனது எந்த இரு துடைகளிலும் வைத்து ஒரேக்ஷணத்தில் கொசுவை நசுக்கிக் கொல்லுவதுபோல் பகவான் கொன்றானே, சாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரப்படி அமைந்த சுப லக்ஷணங்கள் யாவும் கொண்டிருப்பதால் மிக்க அழகுவாய்ந்தவைகளும், விஷ்ணுவின் உடலின் பாகமாதலால் அதுபோலவே ஆகாயம்போல் நீலவர்ண நிறங்கொண்டதுகளுமான அத்துடைகள், அவ்வுருவத்தை தியானம் செய்யும் நமது மனதில் மிக்க ஆனந்தத்தை உண்டுபண்ண வேண்டும். உண்டுபண்ணும் प्रार्थनाकाले लोट्-विधत्तामिति (20)

ஜகனம் (அடிவயிறு):—

पीतेन द्योतते यच्चतुरपरिहितेनाम्बरेणात्युदारं
जातालंकारयोगं जलमिव जलधेर्बाडवाग्निप्रभाभिः ।
एतत्पातित्यदाम्नो जघनमतिघनादेनसो माननीयं
सातत्येनैव चेतोविषयमवतरत्पातु पीताम्बरस्य ॥ २१ ॥

பீதேந த்யோததே யச்சதுர பரிஹிதேநாம்பரேணாத்யுதாரம்
ஜாதாலங்கார யோகம் ஜலமிவ ஜலதேர் பாடபாக்நி ப்ரபாபி:।
ஏதத் பாதித்யதாம்நோ ஜகநமதிகநாதேநஸோ மாநநீயம்
ஸாதத்யேனைவ சேதோவிஷயமவதரத் பாது பீதாம்பரஸ்ய ॥

चतुरपरिहितेन-நன்கு அழகாக உடுத்தப்பட்ட, पीतेन अम्बरेण-பீதாம்பரம் என்னும் பட்டு வஸ்திரத்தினால், अत्युदारं-மிக அழகுள்ளதும், जातालङ्कारयोगं-உண்டான சோபையையுடையதும், (ஆதலால்) बाडवाग्निप्रभाभिः-சமுத்ர நடுவில் எரியும் பாடவாக்னியின் ஒளிகளினால் அழகுற

விளங்கும், जलधेः जलमिव-சமுத்திரத்தின் ஜலம்போல், यत्-எது, द्योतते-விளங்குகிறதோ, एतत्-(த்யானிக்கும் சமயம் புலப்படுவதால்) இந்த, माननीयं-மதித்து த்யானம் செய்யத் தக்கதும் (ஆதலால்), सातत्येनैव-இடைவிடாமலேயே, चेतोविषयं-மனோவிஷயமாவதை மனம் என்னுமிடத்தை अवतरत्-அடைவதுமான, पीताम्बरस्य जघनं-பீதாம்பரமுடுத்திய விஷ்ணுவின் ஜகநம் என்னும் அத்திரு அவயவம், अतिघनात् மிக்க வலிமை கொண்டதும், पातित्यदात्-நரகாதி துக்க மிக்கலோகங்களிலும் நம்மை தள்ளக்கூடியதுமான, एनसः-பாபத்திலிருந்து, नः-நம்மை, पातु-காத்துரக்ஷிக்கவேண்டும்.

நன்கு அழகாக உடுத்தப்பட்ட பீதாம்பரப் பட்டு வஸ்திரத்தினல் மிக்க அழகுள்ளதும் ஆபரண சோபையுடையதும் ஆதலால் பாடவாக்னியின் ஜ்வாலை ஒளிகளினல் சூழப்பட்ட சமுத்திர ஜலத்தை ஒப்பிடத்தக்கதாயும், (நீல சமுத்திர மேல் பரப்பு ஜலம் மஞ்சள்நிற பாடவாக்னி ஜ்வாலைகளால் சூழப்பட்டிருக்கும் கண் எவ்விதம் அழகாக இருக்குமோ, அவ்விதமே பகவானின் ஜகனமென்னும் அவயவம் பீதாம்பர வஸ்திர சோபையால் விளங்குகிறது)பக்தர்களின் மனதைக் கவருவதால் மதிக்கத் தக்கதாயும், இடைவிடாது நம் மனோவிஷயமாக ஆகிறதாயும் உள்ள, பீதாம்பரதாரி விஷ்ணுவின் அந்த ஜகனமென்னும் திருவுருவ பாகம் நரகாதிபாதத்திற்குக் காரணமான பெரும்பாபத்திலிருந்தும் நம்மைக் காத்து ரக்ஷிக்கவேண்டும். (21)

இடுப்பில் அணியும் அரைஞாண் :—

यस्या दाम्ना त्रिधाम्नो जघनकलितया भ्राजतेऽङ्गं यथाब्धे-
र्मध्यस्थो मन्दराद्रिर्भुजगपतिमहाभोगसंनद्धमध्यः ।
काञ्ची सा काञ्चनाभा मणिवरकिरणैरुल्लसद्भिः प्रदीप्ता
कल्यां कल्याणदात्री मम मतिमनिशं कम्ररूपा करोतु ॥

யஸ்யா தாம்நா த்ரிதாம்நோ ஜகந கலிதயா
ப்ராஜதேஷங்கம் யதாப்தேர்
மத்யஸ்தோ மந்தராத்ரிர் புஜகபதி மஹாபோக ஸந்நத்த
மத்ய;|

காஞ்சீ ஸா காஞ்சநாபா மணிவர கிரணைருல்லஸத்பி: ப்ரதீப்தா
கல்யாம் கல்யாண தாத்ரீ மம மதிமநிஶம் கம்ரரூபா கரோது ||

**त्रिधाम्नः**-பூமி, ஆகாயம், ஸ்வர்க்கம் என்னும் மூன்று இடங்களையும் வியாபித்திருக்கும் விஷ்ணுவின், **जघनकलितया**-இடுப்பில் அணியப்பட்ட, **यस्या दाम्ना**-எந்த அரைஞாண் நூலினால், **अङ्ग**-விஷ்ணுவின் சரீரம், **अम्बोधेः**-சமுத்திரத்தின், **मध्यस्थः**-நடுவிலுள்ள, **भुजगपतिमहाभोगसंनद्धमध्यः**-(அமிருதமதன சமயம்) வாசுகியென்னும் பாம்பின் பருத்து நீண்ட பெரும் உடலினால் கட்டப்பட்ட மத்ய பாகத்தையுடைய **मन्दराद्रिर्यथा**-மந்திர பர்வதம்போல், **भ्राजते**-விளங்குகிறதோ, **सा**-அவ்விதமானதும், **उल्लसद्भिः**-மேலே பரவுகிற **मणिवरकिरणैः**-சிறந்த ரத்னக்கற்களின் கிரணங்களினால் **प्रदीप्ता**-ப்ரகாசிக்கிறதாயும், **काञ्चनाभा**-பொன்னின் ஒளியுடையதாயும், **कम्ररूपा**-அழகிய உருவங்கொண்டதாயும், **कल्याणदात्री**-மங்களங்களை கொடுக்கிறதாயும் உள்ள, **काञ्ची**-அரைஞாண், **मम**-என்னுடைய, **मतिं**-புத்தியை, **अनिशं**-எப்பொழுதும், **कल्या**-த்யானம் செய்வதில் சாமர்த்தியம் கொண்டதாக, **करोतु**-செய்யவேண்டும்.

இடுப்பில் அணியப்பட்ட அரைஞாணின் முடிச்சுப் போடும் கயிறினால் விஷ்ணுவின் திருவுருவம் நடுசமுத்திரத்தில் அமிருதம் கடைந்தெடுக்கும் சமயம் வாசுகியென்னும் சர்ப்பத்தின் மாபெரும் உடலினால் சுற்றிக்கட்டப்பட்ட நடுபாகத்தையுடையமந்தரபர்வதம் போல் விளங்குகிறதோ அவ்விதமாயும் தங்கத்தின் ஒளிவீசுகிறதாயும் அவ்விதமே அதில் பதிக்கப்பட்டுள்ள சிறந்த பல இரத்னங்களின் ஒளிக்கும் கிரணங்களால் அழகுற ப்ரகாசிக்கிறதாயும் மனதைக்கவரும் உருவமுடையதாயும் எல்லாவித க்ஷேமங்களையும் அளிக்கவல்லதாயுமுள்ள அந்த அரைஞாண் எனது மனதை எப்பொழுதும் நற்காரியங்களில் ஈடுபட்டதாகவும் பாபங்களிலிருந்து நீங்கினதாகவும் பகவத்தத்வத்தை அறிவதில் திறமையுள்ளதாகவும் செய்யவேண்டும். (22)

நாபி (தொப்புள்) :—

उन्नम्रं कम्रमुच्चैरुपचितमुदभूद्यत्र पत्रैर्विचित्रैः
पूर्वं गीर्वाणपूज्यं कमलजमधुपस्यास्पदं तत्पयोजम् ।
यस्मिन्नीलाश्मनीलैस्तरलरुचिजलैः पूरिते केलिबुद्ध्या
नालीकाक्षस्य नाभीसरसि वसतु नश्चित्तहंसश्चिराय ॥ २३ ॥

உந்நம்ரம் கம்ரமுச்சைருபசிதமுதபூத் யத்ர பத்ரைர் விசித்ரை:
பூர்வம் கீர்வாண பூஜ்யம் கமலஜ மதுபஸ்யாஸ்பதம் தத் பயோஜம் ‖
யஸ்மின் நீலாச்மநீலைஸ் தரளருசிஜலை: பூரிதே கேளிபுத்த்யா
நாளீகாக்ஷஸ்ய நாபீ ஸரஸி வஸது நச்சித்தஹம்ஸச்சிராய ‖

यत्र—எந்த நாபிக்குளத்தில் (தொப்புள் என்னும் தடாகத்தில்), गीर्वाणपूज्यं-தேவர்களால் பூஜிக்கத்தக்கதும், कमलजमधुपस्य—தாமரைப் பூவினின்றும், பிறந்த பிரம்மதேவனுகிற வண்டிற்கு, आस्पदं—இருப்பிடமானதும், विचित्रैः—பெரிதும் சின்னதுமாக அடுக்கடுக்காக அமைந்ததால் பலவிதமான ஆச்சர்யகரமான, पत्रैः—இதழ்களினுல், उच्चैः उपचितं—நன்கு வளர்ந்ததும், कम्रं—அழகு கொண்டதாயும், उन्नम्रं—மேல் நோக்கினதாகவும் உள்ள, तत् पयोजं—அந்த தாமரைப்பூ, पूर्वं—முதலில், उदभूत्—உண்டாயிற்றே, नीलाश्मनीलैः-இந்திர நீலரத்னம்போல் நீலநிறமான, तरलरुचिजलैः-மின்னும் நீலநிற சரீர ஒளிகளாகிற ஜலங்களினுல், पूरिते-நிரப்பப்பட்டிருக்கும், तस्मिन्—அந்த, नालीकाक्षस्य—தாமரைக் கண்ணனின், नाभीसरसि—தொப்புளாகிற குளத்தில், नः—நம்முடைய, चित्तहंसः—மனது என்னும் ஹம்ஸ பக்ஷி, चिराय-வெகுகாலம் केलिबुद्ध्या—விளையாடும் எண்ணத்தினுல், वसतु—வாஸம் செய்யவேண்டும்.

செந்தாமரைக் கண்ணனின் தொப்புள் பிரதேசம் ஓர் தடாகத்திற்கு ஒப்பிட்டு வர்ணிக்கப்படுகிறது. விஷ்ணுவின் தொப்புள் பிரதேசத்தில் சரீர நீலநிற காந்திகள் நிறைந்திருப்

பதால் அந்நிற கிரணங்களே ஜலம், அதனால் நிரப்பப்பட்டது போல் ததும்பும் நீலநிற ஜலம் நிறைந்ததுபோல் காணப்படுகிறது. அதில் முதலில் முளைத்த தாமரைப்பூ உலகமனைத்தையும் படைத்த பிரம்மதேவனை நடுவில் கொண்டிருப்பதால் பிரம்மதேவனுகிற வண்டை உடையதாக அப்பூ வர்ணிக்கப்பட்டது. பலவித அடுக்குகளுடன் அழகிய இதழ்களினால் தினம் தினம் வளர்ந்து நல்ல முதிர்ந்த வளர்ச்சியையும் உடையது அப்பூ. மேலும் மேல்நோக்கி மலர்ந்து நிற்பது அப்பூ. அப்பூவின் உயர்வையறிந்த எல்லா தேவர்களும் பரமனது நாபியிலிருந்து முளைத்து நான்முகனுக்கும் பிறப்பிடமான அப்பூவை துதித்து வணங்குகிருர்கள். அவ்விதமான நாபீ தடாகத்தில் ஓர் ராஜஹம்ஸம்போல் என் மனம் பற்றுக்கொண்டு வெகுகாலம் வசிக்க வேண்டும். (23)

**நாபியில் தோன்றிய தாமரை :—**

**पातालं यस्य नालं वलयमपि दिशां पत्रपङ्क्तीर्नगेन्द्रा-**
**न्विद्वांसः केसरालीर्विदुरिह विपुलां कर्णिकां स्वर्णशैलम् ।**
**भूयाद्गायत्स्वयंभूमधुकरभवनं भूमयं कामदं नो**
**नालीकं नाभिपद्माकरभवमुरु तन्नागशय्यस्य शौरेः ॥ २४ ॥**

பாதாளம் யஸ்ய நாலம் வலயமபி திஶாம் பத்ரபங்க்தீர் நகேந்த்ரான்
வித்வாம்ஸ: கேஸராளீர் விதுரிஹ விபுலாம் கர்ணிகாம் ஸ்வர்ண ஶைலம் ।
பூயாத் காயத் ஸ்வயம்பூ மதுகர பவநம் பூமயம் காமதம் நோ
நாளீகம் நாபிபத்மாகரபவமுரு தந்நாகஶய்யஸ்ய ஶௌரே: ॥

**यस्य**-எந்த தாமரைப்பூவிற்கு, **नालं**-அடித்தண்டாக, **पातालं**-பாதாள உலகத்தையும், **पत्रपङ्क्तीः**-இதழ் அடுக்குகளாக, **दिशां वलयं**-திக்குகளின் மண்டலத்தையும், **केसरालीः**-கிஞ்ஜல்கமென்னும் மேல்நோக்கி நிற்கும் கேஸர வரிசைகளாக, **नगेन्द्रान्**-குலபர்வதங்களையும், **विपुलां**-விசாலமான, **कर्णिकां**-நடுவில் உள்ள மணிகர்ணிகையாக, **स्वर्णशैलं**-தங்க

மய மேரு பர்வதத்தையும், विद्वांस:-அறிஞர்கள், इह-இவ் வுலகில், विदुः-அறிகிருர்களோ (புராணங்களில் கூறுகிருர் களோ), तत् -அவ்விதமானதும், गायत्स्वयम्भूमधुकरभवनं-வேதம் பாடிக்கொண்டிருக்கும் பிரம்மதேவஞகிற வண்டிற்கு இருப்பிடமானதும் (தாமரை மலரில் வண்டு ரீங்காரம் செய்துகொண்டிருப்பது இயற்கை), भूमयं-(ஏழு த்வீபங்கொண்ட) பூமண்டல உருவமாயும், नागशय्यस्य-ஆதிசேஷன் என்னும் பாம்பில் பள்ளிகொண்ட, शौरेः-விஷ்ணுவினுடைய, नाभिपद्माकरभवं-தொப்புள் என்னும் தாமரைக் குளத்தில் முளைத்ததாயும், उरु-பெரியதாயுமுள்ள, नालीकं-தாமரை மலர், नः-நமக்கு, कामदं-இஷ்டங்களை அளிப்பதாக, भूयात् -ஆகவேண்டும்.

இப்பூமண்டலம் பூருவும் விராட்புருஷனை விஷ்ணுவினுடைய நாபி கமலமேயென ஸித்தாந்தமாதலால் நாபியினின்றும் தோன்றிய மலர் भूमयं எனக் கூறப்படுகிறது. தாமரை மலரின் எல்லா அம்சங்களும் உள்ளனவெனக் கூறுகிருர். அடித்தண்டு ஸ்தானத்தில் பாதாள உலகமும் இதழ்மண்டல வரிசை ஸ்தானத் தில் திக்மண்டல வரிசையும் நடுவில் நிமிர்ந்து சூழ்ந்து நிற்கும் கேஸரங்கள் என்னும் கிஞ்சல்கங்கள் ஸ்தானத்தில் பூமத்யத்தில் நிமிர்ந்து சூழ்ந்து நிற்கும் பர்வதங்களும் நடுவில் விளங்கும் கர்ணிகை ஸ்தானத்தில் தங்கமய மேருபர்வதமும் (பூமியின் மத்தி யில் மேருபர்வதம் உள்ளது என ஸித்தாந்தம்பற்றி) பூவின் மத்தி யில் ரீங்காரம் செய்துகொண்டிருக்கும் வண்டின் ஸ்தானத்தில் ஸதா ஸாமம் முதலிய வேதங்களை ஓதிக்கொண்டிருக்கும் பிரம்ம தேவனுமிருப்பதால் தொப்புள்குளத்தில் முளைத்த இத்தாமரைப் பூவும் உலகில் பிரசித்த தாமரையைப்போலவே எல்லா அம்சங் களையும் கொண்டது வியாபகமானது. விராட்புருஷனின் அவய வமாக விளங்குவதுபற்றி அம்மஹிமை கொண்டுள்ளதால் நமது விருப்பம் யாவையும் அளிக்கவேண்டுமென அதை தியானிப்போமாக.

(24)

க்ரோடம் (தொப்புளுக்குக் கீழேயுள்ள குக்ஷி) :—

आदौ कल्पस्य यस्मात्प्रभवति विततं विश्वमेतद्विकल्पैः
कल्पान्ते यस्य चान्तः प्रविशति सकलं स्थावरं जङ्गमं च ।

अत्यन्ताचिन्त्यमूर्तेश्चिरतरमजितस्यान्तरिक्षस्वरूपे
तस्मिन्नस्माकमन्तःकरणमतिमुदा क्रीडतात्क्रोडभागे ॥ २५ ॥

ஆதௌ கல்பஸ்ய யஸ்மாத் ப்ரபவதி விததம் விச்வமேதத் விகல்பை:
கல்பாந்தே யஸ்ய சாந்த: ப்ரவிசதி ஸகலம் ஸ்தாவரம் ஜங்கமம் ச ।
அத்யந்தாசிந்த்ய மூர்த்தேச்சிரதரமஜிதஸ்யாந்தரிக்ஷ ஸ்வரூபே
தஸ்மிந்நஸ்மாகமந்த:கரணமதிமுதா க்ரீடதாத் க்ரோடபாகே ॥

कल्पस्य-சிருஷ்டியினுடைய, आदौ-முதலில், यस्मात्-எதிலிருந்து, विकल्पैः-பலவித வேற்றுமைகளினால் विततं-விஸ்தாரமான, एतत् - இந்த (காணப்படும் கேட்டு அறியப்ப்படும்), विश्वं-உலகம், प्रभवति-தோன்றுகிறதோ ("नाभ्या आसीदन्तरिक्षम्" "आकाशाद्वायुः वायोरग्निः") அவ்விதமே कल्पान्ते च-கல்ப முடிவுகாலத்திலும், स्थावरं-அசைவற்ற பொருளோ, जङ्गमं-அசையும் உயிர்ப் பொருளோ सकलं-எல்லாம், यस्य-எந்த நாபியினுடைய, अन्तः-உள்ளேயே प्रविशति-சென்று மறைந்துவிடுகிறதோ (இவ்வளவு உலகத்தையும் தன்னிடம் அடக்கி வைத்துக்கொண்டிருக்கும் அந்த குக்ஷிப்ரதேசத்தின் சக்தியே அதிசயிக்கத் தக்கது தியானிக்கத்தக்கது). अत्यन्ताचिन्त्यमूर्तेः-ஒரு விதத்திலும் சிந்திக்கமுடியாத சரீரம்கொண்ட, अजितस्य-எவராலும் ஜயிக்கப்படாத விஷ்ணுவினுடைய, अन्तरिक्षस्वरूपे-ஆகாய ஸ்வரூபமான, तस्मिन्-அந்த, क्रोडभागे-தொப்புளுக்குக்கீழ் பிரதேசத்தில், अस्माकं-நம்முடைய, अन्तःकरणं-மனது, अतिमुदा-மிக்க சந்தோஷத்துடன், चिरतरं-வெகுகாலம், क्रीडतात्-பற்றுக்கொண்டு விளையாடவேண்டும்.

கல்பாரம்பத்தில் ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், பூமி முதலிய பலவகையான மிகவிஸ்தாரமான இவ்வுலகம் எதிலிருந்து தோன்றிற்றோ அவ்விதமே ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள்

மயமான ஸகல உலகமும் கல்பாந்தமென்னும் இறுதி காலத்தில் எதில் சென்று மறைந்து விடுகிறதோ, அந்தவிதமான ஆகாய ரூபமான, மனதிலும் நினைக்கமுடியாத விராட் உருவங்கொண்டவரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவருமான ஸ்ரீ விஷ்ணுவினுடைய குக்ஷி பிரதேசத்தில் நமது மனம் வெகுகாலம் மிக்க மகிழ்ச்சியுடன் உலாவி வரவேண்டும். (25)

உதரம் (வயிறு) :—

कान्त्यम्भःपूरपूर्णे लसदसितवलीभङ्गभास्वत्तरङ्गे
गम्भीराकारनाभीचतुरतरमहावर्तशोभिन्युदारे ।
क्रीडत्वानद्धहेमोदरनहनमहोबाडवाग्निप्रभाढ्ये
कामं दामोदरीयोदरसलिलनिधौ चित्तमत्स्यश्चिरं नः ॥

காந்த்யம்ப: பூரபூர்ணே லஸதஸிதவலீ பங்கபாஸ்வத்தரங்கே
கம்பீராகார நாபீ சதுரதர மஹாவர்த்த ஶோபிந்யுதாரே ।
க்ரீடத்வாநத்த ஹேமோதர நஹந மஹோ பாடபாக்நி ப்ரபாட்யே
காமம் தாமோதரீயோதர ஸலில நிதௌ சித்த மத்ஸ்யச்சிரம் ந: ॥

कान्त्यम्भःपूरपूर्णे-அழகு என்னும் ஜலப்பெருக்கு நிறைந்ததும், लसदसितवलीभङ्ग-விளங்கும் கருநிறமான மூன்று மடிப்புகளாகிற, भास्वत्तरङ्गे-ஒளியுள்ள அலைகளைக்கொண்டதாயும், गम्भीराकार-ஆழமான உருவமமைந்த, नाभी-தொப்புள் சுழியாகிற, चतुरतरमहावर्त-மிக்க அழகிய பெரும் வட்டவடிவமான சுழலினால், शोभिनि-விளங்குகிறதாயும், उदारे-விசாலமானதாயும், आनद्धहेमोदरनहनमहो-அணியப்பட்ட தங்கமயமான வயிற்றில் அணியும் ஒட்டியாணத்தின் காந்தியாகிற, बाडवाग्निप्रभाढ्ये-பாடவாக்னியின் ப்ரபைகளினால் நிறைந்ததாயுமுள்ள, दामोदरीयोदरसलिलनिधौ-ஸ்ரீ தாமோதரனின் வயிறு என்னும் சமுத்திரத்தில், नः-நம்முடைய, चित्तमत्स्यः-மனது ஆகிற மீன், कामं-இஷ்டப்படி, चिरं-வெகுகாலம், क्रीडतु-சுற்றி விளையாடிக்கொண்டிருக்கவேண்டும்.

அழகென்னும் ஜலப்ரவாஹம் நிறைந்ததும் கருமையான மூன்று மடிப்புக்கள் (வலித்ரயம்) என்னும் ஒளிக்கும் அலைகள் உடையதும், ஆழமான உருவங்கொண்ட தொப்புள்குழியென்னும் மிக அழகிய பெரும் சுழலில் விளங்குவதும் மிக்க அகலமானதும் அணியப்பட்ட தங்க ஒட்டியாணத்தின் ஒளிகளாகிற பாடவாக்னியின் காந்திகளால் சூழப்பட்டதுமான ஸ்ரீதாமோதரனின் உதரமாகிற ஸமுத்திரத்தில் நமது மனம் என்னும் மீன் வெகுகாலம் நன்கு நீந்தி விளையாடவேண்டும். நமது மனம் பற்றுடன் அவ்வுருவத்தை நன்கு தியானம் செய்யவேண்டுமென்பது கருத்து. (26)

**ரோமாவளி:—**

**नाभीनालीकमूलादधिकपरिमलोन्मोहितानामलीनां
माला नीलेव यान्ती स्फुरति रुचिमती वक्त्रपद्मोन्मुखी या ।
रम्या सा रोमराजिर्महितरुचिकरी मध्यभागस्य विष्णो-
श्चित्तस्था मा विरंसीच्चिरतरमुचितां साधयन्ती श्रियं नः ॥**

*நாபீ நாளீகமூலாததிக பரிமளோந்மோஹிதாநாமளீநாம்
மாலா நீலேவ யாந்தீ ஸ்புரதி ருசிமதீ
வக்த்ரபத்மோன்முகீ யா ।
ரம்யா ஸா ரோமராஜிர் மஹிதருசிகரீ மத்யபாகஸ்ய விஷ்ணோ
ச்சித்தஸ்த்தா மா விரம்ஸீச்சிரதரமுசிதாம் ஸாதயந்தீ
ச்ரியம் ந: ॥*

**नाभीनालीकमूलात्**-நாபீ கமலத்தின் அடியிலிருந்து, **वक्त्रपद्मोन्मुखी**-முகமாகிற தாமரை மலரை நோக்கி, **यान्ती**- செல்லுகிற, **रुचिमती**-ப்ரீதிகொண்ட, **अधिकपरिमलोन्मोहितानां**- மிகுந்த வாசனையில் மோஹமடைந்த, **अलीनां**-வண்டுகளுடைய, **नीला**-நீலநிறமான, **मालेव**-வரிசைபோல், **या**- எந்த ரோமாவளி, **स्फुरति**-விளங்குகிறதோ, **सा**-அவ்விதமானதும், **रम्या**-அழகானதும், **विष्णोः**-விஷ்ணுவினுடைய, **मध्यभागस्य**-இடுப்பு பிரதேசத்திற்கு, **महितरुचिकरी**-சிறந்த அழகை உண்டுபண்ணுவதும் ஆன, **रोमराजिः**-ரோமாவளீ, **नः**-நமக்கு, **उचितां**-தகுதியான, **श्रियं**-ஐசுவரியத்தை,

साश्रयन्ती-உண்டுபண்ணிக்கொண்டு, चिरं-வெகுகாலம், चित्तस्था-மனதில் நிலைத்திருப்பதாக, (अस्तु-இருக்கவேண்டும்.) मा विरंसीत्-விட்டுப்பிரியவேண்டாம்.

காபீ கமலத்திலிருந்து முககமலத்தை நோக்கி பிரீதியுடன் சென்றுகொண்டிருக்கும், அதிக மகரந்த வாசனையினால் மயங்கிய கருநிறம் கொண்ட அழகிய வண்டு வரிசையோவென உத்ப்ரேக்ஷிக்கப்படுவதும் விஷ்ணுவின் இடுப்பு பிரதேசத்திற்கு மிக்க அழகையுண்டுபண்ணுவதும் மிக்க அழகு பொருந்தியதும், பக்தர்களுக்கு உசிதமான ஐச்வர்யத்தை அளிப்பதுமான ரோமாவளீ நமது சித்தத்தில் நெடுங்காலம் இடங்கொண்டிருக்க வேண்டும், விட்டு விலகக்கூடாது. (27)

வக்ஷஸ்தலம் (மார்பு) :—

संस्तीर्णं कौस्तुभांशुप्रसरकिसलयैर्मुग्धमुक्ताफलाढ्यं
श्रीवासोल्लासि फुल्लप्रतिनववनमालाङ्कि राजद्भुजान्तम् ।
वक्षः श्रीवृक्षकान्तं मधुकरनिकरश्यामलं शार्ङ्गपाणेः
संसाराध्वश्रमार्तैरुपवनमिव यत्सेवितं तत्प्रपद्ये ॥ २८ ॥

ஸம்ஸ்தீர்ணம் கௌஸ்துபாம்சு ப்ரஸரகிஸலயைர்
முக்த முக்தாபலாட்யம்
ஸ்ரீ வாஸோல்லாஸி புல்ல ப்ரதிநவ வநமாலாங்கி ராஜத்
புஜாந்தம் ।
வக்ஷ: ச்ரீவ்ருக்ஷ காந்தம் மதுகர நிகர ச்யாமளம்
சார்ங்கபாணே:
ஸம்ஸாராத்வ ச்ரமார்த்தைருபவநமிவ யத் ஸேவிதம்
தத் ப்ரபத்யே ॥

कौस्तुभांशुप्रसरकिसलयैः-கௌஸ்துபமென்னும் ரத்னத்திலிருந்து வீசும் கிரணங்களாகிற இளம் துளிர்களால், संस्तीर्णं-பரப்பி மறைக்கப்பட்டதும், मुग्धमुक्ताफलाढ्यं-அழகிய முக்தாமணிகள் நிறைந்ததும், श्रीवासोल्लासि — லக்ஷ்மியின் வாஸத்துடன் விளங்குவதும், फुल्लप्रतिनववनमालाङ्कि-மலர்ந்த மிக்கப்புதிய புஷ்பங்கொண்ட வனமாலையணிந்ததும், राजद्भुजान्तं-தோள்கள் வரை அகன்று விளங்குவதும், मधुकर-

निकरश्यामलं-வண்டுக்கூட்டம்போல் கருவர்ணமுடையதும், श्रीचन्दनकान्तं-சந்தனப் பூச்சிஞல் அழகியதும் ஆன, यत् -எது, संसाराध्वश्रमार्तैः-ஸம்ஸாரமென்னும் தொலைவழியில் நடந்து சிரமங்கொண்டவர்களால், उपवनमिव-(சிரமத்தை நீக்கிக் கொள்ள) பூங்காவனம்போல், सेवितं -சேவிக்கப் பட்டுள்ளதோ, तत् -அந்த, शार्ङ्गपाणेः-சார்ங்கபாணி விஷ்ணு -வின், वक्षः-மார்பை, प्रपद्ये-(நான்) சரணமடைகிறேன்.

கௌஸ்துபமென்னும் ரத்னத்திலிருந்து கிளம்பிப்பரவும் கதிர்களாகிற மெல்லிய இளந்துளிர்களால் பரப்பப்பட்டதும் பல ஆபரணங்களில் பதித்த முத்துக்களால் வியாபிக்கப்பட்டதும் லக்ஷ்மியின் வாஸத்தால் சோபிக்கிறதும் மலர்ந்த புதிய வனமாலை யென்னும் புஷ்பமாலையின் அடையாளமுள்ளதும், சோபிக்கும் இருதோள்களையுடையதும் வாசனை மிளிரும் சந்தனப்பூச்சுடைய தாயும் வண்டுக்கூட்டம்போல் அழகிய கருநிறங்கொண்டதாயும் ஸம்ஸாரம் என்னும் நெடுந்தூரப்பாதையில் அலைந்து திரிந்து சிரமம் கொண்டோர்க்கு அச்சிரமத்தை நீக்கிக்கொள்ள ஏற்பட்ட பூங்காவனமாக பக்தர்களால் ஸேவிக்கப்படுவதுமான விஷ்ணு வின் அந்த மார்பை நான் சரணமடைகிறேன். இச்சுலோகத்தில் மார்பை ஓர் பூங்காவாக வர்ணிக்கிருர். பூங்காவில் இளந்துளிர் களும் பழங்களும் மணமும் மலர்களும் வண்டுகளும் நிறைந்த சிறிய செடிகளும் சந்தண மரம் பூர்ஜ விருக்ஷம் முதலான பெரிய மரங்களும் அடர்த்தியாக இருப்பதால் வழிப்போக்கர்கள் இங்கு வந்து களைப்பாறுகிருர்கள். (28)

ஸ்ரீவத்ஸமென்னும் மச்சம் :—

कान्तं वक्षो नितान्तं विदधदिव गलं कालिमा कालशत्रो-
रिन्दोर्बिम्बं यथाङ्को मधुप इव तरोर्मञ्जरीं राजते यः ।
श्रीमान्नित्यं विधेयादविरलमिलितः कौस्तुभश्रीप्रतानैः
श्रीवत्सः श्रीपतेः स श्रिय इव दयितो वत्स उच्चैःश्रियं नः ॥

காந்தம் வக்ஷோ நிதாந்தம் விதததிவ கலம் காளிமா காலசத்ரோ—
ரிந்தோர் பிம்பம் யதாங்கோ மதுப இவ தரோர் மஞ்ஜரீம் ராஜதே யஃ।

ச்ரீமான் நித்யம் விதேயாதவிரள மிளித: கௌஸ்துபச்ரீ
ப்ரதாநை:
ச்ரீவத்ஸ: ச்ரீபதே: ஸ ச்ரிய இவ தயிதோ வத்ஸ
உச்சை: ச்ரியம் ந: ll

**कालिमा**-கருநிறம், **कालशत्रोः**-காலனைக்கொன்ற பரமசிவனுடைய, **गलमिव**-கழுத்தை அழகுறச்செய்வதுபோலவும், **अङ्कः**-கலங்கமென்னும் கருத்தபாகம், **इन्दोः बिम्बं यथा**-சந்திரனின் மண்டலத்தை அழகுறச்செய்வதுபோலவும், **मधुपः**-வண்டு, **तरोर्मञ्जरीमिव**-விருக்ஷத்தின் பூங்கொத்தை அலங்கரிப்பதுபோலவும், **वक्षः**-விஷ்ணுவின் மார்பு பிரதேசத்தை, **नितान्तं**-மிகவும், **कान्तं**-அழகுடையதாக, **विदधत्**-செய்வதும், **कौस्तुभश्रीप्रतानैः**-கௌஸ்துபமணியின் ஒளிமண்டலங்களோடு, **अविरलमिलितः**-எப்பொழுதும் சேர்ந்ததாயும், **श्रीमान्**-தானே மிக்க அழகுடையதும் **श्रियः**-லக்ஷ்மீதேவியினுடைய, **दयितो वत्स इव**-பிரேமைக்குரிய குழந்தைபோலத்தோன்றுவதுமான, **यः**-எது, **राजते**-விளங்குகிறதோ, **सः**-அந்த, **श्रीपतेः**-விஷ்ணுவினுடைய, **श्रीवत्सः**-ஸ்ரீவத்ஸமென்னும் மச்ச அடையாளம், **नः**-நமக்கு, **नित्यं**-சதாகாலம், **उच्चैःश्रियं**-உயர்ந்த ஐசுவரியத்தை, **विधेयात्**-அளிக்கவேண்டும்.

காலனை ஸம்ஹரித்த சிவபெருமானின் கழுத்தை அக்கழுத்தில் விஷபானம் செய்த காலத்தில் ஏற்பட்ட கருப்பு நிறம் எவ்விதம் அழகுறச் செய்கிறதோ, கருத்த அம்புலிமான் என்னும் களங்கம் சந்திரமண்டலத்தை எங்ஙனம் அழகுபடுத்துகிறதோ, கருநிற வண்டு மரத்தின் பூங்கொத்தை எவ்விதம் அழகுபடுத்துகிறதோ அவ்விதம் அழகிய கருநிறங்கொண்ட ஸ்ரீவத்ஸம் என்னும் மச்ச அடையாளம், விஷ்ணுவின் மார்பை மிக்க அழகுடையதாகச் செய்து கொண்டு விளங்குகிறது. மேலும் மார்பில் அணியப்பட்டுள்ள கௌஸ்துப ரத்னத்தின் ஒளிகளோடு இடைவெளியின்றி மிக்க நெருங்கிச்சேர்ந்திருப்பதால் மிக்க அழகு உள்ளதாயும் அழகு தெய்வமாகிய லக்ஷ்மீ தேவியின் பிரேமைக்குரிய குழந்தைபோலவும் விளங்கும் ஸ்ரீவத்ஸம் என்னும் விஷ்ணுவின் மச்ச அடையாளம் நமக்கு எப்பொழுதும் உயர்ந்த ஐசுவரியத்தை உண்டுபண்ணவேண்டும். (29)

கௌஸ்துபமணி :—

संभूयाम्भोधिमध्यात्सपदि सहजया यः श्रिया संनिधत्ते
नीले नारायणोरःस्थलगगनतले हारतारोपसेव्ये ।
आशाः सर्वाः प्रकाशा विदधदपिदधच्चात्मभासान्यतेजां-
स्याश्चर्यस्याकरो नो द्युमणिरिव मणिः कौस्तुभः सोऽस्तुभूत्यै ॥

*ஸம்பூயாம்போதி மத்யாத் ஸபதி ஸஹஜயா யஃ ச்ரியா ஸந்நிதத்தே*
*நீலே நாராயணோரஸ்ஸ்தல ககநதலே ஹார தாரோப ஸேவ்யே I*
*ஆசா: ஸர்வா: ப்ரகாசா விதததபிததச்சாத்ம பாஸாந்ய தேஜாம்*
*ஸ்யாச்சர்யஸ்யாகரோ நோ த்யுமணிரிவ மணி: கௌஸ்துப: ஸோஸ்து பூத்யை*

यः–எது, अम्भोधिमध्यात्–ஸமுத்ர மத்தியிலிருந்து, संभूय–உண்டாகி, सपदि–உடனேயே, सहजया–கூடப்பிறந்த श्रिया–லக்ஷ்மியோடுகூட, हारतारोपसेव्ये–நக்ஷத்திரங்கள் போன்ற முத்து ஹாரங்களால் ஆச்ரயிக்கப்படுவதும், नीले–நீலநிறமுள்ளதுமான, नारायणोरःस्थलगगनतले–ஆகாயம் போன்ற மஹாவிஷ்ணுவின் மார்பு பிரதேசத்தில், सन्निधत्ते–விளங்குகிறதோ, सः–அவ்விதமானதும், सर्वा आशाः–எல்லா திசைகளையும், प्रकाशाः–ஒளியுள்ளவைகளாக, विदधत्–செய்கிறதும், आत्मभासा–தனது ஒளியால், अन्यतेजांसि–மற்ற ஒளிவஸ்துக்களை, अपिदधच्च–மறையும்படி செய்கின்றதும், आश्चर्यस्य–ஆச்சர்யத்திற்கு, आकरः–இருப்பிடமானதும், द्युमणिरिव–சூரியன் போன்றதுமான, कौस्तुभो मणिः–கௌஸ்துப ரத்னம், नः–நமக்கு, भूत्यै–ஐசுவர்யத்தின் பொருட்டு, अस्तु–விளங்கவேண்டும்.

*இச்சுலோகத்தில் சூரியனுடன் ஒப்பிட்டு சிலேடையாக, வர்ணிக்கப்பட்டிருக்கிறது. சூரியன் ஸமுத்திர நடுவிலிருந்து தன் இயற்கை ஒளியுடன் கிளம்பி நீலநிறமான ஆகாயத்தின் கண் விளங்குகிறான். அவ்வாகாயமும் பல நக்ஷத்ரங்களுக்கு இருப்பிட*

மானது அவ்விதமே கௌஸ்துப மணியும் சமுத்திரத்திலிருந்து லக்ஷ்மீ தேவியுடன் பிறந்து நீலவர்ணமும், நக்ஷத்திரங்கள் போன்ற பல முத்துஹாரங்களால் அழகியதுமான விஷ்ணுவின் மார்பு ஸ்தலத்தில் லக்ஷ்மீ தேவியுடனேயே விளங்குகிறது. அவ்விதமே சூர்யமண்டலம்போல் தனது ஒளியின் மிகுதியால் எல்லா திக்குகளையும் பிரகாசப்படுத்துவதாகவும் இதர ஒளியுள்ள வஸ்துக்களை நக்ஷத்ரங்களைப்போன்ற ஆபரணங்களை தனது ஒளியால் மங்கச்செய்கிறதாயும் உள்ள அந்த கௌஸ்துபமணி நமது இஷ்டசித்திகளை அளிக்க விளங்கவேண்டும். (30)

**வைஜயந்தீமாலை :—**

**या वायावानुकूल्यात्सरति मणिरुचा भासमानाऽसमाना**
**साकं साकम्पमंसे वसति विदधती वासुभद्रं सुभद्रम् ।**
**साऽरं सारङ्गसंघैर्मुखरितकुसुमा मेचकान्ता च कान्ता**
**माला मालालितास्मान्न विरमतु सुखैर्योजयन्ती जयन्ती ॥**

யா வாயாவாநுகூல்யாத் ஸரதி மணிருசா
பாஸமாநா஽ஸமாநா
ஸாகம் ஸாகம்பமம்ஸே வஸதி விதததீ வாஸுபத்ரம்
ஸுபத்ரம் ।
ஸா஽ரம் ஸாரங்க ஸங்கைர் முகரித குஸுமா மேசகாந்தா
ச காந்தா
மாலா மாலாலிதாஸ்மான் ந விரமது ஸுகைர்
யோஜயந்தீ ஜயந்தீ ॥

**या**—எந்த ஜயந்தீ என்னும் புஷ்பமாலை, **आनुकूल्यात्**—அநுகூலமாக, **वायौ**—காற்று, **सरति**—வீசும்பொழுது, **साकम्पं**—லேசாக அசைந்துகொண்டு, **मणिरुचा साकं**—ரத்னாபரண ஒளியுடன்கூட, **भासमाना**—விளங்குகிறதாயும், **असमाना**—ஒப்பற்றதாயும், **वासुभद्रं**—மஹாவிஷ்ணுவை, **सुभद्रं**—நன்கு ஸுகமுள்ளவராக, **विदधती**—செய்கிறதாயும், **अंसे**—தோளில், **वसति**—எப்பொழுதும் இருக்கிறதோ, **सा**—அவ்விதமாயும், **सारङ्गसंघैः**—வண்டுக்கூட்டங்களினால், **मुखरितकुसुमा**—ஒலிக்கும்படி செய்யப்பட்ட புஷ்பங்கள் கொண்டதாயும், **मेचकान्ता**—

பச்சைநிற ஓரங்களுடையதாயும், कान्ता-அழகு மிகுந்ததாயும் मालालिता च-லக்ஷ்மீதேவியினால் கொண்டாடப்பட்டதாயும் உள்ள, जयन्ती-ஜயந்தி என்னும் பெயர்பூண்ட, माला-புஷ்ப மாலை अरं-சீக்கிரம், सुखैः-இன்பங்களோடு, अस्मान् - நம்மை, योजयन्ती-சேர்த்துவைப்பதாக இருந்துகொண்டு, न विरमतु-அக்காரியத்திலிருந்து ஓய்வு அடையக்கூடாது.

தோளில் அணியப்பட்ட ஜயந்தீ என்னும் புஷ்பமாலை காற்று வீசும் சமயம் அதற்கேற்றபடி தோளில் உள்ள மணிமாலைகளுடன் சேர்ந்து லேசாக அசைந்து ஆடுவதாயும் ஒளியுடன் கூடியதாயும் ஒப்பற்றதாயும் விஷ்ணுவுக்கு இன்பமளிப்பதாயும் பூவின் வாசனைக்காக சூழும் வண்டினங்களின் ரீங்கார சப்தம் கொண்டதாயும் பச்சைத்தளிர்களால் கருமையான ஓரங்களையுடையதாயும் மிக்க அழகுள்ளதாயும் அழகு தெய்வமான லக்ஷ்மீ தேவியினாலும் கொண்டாடப்பட்டதாயும் உள்ள அந்த ஜயந்திமாலை நம்மை வருக்கும் சீக்கிரம் எல்லா இன்பங்களையும் இடைவிடாது அளிக்க வேண்டும். (34)

பாஹுமூலம் (தோள்):—

हारस्योरुप्रभाभिः प्रतिनववनमालांशुभिः प्रांशुरूपैः
श्रीभिश्चाप्यङ्गदानां शबलितरुचि यन्निष्कभाभिश्च भाति ।
बाहुल्येनैव बद्धाञ्जलिपुटमजितस्याभियाचामहे त-
द्बन्धार्तिं बाधतां नो बहुविहतिकरीं बन्धुरं बाहुमूलम् ॥

ஹாரஸ்யோருப்ரபாபி: ப்ரதிநவ வநமாலாம் ஶுபி:
ப்ராம்ஶுரூபை:
ச்ரீபிச்சாப்யங்கதாநாம் ஶபளிதருசி யந்நிஷ்கபாபிச்ச பாதி ।
பாஹுள்யேனைவ பத்தாஞ்ஜலிபுடமஜிதஸ்யாபி-
யாசாமஹே தத்
பந்தார்த்திம் பாததாம் நோ பஹுவிஹதிகரீம்
பந்துரம் பாஹுமூலம் ॥

हारस्य-முக்தாஹாரத்தினுடைய, उरुप्रभाभिः-அதிககாந்திகளினாலும், प्रांशुरूपैः-மிக்க நீண்ட உருவங்கொண்ட, प्रतिनव-

**वनमालांशुभिः**-புதிய வனமாலையின் ஒளிக்கதிர்களினாலும், **अङ्गदानां**-தோள்வளையல்களுடைய, **श्रीभिश्चापि**-அழகுகளினாலும், **निष्कभाभिश्च**-நிஷ்கமென்னும் தங்க ஆபரணங்களின் ஒளிகளினாலும், **यत्**-எந்த பாஹுமூலம் என்னும் தோள் **शबलितरुचि**-பலநிற ஒளியுள்ளதாக, **भाति**-அழகுற விளங்குகிறதோ, **तत्**-அந்தவிதமான, **अजितस्य**-விஷ்ணுவினுடைய, **बन्धुरं**-அழகிய, **बाहुमूलं**-தோள்பட்டையை, **बद्धाञ्जलिपुटं**-அஞ்சலிபந்தம் செய்த வண்ணம், **बाहुल्येनैव**-அதிகமாகவே, **अभियाचामहे**-வேண்டுகிறோம். அது, **बहुविहतिकरीं**-நல்ல காரியங்களில் மிக்க இடையூறுகளை விளைவிக்கும், **नः**-நம்முடைய, **बन्धार्तिं**-ஸம்ஸாரபந்தத்தாலுண்டாகும் கஷ்டத்தை **बाधताम्**-போக்கவேண்டும்.

பகவானின் இரு தோள்களும் அங்கு ஆபரணமாக அணியப்பட்ட முக்தாஹார பிரபைகளினாலும் அங்கிருந்து தொங்கும் வனமாலா என்னும் புஷ்பமாலையின் நீண்ட வர்ண பிரபைகளினாலும் தோள்களில் அணியப்பட்ட தோள்வளைகள் ஸ்வர்ண ஆபரணங்கள் இவைகளின் ஒளிகளாலும் பலநிற ஒளியுள்ளதாக விளங்குகிறது. நமக்கு எல்லா நற்காரியங்களிலும் பலவித இடையூறைச் செய்தவண்ணம் நம்மைத் துன்புறுத்தும் ஸம்ஸாரபந்தத்தை அறுத்தழிக்கவேண்டுமென அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு, விஷ்ணுவின் அந்தத்தோள்களைப் பன்முறை வேண்டுவோமாக.

**கைகள் :—**

त्रिश्वत्राणैकदीक्षास्तदनुगुणगुणक्षत्रनिर्माणदक्षाः
कर्तारो दुर्निरूपाः स्फुटगुरुयशसां कर्मणामद्भुतानाम् ।
शार्ङ्गं बाणं कृपाणं फलकमरिगदे पद्मशङ्खौ सहस्रं
बिभ्राणाः शस्त्रजालं मम दधतु हरेर्बाहवो मोहहानिम् ॥

விச்வத்ராணைகதீக்ஷாஸ் ததனுகுணகுண க்ஷத்ரநிர்மாண
தக்ஷா:
கர்த்தாரோ துர்நிரூபா: ஸ்புடகுரு யசஸாம் கர்மணாமத்
புதாநாம் ।

ஶார்ங்கம் பாணம் க்ருபாணம் பலகமரிகதே
பத்மஶங்கௌ ஸஹஸ்ரம்
பிப்ராணு: ஶஸ்த்ரஜாலம் மம ததது ஹரேர் பாஹவோ
மோஹஹாநிம் ॥

विश्वत्राणैकदीक्षाः–உலகமனைத்தையும் காப்பாற்றுவதிலேயே திடஸங்கல்பம் கொண்டதுகளாயும், तदनुगुणगुण-क्षत्रनिर्माणदक्षाः–அதற்குத்தகுந்த பராக்ரமம், உத்ஸாஹம், வீரம் முதலிய அரிய குணங்கள் நிரம்பிய க்ஷத்ரிய ஜாதியை சிருஷ்டிப்பதில் சக்தியுடையதுகளாயும், स्फुटगुरुयशसां–உலகம் பரவிய மிகுந்த நற்புகழ்கொண்ட, अद्भुतानां–ஆச்சரியமான, कर्मणां–வீரச்செயல்களை, कर्तारः–செய்கிறதுகளாயும், दुर्निरूपाः–நினைக்கமுடியாத மஹிமை உள்ளதுகளாயும், शार्ङ्ग–சார்ங்கம் என்னும் வில், बाणं–அம்பு, कृपाणं–கத்தி, फलकं–கேடயம், अरिगदे–சக்ரம், கதை, पद्मशङ्खौ–பத்மம் சங்கம் இவைகளையும், सहस्रं–ஆயிரக்கணக்கான शस्त्रजालं – ஆயுதக்கூட்டத்தையும், बिभ्राणाः – தரிப்பவைகளுமான, हरेः–விஷ்ணுவினுடைய, बाहवः–கைகள் मम–எனக்கு, मोहहानिं–மோஹமென்னும் அக்ஞானத்தின் நாசத்தை, दधतु–உண்டுபண்ணவேண்டும். ஆயிரக்கணக்கான பலவித ஆயுதம் தரித்ததாக வர்ணிக்கப்படுவதால் 'सहस्रबाहुः सहस्रपात् सहस्राक्षः सहस्रमूर्धा' என்றபடி விசுவரூபசமயம் பல கைகளில் பல ஆயுதம் ஏந்திய வண்ணம் காக்ஷியளிப்பதுபற்றி இவ்வர்ணனை.

உலகமனைத்தையும் ரக்ஷிப்பதையே விரதமாகக்கொண்டதுகளும், அதற்குத் தகுந்தவாறு அதற்குரிய பலம் உத்ஸாஹம் வீரம் கொண்ட க்ஷத்ரிய ஜாதி அரசர்களை உண்டுபண்ணுகிறதுகளும், சிந்திக்கமுடியாதவைகளும், உலகம் அறிந்த பெரும்புகழ் நிறைந்த ஆச்சரியகரமான பல அமானுஷ காரியங்களைச் செய்தவைகளும் சார்ங்கம் என்னும் வில், பாணம், கத்தி, கேடயம், சக்ரம், பத்மம், சங்கம் இவைகளையும் மற்றும் ஆயிரக்கணக்கான பல ஆயுதங்களையும் தரித்திருப்பவைகளுமான ஸ்ரீவிஷ்ணுவின் கைகள் என்னுடைய அக்ஞான மோஹத்தை அழிக்கவேண்டும். (33)

கண்டம் (கழுத்து) :—

कण्ठाकल्पोद्गतैर्यः कनकमयलसत्कुण्डलोत्थैरुदारै-
रुद्योतैः कौस्तुभस्याप्युरुभिरुपचितश्चित्रवर्णो विभाति ।
कण्ठाश्लेषे रमायाः करवलयपदैर्मुद्रिते भद्ररूपे
वैकुण्ठीयेऽत्र कण्ठे वसतु मम मतिः कुण्ठभावं विहाय ॥

கண்டாகல்போத்கதைர் ய: கநகமயலஸத்
குண்டலோத்தைருதாரை—
ருத்யோதை: கௌஸ்துபஸ்யாப்யுருபிருபசித
ச்சித்ரவர்ணோ விபாதி ।
கண்டாச்லேஷே ரமாயா: கரவலயபதைர் முத்ரிதே பத்ரரூபே
வைகுண்டீயேऽத்ர கண்டே வஸது மம மதி:
குண்டபாவம் விஹாய ॥

य:—எந்தக்கழுத்து, कण्ठाकल्पोद्गतै:—கழுத்தில் அணிந்த ஆபரணங்களிலிருந்து கிளம்புகிறதுகளும், कनकमयलसत्कुण्डलोत्थै:—ஸுவர்ணமயமான ஒளிக்கும் காதுகளிலணியப்பட்ட ரத்னகுண்டலங்களிலிருந்து வெளிக்கிளம்புகிறதுகளும், कौस्तुभस्यापि—மார்பில் அணியப்பட்ட கௌஸ்துப மணியினுடையதுமான, उदारै:—அழகிய, उरुभि:—அதிகமான उद्योतै:—காந்திகளினால், उपचित:—சூழப்பட்டதாக ஆகி; चित्रवर्ण:—பற்பல வர்ணங்களுடையதாக, विभाति—விளங்குகிறதோ அவ்விதமாயும், रमाया:—லக்ஷ்மீதேவி, कण्ठाश्लेषे—கழுத்தைத் தழுவி இறுக ஆலிங்கனம் செய்யும் சமயம், करवलयपदै:—கைகளில் அணிந்த கங்கணங்கள் வளையல்களின் பதிவுகளால், मुद्रिते—அடையாளமிடப்பட்டதும், भद्ररूपे—மிக்க அழகு பொருந்தியதுமான, अत्र—இந்த (தியானம் செய்யும் சமயம் ப்ரத்யக்ஷமாகக்காணும்), वैकुण्ठीये कण्ठे—விஷ்ணுவின் கழுத்தில், मम—என்னுடைய, मति:—புத்தியானது, कुण्ठभावं—மழுங்கிப்போகும் குணத்தை, विहाय—விட்டு, वसतु—வசிக்கவேண்டும். அதையே தியானம் செய்யவேண்டும்,

கழுத்தில் அணியப்படும் ஆபரணங்களினுடையவும் காது களில் அணியப்பட்ட ஸுவர்ண குண்டலங்களுடையவும், மார்பில் அணிந்துள்ள கௌஸ்துபமணியினுடையவும் வீசும் அதிகமான அழகிய பலவர்ண ஒளிகளினால் பற்பல நிறங்கொண்டு சித்ரவர்ண முடையதாக விளங்குவதும், அவ்விதமே லக்ஷ்மீதேவி ஆசையுடன் இறுகத்தழுவி ஆலிங்கனம் செய்யும் சமயம் பதிந்த லக்ஷ்மீ தேவியின் கைவளையல்கள் கங்கணங்களின் சுவடுகளை உடைய தாயும் மிக்க அழகு வாய்ந்ததாயுமுள்ள ஸ்ரீ பகவானின் கழுத்தில் எப்பொழுதும் எனது மனது மழுங்காமல் பற்றுக்கொள்ள வேண்டும். (34)

உதடு :—

पद्मानन्दप्रदाता परिलसदरुणश्रीपरीताग्रभागः
काले काले च कम्बुप्रवरशशधरापूरणे यः प्रवीणः ।
वक्त्राकाशान्तरस्थस्तिरयति नितरां दन्तताराैघशोभां
श्रीभर्तुर्दन्तवासोद्युमणिरघतमोनाशनायास्त्वसौ नः ॥ ३५ ॥

பத்மாநந்த ப்ரதாதா பரிலஸதருணச்ரீபரீதாக்ரபாக:
காலே காலே ச கம்பு ப்ரவர ஶஶதராபூரணே ய: ப்ரவீண: ।
வக்த்ராகாஶாந்தரஸ்தஸ் திரயதி நிதராம்
தந்ததாரௌக ஶோபாம்
ச்ரீபர்துர் தந்தவாஸோ த்யுமணிரகதமோ நாஶ
நாயாஸ்த்வஸௌ ந: ॥

पद्मानन्दप्रदाता—தனது அழகினால் லக்ஷ்மீதேவிக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணுவதும், தனது உதயத்தால் தாமரைகளுக்கு மலர்ச்சியென்னும் ஸந்தோஷத்தை உண்டு பண்ணுவதும், परिलसदरुणश्रीपरीताग्रभागः—ஒளிக்கும் தனது சிவந்த காந்தியினால் சூழப்பட்ட முன்பிரதேசத்தையுடைய தாயும், விளங்கும் அருணன் என்னும் ஸாரதியின் சிவந்த காந்தியினால் சூழப்பட்ட தனது ரதத்தின் முன்புறத்தை யுடையவனாகவும், काले काले च—ஒவ்வொரு வெற்றிபெறும் சமயத்திலும், ஒவ்வொரு சுக்லபக்ஷ ஸமயத்திலும்

**कम्बुप्रवरशशधरापूरणे**-பாஞ்சஜன்யமென்னும் தனது சிறந்த சங்கத்தை அதாகிற சந்திர மண்டலத்தை (காற்றினால் தனது கிரணங்களினால்) நிரப்புவதில், **प्रवीणः**-சக்தியுடைய தாயும், உடையவனாயும், **वक्त्राकाशान्तरस्थः**-முகமத்தியத்தில் இருப்பதும், ஆகாயத்தில் இருப்பவனும் ஆன **यः**-எது, எவன், **दन्ततारौघशोभां**-பற்களாகிற நக்ஷத்திர வரிசையின் ஒளியை, **नितरां**-நன்கு, **तिरयति**-மறையும்படி செய்கிறதோ, **असौ**-அந்த, **श्रीभर्तुः दन्तवासोद्युमणिः**-ஸ்ரீபதி விஷ்ணுவின் சூர்யன்போன்ற உதடு, **नः**-நம்முடைய, **अघतमोनाशनाय**-பாபங்களாகிற இருட்டையழிப்பதின் பொருட்டு **अस्तु**-விளங்கவேண்டும்.

எவ்வாறு சூரியன் தனது உதயத்தினால் தாமரைகளை மகிழ்ந்து மலரச்செய்கிறானோ தனது இரதத்தில் சிவந்த ஒளிவீசும் அருணன் என்னும் சாரதியை முன்வைத்துச் செல்லுகிறானோ, ஒவ்வொரு அமாவாஸை காலத்திலும் ஒளி இழந்து தன்னை அடைந்த சந்திர பிம்பத்திற்கு பூர்ண ஒளிகொடுத்து சுக்லபக்ஷங்களில் பிரகாசிக்கச்செய்கிறானோ, ஆகாயமத்தியில் மிக்க ஒளியுடன் பிரகாசிக்கிறானோ, தனது ஒளிகளால் இதர நக்ஷத்திரங்களை மறையச்செய்கிறானோ, இருட்டையும் அழிக்கிறானோ, அவ்விதமே பகவானின் முகமண்டலத்தின் மத்தியில் விளங்குவதும், தனது அழகினால் லக்ஷ்மீ தேவிக்கு மிக்க ஆனந்தத்தை உண்டுபண்ணுவதும் ஒளிக்கும் சிவந்த காந்திகளால் சூழப்பட்ட முன்புறத்தையுடையதாகவும், அசுரர்களை வென்று ஜயங்கொள்ளும் ஒவ்வொரு சமயத்திலும் ஜயகோஷம் செய்ய பாஞ்சஜன்யமென்னும் சங்கத்தை காற்றினால் நிரப்புவதாயும், பற்கள் வரிசைகளை மறைத்திருப்பதாயுமுள்ள அச்சிவந்த அழகிய உதடும் தியானம் செய்யும் நம்முடைய பாப இருளைப்போக்க வேண்டும். இந்த சுலோகத்தில் ஆகாயத்திலுள்ள சூரியனுக்கு ஒப்பிட்டு அதரம் (உதடு) சிலேடையாக வர்ணிக்கப்படுகிறது. (35)

பற்களின் வரிசை :—

**नित्यं स्नेहातिरेकान्निजकमितुरलं विप्रयोगाक्षमा या**
**वक्त्रेन्दोरन्तराले कृतवसतिरिवाभाति नक्षत्रराजिः ।**

लक्ष्मीकान्तस्य कान्ताकृतिरतिविलसन्मुग्धमुक्तावलिश्री-
र्दन्ताली संततं सा नतिनुतिनिरतानक्षतान्रक्षतान्नः ॥ ३६ ॥

நித்யம் ஸ்நேஹாதிரேகாந்நிஜ கமிதுரலம் விப்ர
யோகாக்ஷமா யா
வக்த்ரேந்தோரந்தராளே க்ருதவஸதிரிவாபாதி
நக்ஷத்ர ராஜி: 1
லக்ஷ்மீகாந்தஸ்ய காந்தாக்ருதிரதிவிலஸன் முக்த
முக்தாவளிச்ரீர்
தந்தாளீ ஸந்ததம் ஸா நதிநுதி நிரதானக்ஷதான்
ரக்ஷதாந்ந: ll

**निजकमितुः**-தன்னிடம் ஆசைகொண்ட, **वक्त्रेन्दोः**-முகமாகிற சந்திரனுடைய, **स्नेहातिरेकात्**-அன்பின் மிகுதியால் **अलं**-மிகவும், **विप्रयोगाक्षमा**-பிரிந்திருப்பதை ஸகிக்காததாய் **अन्तराले**-நாயகனான சந்திரனின் மத்யத்தில் மடியில், **नित्यं**-எப்பொழுதும், **कृतवसतिः**-வாஸம் செய்யும், **नक्षत्रराजिरिव**-நக்ஷத்திர வரிசைபோல, **या**-எது, **आभाति**-தோன்றுகிறதோ, (**नक्षत्रेशः**, **ताराधिपतिः**, **तारानायकः**-என்றவாறு சந்திரன் நக்ஷத்திரங்களின் காதலனாக வர்ணிக்கப்படுகிறான்) **अतिविलसन्मुग्धमुक्तावलिश्रीः**-மிக்க ஒளியுள்ள அழகிய முத்து வரிசையின் சோபையை உடையதும், **कान्ताकृतिः**-மனோரம்யமான உருவ அமைப்பையுடையதாயுமுள்ள, **लक्ष्मीकान्तस्य सा दन्ताली**-விஷ்ணுவின் அந்த பற்களின் வரிசை, **सन्ततं**-எப்பொழுதும், **नतिनुतिनिरतान्**-நமஸ்கரிப்பது, ஸ்துதிப்பது இவைகளில் ஈடுபட்ட, **नः**-நம்மை, **अक्षतान्**-குறைவற்றவர்களாக, **रक्षतात्**-காப்பாற்றவேண்டும்.

பகவானின் பற்களின் வரிசை நக்ஷத்ர வரிசைபோல் ஒளிப்பதால் பற்களாகிற நக்ஷத்ர வரிசை யென்னும் நாயிகை தனது காதலனை முகசந்திரனை விட்டுப் பிரிய மனமின்றி அதன் நடுவிலேயே நித்யவாஸம் செய்கிறதோ என உத்ப்ரேக்ஷிக்கப் படுகிறது. அழகிய அமைப்பையுடையதாயும் நிர்மலமுத்துக்களின் வரிசைபோல் அழகாக விளங்குவதாயும் உள்ள அந்த லக்ஷ்மீபதி

யின் தந்தவரிசை சதாகாலம் நமஸ்கரிப்பதிலும் துதி செய்வதிலுமேயே ஈடுபட்டுள்ள நம்மை எப்பொழுதும் ஒரு விதக்குறைவுமற்றவர்களாகக் காக்கவேண்டும். (36)

வசநாம்ருதம் :—

ब्रह्मन्ब्रह्मण्यजिह्मां मतिमपि कुरुषे देव संभावये त्वां
शंभो शक्र त्रिलोकीमवसि किममरैर्नारदाद्याः सुखं वः ।
इत्थं सेवावनम्रं सुरमुनिनिकरं वीक्ष्य विष्णोः प्रसन्न-
स्यास्येन्दोरास्रवन्ती वरवचनसुधा ह्लादयेन्मानसं नः ॥

ப்ரஹ்மன் ப்ரஹ்மண்யஜிஹ்மாம் மதிமபி குருஷே தேவ
ஸம்பாவயே த்வாம்
ஶம்போ ஶக்ர த்ரிலோகீமவஸி கிமமரைர் நாரதாத்யா:
ஸுகம் வ: I
இத்தம் ஸேவாவநம்ரம் ஸுரமுநிநிகரம் வீக்ஷ்ய
விஷ்ணோ: ப்ரஸந்நஸ்-
யாஸ்யேந்தோராஸ்ரவந்தீ வரவசநஸுதா
ஹ்லாதயேன் மாநஸம் ந: II

हे शम्भो–ஏ பரமசிவ ! देव–தேவர்களுக்கும் தேவனாக விளங்குபவரே, त्वां–உம்மை, सम्भावये–மதித்து ஸத்காரம் செய்கிறேன், हे ब्रह्मन्–ஹே பிரும்மனே, ब्रह्मणि–வேதம் ஓதுவதில் பிரம்ம விசாரத்தில், अजिह्मां–சோம்பலற்ற, मतिं–புத்தியை, अपि कुरुषे-செலுத்துகிறாயா ? शक्र ! ஹே இந்திர, अमरैः-தேவர்களுடன்கூட, त्रिलोकीं-முவ்வுலகையும், किमवसि-ரக்ஷித்து வருகிறாயா ! नारदाद्याः-ஹே நாரதர் முதலிய முனி புங்கவ பக்தர்களே ! वः–உங்களுக்கு, सुखम् ? சுகம்தானே ! इत्थं–இவ்வாறு, सेवावनम्रं–ஸேவிக்கும் ஸமயம் தலைவணங்கி நிற்கும், सुरमुनिनिकरं–தேவர்கள் முனிவர்களின் கூட்டத்தை, वीक्ष्य-பார்த்து, प्रसन्नस्य–பிரஸன்னமனதுடைய, विष्णोः-விஷ்ணுவினுடைய, आस्येन्दोः – முகமாகிற சந்திர மண்டலத்திலிருந்து, आस्रवन्ती – பெருகும், वरवचनसुधा–சிரேஷ்டமான வார்த்தைரூபமான அமிருதம், नः-நம்முடைய,

**मानसं**-மனதை, **ह्लादयेत्**-சந்தோஷமடையச் செய்ய வேண்டும்.

தேவர்களும் முனிவர்களும் வைகுண்டத்தில் பகவானை வணங்கித் துதி செய்துகொண்டிருக்கும் சமயத்தில் அவர்களைக் கடைக்கண்ணால் நோக்கி அன்புகொண்டு அவர்களை யோக க்ஷேமம் விசாரிக்கும் பகவானது முக சந்திரமண்டலத்திலிருந்து வெளிவரும் வாக்யரூப அமிருததாரையை வர்ணிக்கிறார். ஹே சம்போ! தேவாதிதேவ! உங்களை எனக்குச் சமமாக மதிக்கிறேன், ஹே பிரும்மன்! நீர் உமது கடமையாகிற வேதம் ஓதுவதிலும் பரபிரம்மாத்ம விசாரம் செய்வதிலும் சோம்பல் இன்றி ஈடுபட்டு வருகிறீரா! ஹே இந்திரா! நீ உனக்கு அளிக்கப்பட்ட பதவியை அனுசரித்து தேவர்களுடன் மூவுலகையும் அரசாட்சி செலுத்திக் காப்பாற்றி வருகிறாயா? நாரதாதிகளான ஹே முனிசிரேஷ்டர்களே! நீங்கள் யாவரும் சுகமா! என்று இவ்விதமாக முக கமலத்திலிருந்து வெளிவரும் விஷ்ணுவின் அமிருதமொழி தாரை நம் மனதை சந்தோஷப்படுத்தட்டும், சந்திரமண்டலத்திலிருந்து அமிருததாரை பெருகி சந்தோஷப் படுத்துவது இயற்கைபோல் பகவானது முக சந்திரபிம்பத்திலிருந்து இவ்வரிய அமிர்தமொழிதாரை வெளிவருவதும் சந்தோஷமடையச் செய்வதும் இயற்கையே. (37)

**கபோலம் (கன்ன ப்ரதேசம்) :—**

**कर्णस्थस्वर्णकम्रोज्ज्वलमकरमहाकुण्डलप्रोतदीप्य-**
**न्माणिक्यश्रीप्रतानैः परिमिलितमलिश्यामलं कोमलं यत् ।**
**प्रोद्यत्सूर्यांशुराजन्मरकतमुकुराकारचोरं मुरारे-**
**र्गाढामागामिनीं नः शमयतु विपदं गण्डयोर्मण्डलं तत् ॥**

கர்ணஸ்த ஸ்வர்ண கம்ரோஜ்வல மகர மஹா குண்டல
ப்ரோத தீப்யன்
மாணிக்யச்ரீப்ரதாநை: பரிமிளித மளிச்யாமளம்
கோமளம் யத் ।
ப்ரோத்யத் ஸூர்யாம்சுராஜன் மரகத முகுராகார
சோரம் முராரே:
காடாமாகாமிநீம் ந: சமயது விபதம் கண்டயோர்
மண்டலம் தத் ॥

**यत्**—எந்த கன்னப்ரதேசம், **कर्णस्थस्वर्णकम्रोज्ज्वलमकरमहाकुण्डल**-காதுகளிலுள்ள ஸ்வர்ணமயங்களும் மிக்க அழகுடையதுகளும், பிரகாசிப்பதுகளுமான மகரஉருவமுடைய பெரியகுண்டலங்களெனும் காதணிகளில், **प्रोतदीप्यन्माणिक्य**-பதிக்கப்பட்ட ஒளிவீசும் பத்மராககற்களின், **श्रीप्रतानैः**—அழகுப்பெருக்குகளோடு, **परिमिलितं**-சேர்ந்ததும், **अलिश्यामलं**-வண்டுபோல் கருநிறம் கொண்டதும், **कोमलं**-மிருதுவானதும், **प्रोद्यत्सूर्य**-உதிக்கும் சூர்யனுடைய, **अंशु**—கிரணங்களால் **राजन्मरकतमुकुराकारचोरं** – விளங்கும் மரகதக் கண்ணுடியின் உருவத்தையொத்ததாயும் உள்ளதோ, **तत्**-அவ்விதமான, **मुरारेः गण्डयोः मण्डलं** விஷ்ணுவின் இரு கன்னபிரதேசங்களின் மண்டலம், **नः**—நமக்கு, **आगामिनीं** – வரப்போகும், **गाढां**—பலமிக்க, **विपदं**—ஆபத்தை, **शमयतु**—போக்கவேண்டும்.

"**कर्णा वेधव्यथा कर्णा कष्टश्च वहनक्रमः कपोलस्य तु कुण्डलम्**" – என்று முராரிகவி கூறியவாறு, காதுகளில் அணியப்படும் குண்டலாபரணங்களினல் கன்னப்ரதேசம் அலங்கரிக்கப்படுகிறது. பகவானின் காதுகளில் பிரகாசிக்கும் அழகிய ஸ்வர்ணமய மகர குண்டலங்களில் பதிந்துள்ள பத்மராகக் கற்களின் சிவந்த ஒளிகளின் மண்டலங்களோடு சேருவதும் விஷ்ணுவின் சரீரமானதால் இயற்கையில் வண்டுபோல கருநிறம் கொண்டதுமான அந்தக் கன்னப்ரதேசம் உதிக்கும் சூரியனின் செங்கதிர்களினல் பிரகாசிக்கும் மரகதக் கண்ணுடியின் உருவத்தை ஒப்பிடத்தக்கதாகவுள்ளதென வர்ணிக்கப்படுகிறது. அவ்விதமான மிருதுவான அழகிய விஷ்ணுவின் அவ்விரு கன்னங்களின் மண்டலம் நமது பூர்வ ஜன்ம கர்ம வினைவாக நம்மை வந்து வாட்டவிருக்கும் பலமிக்க ஆபத்தை அவ்வாறு வாட்டாமல் சாந்தமாகும்படி செய்யவேண்டும். (38)

**நாஸிகை (மூக்கு) :—**

वक्त्राम्भोजे लसन्तं मुहुरधरमणिं पक्वबिम्बाभिरामं
दृष्ट्वा दष्टुं शुकस्य स्फुटमवतरतस्तुण्डदण्डायते यः ।
घोणः शोणीकृतात्मा श्रवणयुगलसत्कुण्डलोस्रैर्मुरारेः
प्राणाख्यस्यानिलस्य प्रसरणसरणिः प्राणदानाय नः स्तात् ॥

வக்த்ராம்போஜே லஸந்தம் முஹுரதரமணிம்
பக்வ பிம்பாபிராமம்
த்ருஷ்ட்வா தஷ்டும் ஶுகஸ்ய ஸ்புடமவதரதஸ்
துண்ட தண்டாயதே ய: 1
கோண: ஶோணீக்ருதாத்மா ச்ரவணயுக லஸத்
குண்டலோஸ்ரைர் முராரே:
ப்ராணாக்யஸ்யாநிலஸ்ய ப்ரஸரண ஸரணி: ப்ராண
தாநாய ந: ஸ்தாத் 11

य:-எந்த பகவானின் மூக்கு, वक्त्राम्भोजे-பகவானின் முககமலத்தில், मुहुः-எப்பொழுதும், लसन्तं-பிரகாசிப்பதும், पक्वबिम्बाभिरामं-பழுத்த கோவைப்பழம்போல் விளங்குவது மான, अधरमणिं-சிறந்த சிவந்த உதடை, दृष्ट्वा-பார்த்து, (கோவைப்பழம் என பிரமித்து) दष्टुं-கொத்திச் சாப்பிடு வதற்கு, अवतरतः-இறங்கும், शुकस्य-கிளியின், स्फुटं तुण्ड-दण्डायते-நீண்ட மூக்குப்போல நன்கு விளங்குகிறதோ, श्रवण-युगलसत्कुण्डलोस्रैः-காதுகளில் ஒளிக்கும் குண்டலங்களின் (பத்மராக கற்களின்) கிரணங்களால், शोणीकृतात्मा-சிவந்த உருவம் அடைந்ததும், प्राणाख्यस्य-பிராணன் என்ற பெயர் உள்ள, अनिलस्य-காற்றினுடைய, प्रसरणसरणिः-செல்லும் வழியாகவும் உள்ள, मुरारेः घोणः-விஷ்ணுவின் மூக்கு, नः-நமக்கு, प्राणदानाय-பிராணனைக் கொடுத்து ரக்ஷிக்க, स्तात्-விளங்கவேண்டும்.

பகவானின் முககமலத்தில் நன்கு பழுத்த கோவைப்பழம் போல் எப்பொழுதும் விளங்கும் சிறந்த உதடைப் பார்த்து கோவைப்பழமே இது என பிரமம் கொண்டுக் கொத்திச்சாப்பிட வரும் கிளியின் மூக்கு அலகுபோல் பகவானின் மூக்கு விளங்கு கிறது. கிளியின் மூக்கு நீண்டு அடிப்புரத்தில் சிறிது கருத்து மேல்புரத்தில் சிவந்து இருப்பதுபோல் பகவானின் மூக்கும் ஸாமுத்ரிகா லக்ஷணப்படி நன்கு நீண்டும் விஷ்ணுவின் உருபு ஆதலால் கருத்தும் காதுகளில் உள்ள குண்டலங்களிலுள்ள பத்மராகக்கற்களின் சிவந்த கதிர்களால் சிவந்தும் பிரகாசிப்ப தால் கிளியின் மூக்குப்போல என ஒப்பிட்டது பொருத்தமே. அவ்விதமாயும் பகவானின் மூச்சுக் காற்றுச் செல்லும் வழியாக

அமைந்துள்ளதுமான அம்முக்கு தியானம் செய்யும் நமக்கு ப்ராண (39)
தானம் செய்து அனுக்ரஹிக்கவேண்டும்.

இரு கண்கள் :—

दिक्कालौ वेदयन्तौ जगति मुहुरिमौ संचरन्तौ रवीन्दू
त्रैलोक्यालोकदीपावभिदधति ययोरेव रूपं मुनीन्द्राः ।
अस्मानब्जप्रभे ते प्रचुरतरकृपानिर्भरं प्रेक्षमाणे
पातामाताम्रशुक्लासितरुचिरुचिरे पद्मनेत्रस्य नेत्रे ॥ ४० ॥

திக்காலௌ வேதயந்தௌ ஜகதி முஹுரிமௌ
ஸஞ்சரந்தௌ ரவீந்தூ
த்ரைலோக்யா லோகதீபாவபிதததி யயோரேவ
ரூபம் முநீந்த்ரா: ।
அஸ்மானப்ஜப்ரபே தே ப்ரசுரதர க்ருபா நிர்பரம்
ப்ரேக்ஷமாணே
பாதாமாதாம்ர ஶுக்லாஸிதருசி ருசிரே பத்மநேத்ரஸ்ய
நேத்ரே ॥

**मुहुः**-சதாகாலம், **सञ्चरन्तौ**-ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருப்பவர்களும், (அதனால்) **जगति** - உலகத்தில், **दिक्कालौ**-திக்கு, காலம் இவைகளை **वेदयन्तौ**-அறிவிக்கிறவர்களாயும், **त्रैलोक्यालोकदीपौ**-மூவ்வுலகத்திற்கும் ப்ரகாசமளிக்கும் இரு தீபங்கள் போன்றவர்களாயுமுள்ள, **इमौ**-இந்த **रवीन्दू** - சூர்யன் சந்திரன் இவ்விருவர்களையும், **मुनीन्द्राः**-உலகத்தின் தத்வம் கண்ட முனிவர்கள், **ययोः**-எவைகளுடைய, **रूपमेव**-ஸ்வரூபமாகவே, **अभिदधति** - (வேதம் புராணங்கள் வாயிலாக) கூறுகிறார்களோ, **अब्जप्रभे**-இரு தாமரைமலர் ஒளியையுடையதாகவும், **आताम्रशुक्लासितरुचिरुचिरे**-கொஞ்சம் சிவந்தும் வெண்ணிறமும் கருநிறமும் கொண்ட காந்தியினால் அழகுடையதுகளுமான, **पद्मनेत्रस्य ते नेत्रे**-கமலக்கண்ணனுடைய அவ்வித இரு கண்களும், **अस्मान्**-பக்தர்களாகிற நம்மை, **प्रचुरतरकृपानिर्भरं** - மிகுந்த கருணை நிறைந்ததாக **प्रेक्षमाणे सती**-பார்ப்பதாக ஆகி, **पाताम्**-ரக்ஷிக்கவேண்டும்.

தங்களது இடைவிடாத சஞ்சாரத்தினலும் உதயாஸ்தமனங்களினலும் உலகிற்கு க்ஷணம், மணி, தினம் மாதம், வருஷம், யுகம் முதலிய காலபேதங்களையும் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு முதலிய திக்விபாகங்களையும் கணித்து அறிய சாதகமாயுள்ள சந்திரன் சூர்யன் இவ்விருவர்களும் விராட் ரூபியான எந்த பகவானின் இரு நேத்ரங்கள் என உலக இயல்பு அறிந்த முனி புங்கவர்கள் வேதம், புராணங்கள் மூலம் கூறுகிறர்களோ; மூவுலகங்களுக்கும் ஒளியைத்தரும் மங்காத இரு தீபங்களாக எந்த சூர்யன் சந்திரன் உருவமான இரு நேத்திரங்கள் விளங்குகின்றனவோ, கருவிழிபிரதேசம் கருத்தும் சுற்றிலும் வெண்ணிறம் கொண்டும் வெளிப்புறம் கொஞ்சம் சிவந்தும் உள்ள நிறங் கொண்டு அழகுடன் மிளிர்வதுமான செந்தாமரைக் கண்ணனை பகவானின் அவ்விரு நேத்திரங்களும் நம்மை மிக்கக் கருணை கொண்டு பார்த்துக் காத்து ரக்ஷிக்கவேண்டும். (40)

இரு புருவங்கள் :—

पातात्पातालपातात्पतगपतिगतेर्भ्रूयुगं भुग्नमध्यं
येनेषच्चालितेन स्वपदनियमिताः सासुरा देवसंघाः ।
नृत्यल्लालाटरङ्गे रजनिकरतनोरर्धखण्डावदाते
कालव्यालद्वयं वा विलसति समया वालिकामातरं नः ॥

பாதாத் பாதாளபாதாத் பதகபதிகதேர் ப்ரூயுகம்
புக்னமத்யம்
யேநேஷச்சாலிதேன ஸ்வபத நியமிதா: ஸாஸுரா
தேவஸங்கா: 1
ந்ருத்யல்லாலாடரங்கே ரஜநிகரதனோரர்த்த கண்டாவதாதே
கால வ்யாளத்வயம் வா விலஸதி ஸமயா வாளிகா
மாதரம் ந: ll

ईषच्चालितेन–கொஞ்சம் அசைக்கப்பட்ட, येन–எந்த புருவத்தினல், सासुराः–அசுரர்களுடன்கூடிய, देवसंघाः–தேவக் கூட்டங்கள், स्वपदनियमिताः–தங்கள் ஸ்தானங்களில் அமர்த்தப்படுகிறர்களோ, यत्–எது, रजनिकरतनोः–சந்திர மண்டலத்தின், अर्धखण्डावदाते–அரைவட்டம்போல் சுத்த

மான, **ललाटरङ्गे**-நெற்றியென்னும் மேடையில், **वालिकामातरं समया**-வாளி என்னும் கர்ணபூஷணமாகிற தாயின் சமீபம் **नृत्यत्**-நாட்யமாடுகிற, **कालव्यालद्वयं वा**-இரு கிருஷ்ணசர்ப்பம் போல், **विलसति**-தோன்றுகிறதோ அவ்விதப் பெருமை பொருந்தியதும், **भुग्नमध्यं**-நடுவில் அழுந்தியதாயும் வளைந்ததாயும் உள்ள, **पतगपतिगतेः भ्रूयुगं**-பக்ஷிராஜன்மேல் ஏறி உலாவும் விஷ்ணுவினுடைய இரு புருவமும், **नः**-நம்மை, **पातालपातात्**-நரக வீழ்ச்சியிலிருந்து, **पातात्**-ரக்ஷிக்க வேண்டும்.

*பகவானின் இரு புருவ அசைப்புகளினலேயே அவர் இச்சைப்படி உலகில் அசுரர்களோ தேவர்களோ தங்கள் ஸ்தானங்களைப்பெற்று வஹிக்கிருர்கள். சந்திரமண்டலத்தின் அரைவட்டம்போல் அழகிய நெற்றியென்னும் மேடையில் வளைந்து நீண்டிருக்கும், வாளி என்னும் கர்ணபரணமாகிற தாய்ப் பாம்பின் ஸமீபம் ஆனந்தமாக நர்த்தனம் செய்யும் இரு கருநாகம் போல் எது விளங்குகிறதோ அவ்விதமானதும் நடுவில் வளைந்தது மான பக்ஷிராஜனை கருடவாஹனத்தில் ஏறிச்செல்லும் விஷ்ணு வின் இருபுருவமும் நம்மை பாப கர்மாவின் பயனுக வர இருக்கும் பாதாளத்திற்கு ஒப்பான நரகபாதத்திலிருந்து காப்பாற்றட்டும்.*

**लक्ष्माकारालकालिस्फुरदलिकशशाङ्कार्धसंदर्शमील-**
**न्नेत्राम्भोजप्रबोधोत्सुकनिभृततरालीनभृङ्गच्छटाभे ।**
**लक्ष्मीनाथस्य लक्ष्यीकृतविबुधगणापाङ्गबाणासनार्ध-**
**च्छाये नो भूरिभूतिप्रसवकुशलते भ्रूलते पालयेताम् ॥**

லக்ஷ்மாகாராளகாளி ஸ்புரதளிக ஶஶாங்கார்த்த
ஸந்தர்ஶ மீலந்
நேத்ராம்போஜ ப்ரபோதோத்ஸுக நிப்ருததராலீந
ப்ருங்கச்சடாபே ।
லக்ஷ்மீநாதஸ்ய லக்ஷ்யீக்ருத விபுதகணாபாங்க
பாணாஸநார்த்த
ச்சாயே நோ பூரிபூதிப்ரஸவ குஶலதே ப்ரூலதே
பாலயேதாம் ॥

**लक्ष्माकारालकालिस्फुरत्** -மத்தியிலுள்ள களங்கம்போல் உருவமமைந்த சுருண்ட கேசவரிசையுடன் விளங்கும், **अलिकशशाङ्कार्धे**-நெற்றியாகிற அரைவட்ட சந்திரனுடைய (நெற்றியை அரைவட்டச் சந்திரனாக வர்ணிப்பது கவி சம்ப்ரதாயம். அந்நெற்றியில் தொங்கும் சூர்ண குந்தளங்கள் அச்சந்திரனில் மத்தியில் விளங்கும் கருத்த களங்கமாகவும் வர்ணிக்கப்படுகிறது.) **सन्दृशि**-பார்வையினால், **मीलन्नेत्राम्भोज**-மூடும் கண்களாகிற தாமரை மலர்கள், **प्रबोधोत्सुक**-மலருவதில் (விழிப்பதில்) அவாக்கொண்டதும், **निभृततरालीन**-சந்தடியின்றி மறைந்தும் ஒட்டிக்கொண்டுமிருக்கிற **भृङ्गच्छटाभे**-வண்டு வரிசையின் அழகையுடையதும், **लक्ष्यीकृत** – குறியாகச்செய்யப்பட்ட, **विबुधगण**-தேவக்கூட்டங்களையுடைய, **अपाङ्गबाण**-கடைக்கண் பார்வையாகிற பாணங்கள் தொடுக்கும், **आसनार्धच्छाये**-சிறந்த வில்லின் பாதிவடிவ அழகைக்கொண்டதுகளும், **भूरिभूतिप्रसवकुशलते**-அதிக ஐச்வர்யத்தை (பக்தர்களுக்கு) உண்டுபண்ணுவதில் திறமையுள்ளதுகளுமான, **लक्ष्मीनाथस्य भ्रूलते**-லக்ஷ்மீபதி விஷ்ணுவினுடைய கொடிகள் போன்ற இரு புருவங்களும், **नः**-நம்மை **पालयेताम्** – காப்பாற்றவேண்டும்.

*பகவானின் நெற்றி அரைவட்ட சந்திரமண்டலம்போல் உள்ளதென்றால் அதில் தொங்கும்கருநிறம் கொண்ட சூர்ணகுந்தளம் அச்சந்திரமண்டலத்தின் நடுவிலுள்ள கருத்த களங்கம்போல் விளங்குகிறது எனலாம். அவ்வித நெற்றியாகிற சந்திரன் பார்ப்பதால், பகவானின் கண்களாகிற தாமரை மலர்கள் மூடுவதும் இயல்பே. அவ்விதம் மூடி உறங்கும் நேத்ர தாமரை மலர்கள் மலருவதில், விழித்துக்கொள்வதில் மிக ஆவலுள்ளவைகளாக (மகரந்தம் சாப்பிடுவதற்காக) அதன் அருகிலேயே அசைவின்றி ஒட்டிக்கொண்டிருக்கும் வண்டுகள் போல் இரு புருவங்களும் விளங்குகின்றன. பகவானின் கடைக்கண் பார்வைகள் எப்பொழுதும் தனது பக்தர்களான தேவர்களைக் காக்கும் நிமித்தம் அவர்கள் மேலேயே விழுவதால், அக்கடைக்கண்பார்வைகளாகிற பாணங்கள் ஸஜ்ஜமாகத் தொடுக்கப்பட்டிருக்கும் இரு வில்லுகளோவெனவும் அவ்விரு புருவங்கள் வர்ணிக்கப்படுகின்றன.*

எல்லா பக்தர்களுக்கும் ஏராளமான ஐசுவர்யங்களை உண்டு பண்ணுவதில் மிகத்திறமை வாய்ந்தவை அப்புருவங்கள். இவ்விதம் பலவாறு உத்ப்ரேக்ஷிக்கப்படும் பகவானின் கொடிகள் போன்ற அவ்விரு புருவங்களும் நம்மைக் காக்கவேண்டும். (42)

ஊர்த்வ புண்ட்ரம்:—

रूक्षस्मारेक्षुचापच्युतशरनिकरक्षीणलक्ष्मीकटाक्ष-
प्रोत्फुल्लत्पद्ममालाविलसितमहितस्फाटिकैशानलिङ्गम् ।
भूयाद्भूयो विभूत्यै मम भुवनपतेर्भ्रूलताद्वन्द्वमध्या-
दुत्थं तत्पुण्ड्रमूर्ध्वं जनिमरणतमःखण्डनं मण्डनं च ॥ ४३ ॥

ரூக்ஷ ஸ்மாரேக்ஷு சாப ச்யுத ஶர நிகர க்ஷீண
லக்ஷ்மீகடாக்ஷ
ப்ரோத்புல்லத் பத்மமாலா விலஸித மஹித
ஸ்பாடிகைஶாந லிங்கம் ।
பூயாத் பூயோ விபூத்யை மம புவநபதேர் ப்ரூலதா
த்வந்த்வ மத்யா—
துத்தம் தத் புண்ட்ரமூர்த்வம் ஜநிமரண தம: கண்டநம்
மண்டநம் ச ॥

रूक्षस्मारेक्षुचापच्युत-வலுமிக்க மன்மதனின் கரும்புமயமான வில்லிலிருந்து வெளிக்கிளம்பிய (மன்மதனுக்குக் கரும்புதான் வில்), शरनिकर – பாணக்குவியல்களினால், क्षीण-க்லேசமடைந்த, लक्ष्मीकटाक्ष-லக்ஷ்மியின் கடாக்ஷமாகிற, प्रोत्फुल्लत्पद्ममाला-நன்கு மலர்ந்த தாமரை மலர் மாலையினால், विलसित-ப்ரகாசிப்பதும், महित-பூஜிக்கத் தக்கதுமான, स्फाटिकैशानलिङ्ग-ஸ்படிகமயமான சிவலிங்கமாக (சிவலிங்கம்போல) விளங்குவதும், जनिमरणतमःखण्डनं-பிறப்பு இறப்பு என்னும் நோய்களுக்குக் காரணமான அஞ்ஞானம் என்னும் இருளைப்போக்கடிப்பதாயும், मण्डनं च-(நெற்றிக்கு) அலங்காரமாயும், भुवनपतेः-உலகிற்கதிபனான விஷ்ணுவினுடைய, भ्रूलताद्वन्द्वमध्यात् -இரு புருவக்கொடிகளின் நடுவிலிருந்து, ऊर्ध्वं-உயர நோக்கி, उत्थं-கிளம்புவ

தாயும் உள்ள, तत्- அந்த, ऊर्ध्वं पुण्ड्रं-மேல்நோக்கிய புண்ட்ரம், (நெற்றிக்குறி) मम—என்னுடைய, भूयोविभूत्यै —அதிக ஐசுவரியத்தின் பொருட்டு, भूयात् —விளங்கவேண்டும்.

பகவானின் நெற்றியில் இடப்பட்டுள்ள ஊர்த்வ புண்ட்ரம் வெண்மை நிறமுள்ளதாயிருப்பதால் அதை ஸ்படிக மயமான சிவலிங்கமாக வர்ணிக்கிறார். மன்மதன் தன் கரும்பு வில்லிலிருந்து கடுமையான பல பாணங்களை லக்ஷ்மியைக் குறித்துவிடுகிறான். அதனால் அவள் ஆசையுடன் பகவான் விஷ்ணுவை நெருங்குகிறாள். அவரோ ஆத்மாராமராகவும் ஸ்வதந்திரராகவும் இருப்பதால் இவளை கவனிக்கவில்லை. லக்ஷ்மியோ அவர் முகத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறாள். இதைக் கவனிக்கும்பொழுது காமனால் துன்பமடைந்த லக்ஷ்மீதேவி தனது கடாக்ஷமாகிற தாமரை மாலையால் ஊர்த்வபுண்ட்ர உருவத்துடன் விளங்கும் ஸ்படிக சிவலிங்கத்தைப் பூஜித்து காமாரியான பரமசிவனிடம் காமனின் சேஷ்டைகளைக் கூறி அவனை அடக்கும்படி வேண்டுகிறாளோ என்று தோன்றுகிறது. அவ்விதமானதும் உலக பதியான விஷ்ணுவின் புருவ மத்யத்திலிருந்து மேல் நோக்கி இடப்பட்டதும் பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸார பந்தத்திற்கு மூல காரணமான அக்ஞானம் என்னும் இருளைப் போக்குவதும், பகவானின் நெற்றிக்கு அலங்காரமாக விளங்குவதுமான அப் புண்ட்ரம் பக்தனை என்னுடைய க்ஷேமத்தின் பொருட்டு நன்கு விளங்கவேண்டும். (43)

லலாடம் (நெற்றி):—

पीठीभूतालकान्तं कृतमकुटमहादेवलिङ्गप्रतिष्ठे
लालाटे नाट्यरङ्गे विकटतरतटे कैटभारेश्चिराय ।
प्रोद्घाट्यैवात्मतन्द्रीप्रकटपटकुटीं प्रस्फुरन्ती स्फुटाङ्गं
पट्वीयं भावनाख्यां चटुलमतिनटी नाटिकां नाटयेन्नः ॥

பீடீபூதாளகாந்தம் க்ருதமகுட மஹாதேவ லிங்க ப்ரதிஷ்ட்டே
லாலாடே நாட்யரங்கே விகடதரதடே கைடபாரேச்சிராய ।
ப்ரோத்காட்யைவாத்ம தந்த்ரீ ப்ரகட படகுடீம் ப்ரஸ்புரந்தீ ஸ்புடாங்கம்
பட்வீயம் பாவநாக்யாம் சடுலமதிநடீ நாடிகாம் நாடயேந்ந: ॥

**पीठीभूतालकान्तं**-கேசமூலத்தை அடிப்பீடமாக வைத்து, **कृतमकुटमहादेवलिङ्गप्रतिष्ठे**-ப்ரதிஷ்டை செய்யப்பட்ட மகுடமாகிற மஹாதேவலிங்கத்தையுடையதும், **विकटतरतटे**-மிக்க விசாலமான இடத்தையுடையதுமான, **कैटभारेः**-விஷ்ணுவின், **ललाटे नाट्यरङ्गे**-நெற்றியாகிற நாட்டிய மேடையில், **आत्मतन्द्रीप्रकटपटकुटीं**-தனது சோம்பலாகிற நன்கு காணும் திரையை **प्रोद्धाट्यैव**-விலக்கிக்கொண்டே, **स्फुटाङ्गं**-வியக்தமாகத்தெரியும் தனது அவயவங்களையுடையதாக, **प्रस्फुरन्ती**-விளங்கிக்கொண்டு, **इयं**-இந்த, **पट्वी**-சாமர்த்தியமுடைய, **नः चटुलमतिनटी**-நம்முடைய அதிசஞ்சலமான புத்தியாகிற நாட்யப்பெண், **चिराय**-வெகுகாலம், **भावनाख्यां**-தியானித்தல் என்னும் பெயருடைய, **नाटिकां**-நாடகத்தை, **नाटयेत्**-அபிநயித்துக் காட்டவேண்டும். (எமது புத்தி விருத்தி எப்பொழுதும் பகவானின் நெற்றியைத் தியானிப்பதிலேயே ஈடுபட்டிருக்கவேண்டுமென்பது கருத்து.)

ஸ்ரீவிஷ்ணுவின் அதிவிசால நெற்றிப்ரதேசம் ஓர் நாட்டிய அரங்கத்திற்குச் சமானம். நெற்றியின்மேல் அணியப்பட்டிருக்கும் கிரீடம் நாட்ய சாலையில் மேல்புறத்தில் விளங்கும்படி வைக்கப் பட்டிருக்கும் சிவலிங்கத்திற்குச் சமமானது. உத்தம தேவதா ஸந்நிதியில் தேவதாப்ரீதியாக நாட்யமாடுவது அவசியமானபடியாலும், நடராஜனை பரமசிவனே நாட்யத்திற்கு அதிஷ்டான தேவதையானபடியாலும், நாட்ய மண்டபத்தில் பரமசிவ மூர்த்தியை அமைக்கவேண்டுமென பரத முனிவர் கூறியிருப்பதாலும், இங்கு பகவானின் லலாடமாகிற நெற்றியின் மேலே கேசமூலமாகிற பீடத்தில் மகுடமாகிற சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதாகக் கூறுகிருர். அந்நாட்டிய மண்டபம் போன்ற விஷ்ணுவின் நெற்றியில் சதா சோம்பல் என்னும் திரை மண்டபத்தில் மறைந்து கிடக்கும் நமது புத்தி விருத்தியாகிற நாட்டியம் செய்யும் நர்த்தக ஸ்திரீ அந்த சோம்பல் ரூபமான திரையை ஒதுக்கிக்கொண்டு நெற்றியாகிற நாட்டியமண்டபத்தில் சதா நன்கு கூத்தாடி அபினயிக்கவேண்டும். நமது சஞ்சலமான புத்திவிருத்தியாகிற நர்த்தக ஸ்திரீ பகவானின் நெற்றியைத் தியானம் செய்வதிலேயே ஈடுபடவேண்டும். அவ்விதம் தியானம் செய்வதே ஓர் நாடக அபினயமாகும் என வர்ணனை. (44)

சூர்ண குந்தளம் :—

मालाली वालिधाम्नः कुवलयकलिता श्रीपतेः कुन्तलाली
कालिन्द्यारुह्य मूर्ध्नो गलति हरशिरःस्वर्धुनीस्पर्धया नु ।
राहुर्वायाति वक्त्रं सकलशशिकलाभ्रान्तिलोलान्तरात्मा
लोकैरालोक्यते या प्रदिशतु सततं साखिलं मङ्गलं नः ॥

மாலாளீ வாளிதாம்ந: குவலயகலிதா ச்ரீபதே: குந்தளாளீ
காளிந்த்யாருஹ்ய மூர்த்நோ களதி ஹரசிர:
ஸ்வர்துநீஸ்பர்த்தயா நு ।
ராஹுர்வாயாதி வக்த்ரம் ஸகல சசிகலா ப்ராந்தி
லோலாந்தராத்மா
லோகைராலோக்யதே யா ப்ரதிசது ஸததம் ஸாகிலம்
மங்களம் ந: ॥

कुवलयकलिता—நீலோத்பல புஷ்பங்களினால் தொடுக்கப் பட்ட, मालाली वा—மாலைகளின் வரிசையோ? हरशिरःस्वर्धुनी-स्पर्धया—பரமசிவன் தலையின்மேல் விளங்கும் கங்கையிடம் பொறாமையினால், कालिन्दी—யமுனை (தானும் விஷ்ணுவினுடைய சிரஸ்ஸில்), आरुह्य—ஏறி, मूर्ध्नः—சிரஸ்ஸிலிருந்து, गलति नु—பிரவஹிக்கிறாளா? அல்லது सकलशशिकलाभ्रान्ति-लोलान्तरात्मा—பகவானின் முகத்தை எல்லாக் கலைகளையும் கொண்ட பூர்ணசந்திரன் என பிரமித்து அதைக்கபளீகாரம் செய்ய மனமுடைய, राहुः—ராகுவென்ற கருநிறங்கொண்ட ஸர்ப்பம், वक्त्रं—முகத்தை (சந்திரனை பிரமிக்கப்பட்டதை) குறித்து, आयाति वा—வருகிறானோ? (என), लोकैः—ஜனங்களினால், या—எது, आलोक्यते—எண்ணப்படுகிறதோ (உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறதோ), सा—அந்த, अलिधाम्नः—வண்டுபோல் கருநிறம் கொண்ட, श्रीपतेः—விஷ்ணுவின், कुन्तलाली—குந்தள வரிசை, नः—நமக்கு, अखिलं—பூர்ணமான, मङ्गलं—மங்களத்தை सततं—எப்பொழுதும், प्रदिशतु—நன்கு அளிக்கவேண்டும்.

பகவானின் சூர்ணகுந்தளம் என்னும் சுருட்டைக் கேசபாசம் கருநிறமாய் இருப்பது பற்றியும் நீண்டு முகம் நோக்கிக் கீழே

தொங்குவது பற்றியும் உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது நீலோத்பல புஷ்பங்களினால் கட்டப்பட்ட மாலைதான் சிரஸிலிருந்து தொங்குகிறதோ என்ற ஓர் உத்ப்ரேக்ஷை. அந்த சூர்ண குந்தள வரிசை கருத்து நீண்டு சிரசிலிருந்து தொங்குவதால் தனக்குச் சமமான கங்கையென்னும் தோழியிடம் பொறாமை கொண்டு, கங்கை எவ்விதம் சிவபெருமானின் சிரஸில் ஏறி அங்கிருந்து கீழ்நோக்கி பெருகிக்கொண்டிருக்கிறதோ அவ்வண்ணமே தானும் விஷ்ணுவின் சிரஸில் ஏறி அங்கிருந்து பெருகிக்கொண்டிருக்கும் யமுனையோவென உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. அவ்விதமே பகவானின் முகத்தை கலைகள் நிறைந்த சந்திரபிம்பமாக எண்ணி அதை விழுங்க ஆசைகொண்ட ராகுதான் முகத்தை நோக்கி ஊர்ந்து வருகிறதோவெனவும் உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. இவ்விதம் காணும் பக்த ஜனங்களால் பலவாறு உத்ப்ரேக்ஷிக்கப்படும் அச்சூர்ணகுந்தள வரிசை அதை தியானம் செய்யும் நமக்கு எப்பொழுதும் ஸகல க்ஷேமங்களையும் அளிக்கும். (45)

**கேசம் :—**

**सुप्ताकाराः प्रसुप्ते भगवति विबुधैरप्यदृष्टस्वरूपाः**
**व्याप्तव्योमान्तरालास्तरलमणिरुचा रञ्जिताः स्पष्टभासः ।**
**देहच्छायोद्गमाभा रिपुवपुरगरुप्लोषरोषाग्निधूम्याः**
**केशाः केशिद्विषो नो विदधतु विपुलक्लेशपाशप्रणाशम् ॥**

ஸுப்தாகாரா: ப்ரஸுப்தே பகவதி விபுதைரப்யத்ருஷ்ட
ஸ்வரூபா:
வ்யாப்த வ்யோமாந்தராளாஸ் தரளமணிருசா ரஞ்ஜிதா:
ஸ்பஷ்டபாஸ: ।
தேஹச்சாயோத்கமாபா: ரிபுவபுரகருப்லோஷ ரோஷாக்நி
தூம்யா:
கேசா: கேசித்விஷோ நோ விததது விபுல க்லேச
பாச ப்ரணாசம் ॥

**भगवति**—பகவான் விஷ்ணு, **प्रसुप्ते सति**—யோக நித்ரையில் ஆழ்ந்திருக்கும் சமயம், **सुप्ताकाराः**—அழகிய ஜடாரூபமாக உள்ளதும், **विबुधैरपि**-தேவர்களினாலும், வித்வான்களினாலும் **अदृष्टस्वरूपाः**—கண்டறியப்படாத ஸ்வரூபமுள்ளதும், **व्याप्त-**

**व्योमान्तराला:**-ஆகாச மத்ய பிரதேசத்தை வியாபித்ததும், **तरलमणिरुचा**-வீசும் ஆபரண ரத்னங்களின் ஒளியினுல், **रञ्जिता:**-அழகுமிக்கதாகச் செய்யப்பட்டதுகளாயும், **स्पष्टभास:**-வியக்தமான காந்தி உள்ளதும், **देहच्छायोद्गमाभा:**-மேல் நோக்கிச்செல்லும் தேகத்தின் கருநிற காந்திபோன்றதும், **रिपुवपुरगरुप्लोषरोषाग्निधूम्या:**-அசுராதி சத்ருக்களின் உடல்கள் ஆகிற அகருசந்தனக் கட்டைகளை எரிக்கும் கோபமாகிற அக்னியிலிருந்து வெளிக்கிளம்பிக்கொண்டிருக்கும் புகைக் கூட்டங்கள் போன்றவைகளுமான, **केशिद्विष: केशा:**-கேசி என்னும் அசுரனை அழித்த விஷ்ணுவின் கேசபாசங்கள், **न:**-நமக்கு, **विपुलक्लेशपाशप्रणाशं**-அதிகமாக அனுபவிக்கப்படும் பலவித கிலேசங்களாகிற பாசங்களின் நாசத்தை, **विदधतु**-செய்யவேண்டும்.

*பகவான் நித்ரை செய்யும் சமயம் விரிந்து ஜடாருபமாகக் காணப்படும் அடர்த்தியான கேசங்களின் தத்வத்தை யாரும் கண்டறியமுடியாது. இது ஆகாசம் முழுவதும் வியாபித்துள்ளது. அதனுல்தான் ஆகாசம் நீலநிறமாகக் காணப்படுகிறது. பகவான் அணிந்துள்ள ஆபரணங்களிலுள்ள ரத்னங்களின் ஒளியுடன் கலந்து ஸ்பஷ்டமாக கேசம் மிகுந்த ஒளியுடன் விளங்குகிறது. சரீரத்தின் நீலநிற ஒளியே மேலே கிளம்பி கேச உருவத்துடன் காணப்படுகிறதோ அல்லது சத்ருக்களின் உடல்களாகிற அகில் கட்டைகளை எரிப்பதற்காக ஏற்பட்ட கோபாக்னியிலிருந்து கிளம்பும் புகையோ என்றவாறு உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. கேசி என்னும் அசுரனை வதைத்த விஷ்ணுவின் அக்கேசபாசங்கள் நம்மை துன்புறுத்தும் பலவிதமான* **अविद्यास्मितारागद्वेषाभिनिवेशा:** *என்று யோக சாஸ்திரத்தில் விரிவாகக் கூறப்பட்ட கிலேசங்களாகிற பந்தங்களை அழிக்கவேண்டும்.* (45)

கிரீடம் :—

यत्न प्रत्युप्तरत्नप्रवरपरिलसद्भूरिरोचिष्प्रतान-
स्फूर्त्या मूर्तिर्मुरारेर्द्युमणिशतचितव्योमवद्दुर्निरीक्ष्या ।
कुर्वत्पारेपयोधि ज्वलदकृशशिखाभास्वदौर्वाग्निशङ्कां
शश्वन्न: शर्म दिश्यात्कलिकलुषतम:पाटनं तत्किरीटम् ॥

யத்ர ப்ரத்யுப்த ரத்ந ப்ரவர பரிலஸத் பூரி ரோசிஷ்ப்ரதாந
ஸ்பூர்த்யா மூர்த்திர் முராரேர் த்யுமணிஶதசித
வ்யோமவத் துர்நிரீக்ஷ்யா ।
குர்வத் பாரேபயோதி ஜ்வலதக்ருஶஶிகா
பாஸ்வதௌர்வாக்நி ஶங்காம்
ஶச்வந்ந: ஶர்ம திச்யாத் கலிகலுஷதம: பாடநம்
தத் கிரீடம் ॥

**यत्र**–எந்த கிரீடத்தில், **प्रत्युप्तरत्नप्रवर**–பதிக்கப்பட்டுள்ள உயர்ந்த ரத்னங்களிலிருந்து, **परिलसद्भूरिरोचिष्प्रतान**–நாலாபுறங்களிலும் வீசும் அதிக கிரணமண்டலங்களின், **स्फूर्त्या**–ப்ரகாசத்தினுல், **मुरारेर्मूर्तिः**–விஷ்ணுவின் சரீரம், **द्युमणिशतचितव्योमवत्**–நூற்றுக்கணக்கான சூரியமண்டலங்களினுல் சூழப்பட்ட ஆகாயம்போல, **दुर्निरीक्ष्या**–(கண்கள் கூசுவதால்) காணமுடியாததாக ஆகிறதோ, மேலும், **पारेपयोधि**–சமுத்ரத்தின் அக்கரையில், **ज्वलदकृशशिखाभास्वत्**–ஒளியுள்ள அதிகமான ஜ்வாலைகளினுல் ப்ரகாசிக்கும், **और्वाग्नि**–பாடபாக்னியோவென, **शङ्कां**–ஸந்தேகத்தை (காண்போருக்கு), **कुर्वत्**–செய்துகொண்டிருப்பதும், **कलिकलुषतमःपाटनं**–கலியின் பிரபாவத்தினுல் மிதந்து கலங்கச் செய்யும் தமோகுணத்தைப் பிளந்து அழிப்பதுமான, **तत् किरीटं**–அந்த பகவானின் கிரீடம், **नः**–நமக்கு, **शश्वत्**–எப்பொழுதும், **शर्म**–சுகத்தை, **दिश्यात्**–கொடுக்கவேண்டும்.

கிரீடத்தில் பதிந்துள்ள ஒளிமிக்க ரத்னங்களினின்று வெளிவீசும் கதிர் கூட்டங்களால், பகவானின் நீல நிற சரீரம் நூற்றுக் கணக்கான சூரியமண்டலங்களால் சூழப்பட்ட நீலநிற ஆகாயம் போல் காண்போர் கண்களைக் கூசும்படி செய்கிறது. மேலும் க்ஷீரஸமுத்திரத்தின் அக்கரையில் கொழுந்துவிட்டு எரியும் ஒளியுள்ள அதிகமான ஜ்வாலைகளுடன் விளங்கும் பாடபாக்னியோ என்ற ஸந்தேஹத்தை உண்டுபண்ணுகிறது. அவ்விதமான பகவானின் கிரீடம் கலியின் ப்ரபாவத்தால் ஏற்படும் மனக்கலக்கமாகிற இருளைப் போக்கக்கூடியது. அது எப்பொழுதும் நமக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும். (47)

ஸம்பூர்ண விக்ரஹம் :—

भ्रान्त्वा भ्रान्त्वा यदन्तस्त्रिभुवनगुरुरप्यब्दकोटीरनेकाः
गन्तुं नान्तं समर्थो भ्रमर इव पुनर्नाभिनालीकनालात् ।
उन्मज्जन्नूर्जितश्रीस्त्रिभुवनमपरं निर्ममे तत्सदृक्षं
देहाम्भोधिः स देयान्निरवधिरमृतं दैत्यविद्वेषिणो नः ॥४८॥

ப்ராந்த்வா ப்ராந்த்வா யதந்தஸ் த்ரிபுவந
குருரப்யப்தகோடீரநேகா
கந்தும் நாந்தம் ஸமர்த்தோ ப்ரமர இவ புநர்
நாபிநாளீக நாளாத் ।
உந்மஜ்ஜந்நூர்ஜிதச்ரீஸ் த்ரிபுவநமபரம் நிர்மமே
தத்ஸத்ருக்ஷம்
தேஹாம்போதி: ஸ தேயாந்நிரவதிரம்ருதம்
தைத்யவித்வேஷிணோ ந: ॥

त्रिभुवनगुरुरपि–மூவ்வுலகையும் படைக்கும் தந்தையான பிரம்மதேவனும், अनेकाः अब्दकोटीः-அனேக கோடி வர்ஷங்கள் यदन्तः–விராட்ரூபியான விஷ்ணுவின் எந்த சரீரத்திற்குள், भ्रान्त्वा भ्रान्त्वा-சுற்றிச்சுற்றித் திரிந்தும்கூட, भ्रमर इव–வண்டு போல, अन्तं–எல்லையை, गन्तुं–அடைவதற்கு, न समर्थः–சக்தியற்றவனாக ஆனரோ, पुनः–பிறகு, ऊर्जितश्रीः–(பகவானின் அருளால்) ஸாமர்த்யம் அடைந்தவராக, नाभिनालीकनालात्–தொப்புள் தாமரைத் தண்டிலிருந்து, उन्मज्जन्–வெளிக் கிளம்பி, तत्सदृक्षं–விஷ்ணுவின் சரீரத்திற்குள் இருக்கும் உலகத்திற்கு ஸமமான, अपरं–மற்றொரு, त्रिभुवनं–மூவ்வுலகை, निर्ममे-படைத்தானோ, सः– அவ்விதமான, निरवधिः- எல்லையில்லாத, दैत्यविद्वेषिणः देहाम्भोधिः-அசுரகுல சத்ருவான விஷ்ணுவின் கருநிறம் காம்பீர்யம் முதலியவற்றால் சமுத்திரத்திற்கு ஒப்பான சரீரம், नः–நமக்கு, अमृतं–மோக்ஷமென்னும் அழிவற்ற சுகத்தை, देयात्–கொடுத்தருளவேண்டும்.

இச்சுலோகத்தில் பகவானுடைய பூர்ண சரீரம் வர்ணிக்கப் படுகிறது. மூன்று உலகங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்

டிருக்கும் பகவானுடைய சரீரம் ஸமுத்ரம்போல் நீலமாயும் எல்லையில்லாத விஸ்தாரமுள்ளதாயுமிருக்கிறது. பிரஹ்மதேவன் அந்த தேஹத்திற்குள் புகுந்து மூவுலகங்களையும் கண்டு பல கோடி வருஷங்கள் அங்கு சுற்றிச் சுற்றி வந்தும் முடிவுகாணாத தால் வெளியே வரமுடியாமல் தவித்தார். பின்னர் பகவானின் அருளால் ஸாமர்த்யம் பெற்று தொப்புள் தாமரைத் தண்டு வழியாக வெளியே வந்து சரீரத்திற்குள் தாம் கண்ட மூவுலகங்களுக்குச் சமமாக மற்றொரு மூவுலகத்தை வெளியில் சிருஷ்டித்தார். அவ்வித மஹிமைகொண்ட விஷ்ணுவின் சரீரம் அமிருதத்தை, முக்தியை அருளட்டும். (48)

**தசாவதாரங்கள் :—**

मत्स्यः कूर्मो वराहो नरहरिणपतिर्वामनो जामदग्न्यः
काकुत्स्थः कंसघाती मनसिजविजयी यश्च कल्किर्भविष्यन् ।
विष्णोरंशावतारा भुवनहितकरा धर्मसंस्थापनार्थाः
पायासुर्मां त एते गुरुतरकरुणाभारखिन्नाशया ये ॥ ४९ ॥

மத்ஸ்ய: கூர்மோ வராஹோ நரஹரிணபதிர் வாமனோ ஜாமதக்ன்ய:
காகுத்ஸ்த: கம்ஸகாதீ மநஸிஜவிஜயீ யச்ச கல்கிர் பவிஷ்யன் ।
விஷ்ணோரம் ஶாவதாரா புவநஹிதகரா தர்ம ஸம்ஸ்தாபநார்த்தா:
பாயாஸுர் மாம் த ஏதே குருதர கருணா பார கின்நாஶயா யே ॥

मत्स्यः—மீன், कूर्मः—ஆமை, वराहः—பன்றி, नरहरिणपतिः—நரஸிம்ஹர், वामनः—வாமனர், जामदग्न्यः—பரசுராமர், काकुत्स्थः—தசரதபுத்ரராமர், कंसघाती—கிருஷ்ணர், मनसिजविजयी—புத்தர், भविष्यन्—வரப்போகும், यश्च कल्किः—எந்த கல்கியோ இவ்விதமான, ये—எந்த, विष्णोरंशावताराः—விஷ்ணுவின் அம்சபூதமான அவதாரங்கள், धर्मसंस्थापनार्थाः—தர்மத்தை நிலைநிறுத்துவதின் பொருட்டு ஏற்பட்டதுகளாயும், भुवनहितकराः—உலகிற்கு நன்மையை செய்யக்கூடியது

களாயும், गुरुतरकरुणाभारखिन्नाशया:-மிக்க அதிகக் கருணை என்னும் பாரங்கொண்ட மனதையுடையதுகளாகவுமிருக்கின்றனவோ, त एते-அந்தவிதமான தியானம் செய்யப்படுங்கால் கண்ணிற்கு புலப்படுவதால் இந்த என்று ப்ரத்யக்ஷமாய் புலப்படுகிற அவதார உருவங்கள், मां- என்னை, पायासु:-காப்பாற்றவேண்டும்.

துஷ்டநிக்ரஹ பூர்வகமாக ஸாதுக்களை ரக்ஷிக்கவேண்டியும், அதற்கு ஸாதகமான தர்மம் குறையும் சமயம் அதை உத்தரணம் செய்து, நிலை நிறுத்தும் பொருட்டும் விஷ்ணுவின் அம்சங்களாக அவதரித்த மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹர், வாமனர், பரசுராமர் ஸ்ரீராமன், கிருஷ்ணன், புத்தர், வரப்போகும் கல்கியென்னும் பத்து உருவங்களும் பக்தர்களிடம் அளவற்ற கருணை என்னும் சுமையுடன் கூடிய மனதையுடையதுகள். அவ்விதம் கருணைகொண்ட பத்து அவதார உருவங்களும் பக்தனுகிய என்னைக் காப்பாற்றவேண்டும்.

(இந்த சுலோகத்தில் விஷ்ணுவின் பத்து அவதாரங்களுள் புத்தாவதாரத்தைச் சேர்த்துக் கூறும் பக்ஷத்தை அனுஸரித்து வர்ணனை "मनसिजविजयी மன்மதனை ஜெயித்தவன் புத்தன் "मारजित् जिनः" என அமரகோசத்தில் அப்பெயர் புத்தரைக் கூறுவதாக சொல்லப்படுகிறது ராகத்வேஷங்களினுல் ப்ராணி ஹிம்ஸை உலகில் மலிந்து இருந்த சமயம் அதை நீக்கப் பகவானுல் எடுத்த அவதாரம் புத்த அவதாரம் என சான்றோர் கூற்று.) (49)

நிர்குணஸ்வரூபம் :—

यस्माद्वाचो निवृत्ताः सममपि मनसा लक्षणामीक्षमाणाः
स्वार्थालाभात्परार्थव्यपगमकथनश्लाघिनो वेदवादाः ।
नित्यानन्दं स्वसंविन्निरवधि विमलस्वान्तसंक्रान्तबिम्ब-
च्छायापत्त्यापि नित्यं सुखयति यमिनो यत्तदव्यान्महो नः ॥

யஸ்மாத் வாசோ நிவ்ருத்தா: ஸமமபி மநஸா
லக்ஷணுமீக்ஷமாணு:
ஸ்வார்த்தாலாபாத் பரார்த்த வ்யபகம கதந
ச்லாகிநோ வேதவாதா: ।

நித்யாநந்தம் ஸ்வஸம்விந்நிரவதி விமல ஸ்வாந்த
ஸங்க்ராந்த பிம்ப
ச்சாயாபத்யாபி நித்யம் ஸுகயதி யமிநோ யத்
ததவ்யான் மஹோ ந: ॥

वेदवादाः-வேதவியவஹாரரூபமான, वाचोपि-அபௌருஷேயமான தோஷமற்ற, எல்லா தத்வங்களையும் உரைக்கக் கூடிய ப்ரமாணசப்தங்களும், लक्षणां-சக்தியினால் நேர்முகமாகக்கூறமுடியாதுபோய் ஜஹத் அஜஹத்லக்ஷணை என்னும் விட்டும்விடாத லக்ஷணையால் மறைமுகமாகக் கூறவேண்டியிருப்பதை, ईक्षमाणाः-அறிந்தவைகளாக ஆகி, मनसा समं-தன்னைப்போலவே பரம்பொருளின் உண்மை தத்வத்தை சிந்திக்கமுடியாது தவிக்கும் மனதுடன்கூட, यस्मात् निवृत्ताः-எந்த பிரம்மத்தை உரைக்க முடியாது அதிலிருந்து திரும்பி விட்டனவோ (அவ்விதம் நேர்முகமாக சாக்ஷாத்தாக பிரம்ம தத்வத்தை கூறமுடியாது திரும்பிய வேதவாக்யங்கள் எப்படியாவது மறைமுகமாவது பிரம்மத்தைக் கூறித்தான் ஆகவேண்டுமென எண்ணி,) स्वार्थलाभात्-நேர்முகமாகக் கூறப்படவேண்டிய பொருளாக பிரம்மவஸ்துவை அடையாததால், परार्थव्यपगमकथनश्लाघिनः - 'अशब्दमस्पर्शम्' 'न भूमिर्न तोयं न तेजः' என்று இதரப்பொருள்கள் ரூபமாக இல்லையென்று இதரப்பொருள் ஸ்வரூபத்தை பிரம்மத்தினிடம் விலக்கிக்கூறி பிரம்மத்தைப் புகழுவதாக இருக்கின்றனவோ, विमलस्वान्तसंक्रान्तबिम्बच्छायापत्त्याऽपि-நிர்மல மனதில் விழும் தனது (பிரம்மத்தினது) பிரதிபிம்ப ரூபமானச் சாயையினாலும்கூட, यमिनः-யோகிகளை, यत्-எந்த ப்ரம்மதத்வம், नित्यं-எப்பொழுதும், सुखयति-ஆனந்தத்தை அடைவிக்கிறதோ, तत्-அந்தவிதமான, नित्यानन्दं-அழிவற்ற ஆனந்தமாயும், स्वसंवित्-ஸ்வப்ரகாசமாயும், निरवधि-காலதேசவஸ்து பரிச்சேத ரூப அளவு அற்றதாயும் உள்ள, महः-பரம்ஜோதி ரூபமான (விஷ்ணுவின்) பரமதத்வரூபம், नः-நம்மை, अव्यात्-காக்கவேண்டும்.

நிர்குண நீரூப பிரம்ம தத்துவத்தை முதலில் அறிய முடியாத மந்த மத்யம் அதிகாரிகளை அனுக்ரஹிக்கவேண்டியே அப்ரம்ம தத்வம் கல்பித பலவித நாமரூபங்களுடன் ஸகுணமாக விளங்குகிறது என்பது சாஸ்திர சித்தாந்தம். பொருளின் ஸ்வரூபத்தை புகட்ட வழங்கப்படும் சொற்கள் யாவும் அப்பொருள்களில் இருக்கும் ஜாதி, குணம், கிரியை, பெயர் இந்நான்கை முன்னிட்டே அவைகளை உடைய பொருள்களை போதிக்கக் கூடியவை இவைகளை விட்டுப் பெயர்ச்சொற்கள் பொருள்களை போதிப்பதில்லை. மனதும் ஜாதி குணம் கிரியை பெயர் இவைகளுடன் கலந்தபொருளையே சிந்திக்கும் சக்தியுடையது. ப்ரம்மத்தினிடம் உண்மையில் எந்த ஜாதி குண கிரியைகளும் இல்லாது இருக்கும் போது சப்தப்ரமாண வேதங்களும் நிர்குண பிரம்ம தத்துவத்தை போதிக்க விரும்பினாலும் முடிவதில்லை. மனதும் அவ்விதமே. "நிர்குணத்தைக் கூறவேண்டும். முடியவில்லையே என்ன செய்வது" என்று எண்ணி, 'நான் குணமுடையதாக என் வழக்கப்படி சொல்லுகிறேன், நீங்கள் குணங்களை விலக்கி சுத்த பிரம்மப் பொருளை மட்டிலும் அறிந்துகொள்ளுங்கள்' என்று கூறுகிறது வேதநூல். கலந்த பொருளைச் சொன்னாலும் விலக்க வேண்டியதை விலக்கிப் பற்றவேண்டிய பொருளைப் பற்றவே, லக்ஷணையாக சப்தம் பிரயோகிக்கப்படுகிறது. கலப்புப்பொருளில் சிலதை நீக்கி சிலதை கிரஹித்துக்கொள்வதால் இது போன்ற இடங்களில் விட்டும் விடாத இலக்ஷணை என்பர். மற்றொரு வழியிலும் சுத்த பிரம்மத்தை வேதம் போதித்துப் பெருமை அடைகிறது. இதுதான் பிரம்மம் என்று நேர்முகமாகக் கூறமுடியாது போயினும், அப்ரம்ம வஸ்துக்களை நேர்முகமாகக் கூறமுடியுமாதலால் அப்ரம்ம வஸ்துக்களைக்கூறி அந்த அப்ரம்ம வஸ்துரூபமல்ல பிரம்மம் என்று வேறு வஸ்துக்களிலிருந்து விலக்கி, எஞ்சி நிற்கும் பரம்பொருளான பிரம்மத்தை போதிக்கிறது.

இவ்விதமான சுத்த ஆனந்தமயமாகவும் அழிவற்றதும் எல்லையற்றதும் மற்றவைகளால் பிரகாசிக்காமல் தானே பிரகாசிக்கிறதாயுமுள்ள பிரம்மதத்வம் தியானிப்பவரின் நிர்மல மனதில் ப்ரதிபலிப்பதால் அந்த பிரம்ம ப்ரதிபிம்பத்தின் மூலம் பக்தர்களின் மனதில் எப்பொழுதுமானந்த வெள்ளத்தையுண்டுபண்ணுகிறது. கண்ணுடியில் விழும் பிரதிபிம்பம், பிம்பம்போல் இருப்பது நியாயம்தானே. இவ்விதமான பரஞ்ஜ்யோதி ஸ்வரூபமான அந்த பிரம்மதத்வம் எங்களைக் காப்பாற்றவேண்டும். (50)

பக்தர்களின் பெருமை :—

आ पादादा च शीर्षाद्वपुरिदमनघं वैष्णवं यः स्वचित्ते
धत्ते नित्यं निरस्ताखिलकलिकलुषे संततान्तःप्रमोदः ।
जुह्वज्जिह्वाकृशानौ हरिचरितहविः स्तोत्रमन्त्रानुपाठै-
स्तत्पादाम्भोरुहाभ्यां सततमपि नमस्कुर्महे निर्मलाभ्याम् ॥

ஆபாதாதா ச ஶீர்ஷாத் வபுரிதமநகம் வைஷ்ணவம் யஃ ஸ்வசித்தே
தத்தே நித்யம் நிரஸ்தாகில கலி கலுஷே ஸந்ததாந்தஃப்ரமோதஃ ।
ஜுஹ்வஜ் ஜிஹ்வா க்ருஶாநௌ ஹரிசரிதஹவிஃ ஸ்தோத்ர மந்த்ரா நுபாடைஃ
ஸ்தத்பாதாம்போருஹாப்யாம் ஸததமபி நமஸ்குர்மஹே நிர்மலாப்யாம் ॥

यः – எந்த பக்தன், सन्ततान्तःप्रमोदः – எப்பொழுதும் மனதில் சந்தோஷம் கொண்டவனாக, निरस्ताखिलकलिकलुषे – ஸகலபாப அழுக்குகளையும் விலக்கித்தெளிந்த, स्वचित्ते – தனது மனதில் आपादात् –பாதம் முதல், आशीर्षात् च - தலை வரையிலும் வர்ணிக்கப்பட்ட, इदं-இந்த, अनघं-தோஷமற்ற, वैष्णवं वपुः - விஷ்ணுவின் திருஉருவத்தை, नित्यं– எப்பொழுதும், धत्ते–தரிக்கிறானோ (தியானம் செய்கிறானோ) மேலும் जिह्वाकृशानौ–தனது நாக்கு ரூபமான அக்னி யில், हरिचरितहविः – விஷ்ணுவின் சரித்திர ரூபமான ஹவிஸ்ஸை, स्तोत्रमन्त्रानुपाठैः–இந்த ஸ்தோத்திர சுலோகங்களாகிற மந்திர படனங்களுடன், जुह्वत् -ஹோமம் செய்து, (விஷ்ணுவை திருப்தி செய்விக்கிறானோ) निर्मलाभ्यां-பரம பரிசுத்தங்களான तत्पादाम्भोरुहाभ्यामपि–அப்பக்தனது திருவடி மலர்களின் பொருட்டும், सततं – எப்பொழுதும் இடைவிடாது, नमस्कुर्महे–வணங்குகிறோம்.

பகவான் விஷ்ணுவின் பாதம் முதல் சிரஸ் வரை வர்ணிக்கப் பட்ட தூய்மை வாய்ந்த திவ்ய மங்கள சரீரத்தை எந்த பக்தன்

தனது தூய்மை வாய்ந்த மனதில் மிக்க ஆனந்தத்துடன் எப்பொழுதும் நினைக்கிறனே (தியானம் செய்கிறனே) மேலும் தனது நாக்காகிற அக்னியில் விஷ்ணுவின் மாப்பெரும் சரிதமாகிற ஹவிர்பாக திரவ்யத்தை இந்த ஸ்தோத்ர சுலோகங்கள் ருபமான மந்திர உச்சாரணத்துடன் ஹோமம் செய்கிறனே அவ்வித மகானுபாவனுடைய பரம பரிசுத்தமான இரு பாதகமலங்களிலும் என்றும் நாம் நமஸ்கரிப்போம். பக்தனின் பெருமை பகவானின் பெருமைக்கு ஒப்பானது ஒரு சமயம் சொல்வதானல் பகவானின் பெருமையைக்காட்டிலும் அதிக மதிப்பு வாய்ந்தது பக்தனின் பெருமை. அவர்கள் நமக்கு பரமனையடைய வழிகாட்ட கருணை கொண்டவர்கள் அல்லவா? (51)

பலச்ருதி :—

मोदात्पादादिकेशस्तुतिमिति रचितां कीर्तयित्वा त्रिधाम्नः
पादाब्जद्वन्द्वसेवासमयनतमतिर्मस्तकेनानमेद्यः ।
उन्मुच्यैवात्मनैनोनिचयकवचकं पञ्चतामेत्य भानो-
र्बिम्बान्तर्गोचरं स प्रविशति परमानन्दमात्मस्वरूपम् ॥

மோதாத் பாதாதிகேஶஸ்துதிமிதி ரசிதாம்
கீர்த்தயித்வா த்ரிதாம்ந:
பாதாப்ஜ த்வந்த்வ ஸேவா ஸமய நத மதிர்
மஸ்தகேநாநமேத்ய: ।
உந்முச்யைவாத்மனைனோநிசய கவசகம்
பஞ்சதாமேத்ய பாநோர்
பிம்பாந்தர் கோசரம் ஸ ப்ரவிஶதி பரமாநந்தமாத்மஸ்வருபம்॥

मोदात् –பக்திப்பெருக்கினுல்ஏற்பட்ட சந்தோஷத்தினுல் इति–இவ்வாறு, रचितां–இயற்றப்பட்ட, त्रिधाम्नः–விஷ்ணுவினுடைய (திரிவிக்ரமாவதாரத்தில் மூன்று அடிகளால் மூன்று இடங்களையும் பற்றியதால் 'த்ரிதாமா' எனக் காரணப் பெயர்), पादादिकेशस्तुतिं–பாதம் முதல் கேசம்வரை வர்ணிக்கும் ஸ்துதியை, कीर्तयित्वा–பாடி, यः–எந்த பக்தன், पादाब्जद्वन्द्वसेवासमय–விஷ்ணுவின் இரு தாமரைமலரடிகளை ஸேவிக்கும் சமயம், नतमतिः–வணங்கும் புத்திவிருத்தியை

உடையவனாக இருந்துகொண்டு (மனதுடன்கூட மனதை வேறிடம் செலுத்தாது), मस्तकेन-சிரஸினால், आनमेत्-வணங்குகிறானோ, सः-அப்பக்தன், आत्मनैव-தானாகவே, एनोनिचयकञ्चुकं-பாபக்கூட்டம் என்னும் அழுக்குச் சட்டையை, उन्मुच्य-கழற்றி எறிந்துவிட்டு, पञ्चतामेत्य-மரணமடைந்த பிறகு, परमानन्दं-உயர்ந்த பேரானந்த ரூபமானதும் भानोः बिम्बान्तर्गोचरं-சூர்யமண்டலத்தின் மத்தியில் விளங்குவதுமான, आत्मस्वरूपं-தனது உண்மையான பரமாத்மஸ்வரூபத்தை, प्रविशति-பிரவேசிக்கிறான். (இரண்டற ஒன்றாகக்கலந்து பரம்பொருளாக என்றும் விளங்குகிறான்.

பக்தி மேலீட்டினால் ஏற்பட்ட சந்தோஷத்தின் காரணமாக விஷ்ணுவின் பாதாதி கேசாந்த உருவ வர்ணனமாக அமைந்தது இந்த ஸ்துதி நூல். எவ்வித தோஷமும் அற்றது. எந்த பக்தன் பகவானின் திருவடி மலர்களை ஸேவிக்கும் சமயம் உள்ளமும் பற்றுக்கொண்டு இந்த ஸ்தோத்ரத்தைப் பாடித் தலையால் பகவானை வணங்குகிறானோ அப்பக்தன் தானாகவே தன்னாத்மாவை மறைத்துவரும் பாபக்கூட்ட அழுக்குச்சட்டையைக்கழற்றி எரிந்துவிட்டு ஜீவன் முக்தனாக விளங்கி இறுதியில் விதேக முக்தி அடையும் சமயத்தில் அனாயாஸமாக மரணம் அடைந்து மூன்றுவித ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களிலிருந்து விலகி தனது ஆத்மஸ்வரூபமாக விளங்கும் சூரிய மண்டல மத்தியத்தில் பிரகாசிக்கும் பரமானந்தரூபமான பரப்பிரம்மத்தில் இரண்டற ஒன்றாகக் கலந்து பேரின்ப நிலையை அடைகிறான். (52)

விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ श्रीविष्णुभुजङ्गप्रयातस्तोत्रम् ॥

# ஸ்ரீ விஷ்ணு புஜங்க ப்ரயாத ஸ்தோத்ரம்

['புஜங்கப்ரயாதம்' என்னும் விருத்தத்தில் சிவ புஜங்கம் போல் விஷ்ணு மூர்த்தியை வர்ணிக்கும் ஸ்தோத்திரம் இது. "நிர்குண ஸ்வரூபத்திற்கும் ஸகுண ஸ்வரூபத்திற்கும் சிறிதும் வேற்றுமை கிடையாது. நிர்குணமேதான் உபாஸகர்களையும் பக்தர்களையும் அனுக்ரஹிப்பதற்காக மாயா சக்தியால் ஸகுண மாயும், ஸாகாரமாயும் விளங்குகிறது." என்பதுதான் அத்வைத ஸித்தாந்தம். இதைக் காட்டுவதற்காகவே முதலிரண்டு சுலோகங்களில் உபநிஷத் கூறுவதும் ஞானிகள் அறிந்து கொள்ளுவதுமான நிர்குண-நிராகார ஸ்வரூபத்தை வர்ணித்து வணங்குகிறார். அடுத்த ஏழு சுலோகங்களால் பக்தர்கள் தம் மனதில் தியானம் செய்வதற்காக பகவன் மூர்த்தியை சுருக்க மாகவும் அழகாகவும் வர்ணித்து பக்தனும் க்ரமேண முக்தியை அடைவதாகக் கூறுகிறார் பின் நாலு சுலோகங்களால் வைராக்யம் ஏற்படுவதற்காக வாழ்க்கையிலுள்ள கஷ்டங்களை எடுத்துக் கூறி பகவந்நாமோச்சாரணம், மூர்த்தித்யானம் இவற்றைக் காட்டிலும் கடைத்தேற வேறு மார்க்கமில்லை யென்றும் அதற்கும் அவர் அருள் வேண்டுமென்றும் சொல்லி பலச்ருதியுடன் முடிக்கிறார்.]

चिदंशं विभुं निर्मलं निर्विकल्पं
निरीहं निराकारमोंकारगम्यम् ।
गुणातीतमव्यक्तमेकं तुरीयं
परं ब्रह्म यं वेद तस्मै नमस्ते ॥ १ ॥

சிதம்ஶம் விபும் நிர்மலம் நிர்விகல்பம்
நிரீஹம் நிராகாரமோங்கார கம்யம் ।
குணாதீதமவ்யக்தமேகம் துரீயம்
பரம் ப்ரஹ்ம யம் வேத தஸ்மை நமஸ்தே ॥

चिदंशं-சித்-ஜடஸமுதாயமான பிரபஞ்சத்தில் சைதன்யாம்சமாக விளங்குவதும், विभुं-எங்கும் நிறைந்து இருப்பதும், निर्मलं-தோஷமற்றதும், निर्विकल्पं-வேற்றுமைகளற்றதும், निरीहं-ஆசையற்றதும், निराकारं-உருவமற்றதும், ओंकारगम्यं-பிரணவத்தினால் அறியத்தக்கதும், गुणातीतं-முக்குணங்களைக் கடந்ததும், अव्यक्तं-இந்திரியங்களுக்கு புலப்படாததும், एकं-ஒன்ருக இருப்பதும், तुरीयं-நான்காவதாக இருப்பதுமான, परं ब्रह्म-பரப்ரஹ்ம வஸ்துவாக, यं-எவரை, वेद-அறிகிருரோ, तस्मै-அந்த, ते-உமக்கு, नमः-நமஸ்காரம்.

சித்து அசித்து என்று இருவிதம் கலந்த இவ்வுலகத்தில் சித்து என்னும் ஞானரூப அம்சமாக மெய்ப்பொருளாக விளங்குவதும், (அசித்து என்னும் ஜட அம்சத்தை நீக்கி அதனுள் ப்ரகாசிக்கும் சித்து ஞானப்பொருளாக விளங்கும் மெய்ப்பொருளையே யோகிகள் காணுதல் பற்றியே திருவள்ளுவரும் "எப்பொருள் எத்தன்மை வாய்த்தினும் அதனுள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்று பகன்ருர்) எங்கும் நிறைந்து வ்யாபகமாக இருப்பதும் மும்மலம் என்ற அழுக்கற்றதும் (எப்பொழுதும் அஸங்கனுக இருப்பதால்) பேத ஞானத்தினுல் ஏற்படும் எந்தவித ஸம்பந்தமுமற்றதும், பற்றற்றதும் நாமரூபங்கள் கல்பிதங்களாக தோன்றுவதால் எந்தவித ரூபமும் உண்மையில் இல்லாததும் ப்ரணவம் என்னும் ஓம்கார ஜபத்தினுலும் தியானத்தினுலும் அறியப்படக்கூடியதும் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் ப்ருகிருதி குணங்களைக் கடந்ததும் மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் எட்டாததும் ஸஜாதீய, விஜாதீய ஸ்வகத பேதங்கள் இன்றி தனித்த ஒரே உண்மைப் பொருளாக உள்ளதும் மாண்டூக்ய உபநிஷத்தில் अदृष्टमव्यवहार्यमग्राह्यमलक्षणमचिन्त्यं अव्यपदेश्यमेकात्मप्रत्ययसारं प्रपञ्चोपशमं शान्तं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते स आत्मा स विज्ञेयः என்று கூறியபடி ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பால் நான்காவது அவஸ்தையில் அறியப்படுவதால் துரீயம் என்று வ்யவஹரிக்கப்படுவதுமான பரம்பொருளான பிரம்மமாக எந்த விஷ்ணுவை யோகி புருஷன் பிரம்மஞானி அறிகிருனே அந்த பரமாத்மரூபியான உன் பொருட்டு நமஸ்காரம். (1)

विशुद्धं शिवं शान्तमाद्यन्तशून्यं
जगज्जीवनं ज्योतिरानन्दरूपम् ।
अदिग्देशकालव्यवच्छेदनीयं
त्रयी वक्ति यं वेद तस्मै नमस्ते ॥ २ ॥

விஶுத்தம் ஶிவம் ஶாந்தமாத்யந்த ஶூந்யம்
ஜகஜ்ஜீவனம் ஜ்யோதிரானந்த ரூபம் ।
அதிக்தேஶ கால வ்யவச்சேதநீயம்
த்ரயீ வக்தி யம் வேத தஸ்மை நமஸ்தே ॥

विशुद्धं–பரிசுத்தமாயும், शिवं–மங்களமாயும், शान्तं–விகாரங்களற்றதும், आद्यन्तशून्यं–ஆரம்பமும் முடிவுமில்லாததும், जगज्जीवनं–உலகிலுள்ள பிராணிகள் ஜீவித்திருப்பதற்கு ஆதாரமாயிருப்பதும், ज्योतिः–பிரகாச வஸ்துவாயும், आनन्दरूपं–ஆனந்தஸ்வரூபமாயும், अदिग्देशकालव्यवच्छेदनीयं–திசை, இடம், காலம் இவைகளால் எல்லையிட முடியாததுமான ப்ரஹ்மமாக, यं–எவரை, त्रयी–வேதம், वक्ति–சொல்கிறதோ, वेद–(அவ்விதமே ஞானி) அறிகிறுனே, तस्मै–அந்த, ते–உமக்கு, नमः–நமஸ்காரம்.

எப்பொழுதும் அஸங்கனுக இருப்பதால் ('असङ्गो ह्ययं पुरुषः' என்ற ப்ரமாணப்படி பற்றற்று இருப்பதால்) நிர்மலமாயும் மங்களமாயும் எல்லா வ்யவஹாரங்களினின்றும் விலகி (அலைகள் ஓய்ந்த சமுத்ரம்போல்) விகாரமின்றி இருப்பவனும் (முக்குண ஸம்பந்தத்திஞல் தான் சித்துப்பொருளுக்கு ப்ரவிருத்தி நிவிருத்தி முதலிய விகாரங்கள் மாறுபாடுகள் ஏற்படும். முக்குண ஸம்பந்தம் என்றும் அற்றதால் எந்த விகாரங்களுமற்றது எனக்கூறப்பட்டது) நித்யப் பொருளாக விளங்குவது பற்றி அநித்யப் பொருள்களைப் போல் ஆதி, அந்தம்–ஆரம்பம் முடிவு அற்றதும் தன்ஞல் உண்டு பண்ணப்பட்ட உலகின் உயிர்கள் யாவையும் ரக்ஷிக்கும் பொருளாகவும் ("येन जातानि जीवन्ति" என்ற உபநிஷத வாக்யம் ப்ரமாணம்) ஜடப்பொருள் யாவையும் ப்ரகாசப்படுத்தும் அறிவுச்சுடர் மயமாகவும் பேரானந்தமயமாகவும் "तस्य भासा सर्वमिदं विभाति" "आनन्दं ब्रह्मणो विद्वान्" என்பது போன்ற பல

உபநிஷத் வாக்யங்கள் பிரமாணம்) மற்றப்பொருள்கள் எவ்வாறு திசை இடம் காலம் முதலியவற்ருல் சுருக்கப்படுகிறதோ அவ்விதம் திசை இடம் காலம் முதலியவற்ருல் அளவிட முடியாத தாயும் உள்ள பரபிரம்ம ஸ்வருபமாக உன்னை (விஷ்ணுவை) வேத நூல் கூறுகிறது. அவ்விதமாகவே உன்னை யோகி அறிகிருன். அப்பொருளாக விளங்கும் உனக்கு (விஷ்ணுவிற்கு) நமஸ்காரம்.

(அ) இரண்டு சுலோகங்களால் விஷ்ணுவின் நிர்குணஸ்வருபத்தை வர்ணித்துவிட்டு பக்தர்கள் த்யானம் செய்வதற்காக ஸகுணமான ஸாகாரமான ஸ்வருபத்தை ஐந்து சுலோகங்களால் வர்ணிக்கிருர் :—

महायोगपीठे परिभ्राजमाने
धरण्यादितत्त्वात्मके शक्तियुक्ते ।
गुणाहस्करे वह्निबिम्बार्धमध्ये
समासीनमोंकर्णिकेऽष्टाक्षराब्जे ॥ ३ ॥

மஹாயோகபீடே பரிப்ராஜமானே
தரண்யாதி தத்வாத்மகே ஶக்தியுக்தே ।
குணாஹஸ்கரே வஹ்னிபிம்பார்த்த மத்யே
ஸமாஸீநமோம்கர்ணிகே஽ஷ்டாக்ஷராப்ஜே ॥

धरण्यादितत्वात्मके—பிருதிவீ முதலான தத்வஸ்வருபமாயும், शक्तियुक्ते—விமலா முதலான சக்திகளுடன் கூடியதும், वह्निबिम्बार्धमध्ये—அக்னி அர்த்த சந்திரன் இவர்களுக்கு நடுவில், गुणाहस्करे—குணருபியான சூரிய மண்டலத்தில், परिभ्राजमाने—விளங்குவதுமான, महायोगपीठे — மஹாயோக பீடத்தில், ओंकर्णिके—பிரணவத்தைக் கர்ணிகையாகக் கொண்ட, अष्टाक्षराब्जे—அஷ்டாக்ஷரத் தாமரையில், समासीनं—உட்கார்ந்திருக்கும் நாராயணனை தியானிக்கவேண்டும்.

நம் சரீரத்தில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்று ஆறு சக்ரங்கள் உள்ளன. இவற்றில் முதல் இரண்டு சக்ரங்களுக்கு மேல் அக்னியும் மணி பூரம் அநாஹதம் இவைகளுக்குமேல் ஸுர்யனும் விசுத்தி ஆக்ஞா

இவற்றிற்கு மேல் அர்த்த சந்திரனும் இருக்கின்றனர். மேலே ஸஹஸ்ராரத்தில் பூர்ண சந்திரமண்டலம் இருக்கிறது. இங்கு அக்னிக்கும் அர்த்த சந்திரனுக்கும் நடுவில் சூரியமண்டலத்தில் அதாவது அநாஹத சக்ரத்தில் மஹாயோகபீடம் உள்ளது. இது பூமி முதலான 25 தத்வ ரூபமானது. சக்திகளுடன் கூடியது. அதிலுள்ள அஷ்டதளங்களுள்ள ஹிருதயகமலம் அஷ்டாக்ஷர மந்திர ரூபமானது. இதற்கு ஓங்காரமே கர்ணிகை இவ்வாறு ஹிருதயகமலத்தில் அமர்ந்திருப்பவராக நாராயணனை தியானிக்க வேண்டும். (3)

समानोदितानेकसूर्येन्दुकोटि-
प्रभापूरतुल्यद्युतिं दुर्निरीक्ष्यम् ।
न शीतं न चोष्णं सुवर्णावदात-
प्रसन्नं सदानन्दसंवित्स्वरूपम् ॥ ४ ॥

ஸமாநோதிதாநேக ஸூர்யேந்து கோடி
ப்ரபாபூர துல்யத்யுதிம் துர்நிரீக்ஷம் ।
நஶீதம் ந சோஷ்ணம் ஸுவர்ணாவதாத
ப்ரஸந்நம் ஸதாநந்த ஸம்வித்ஸ்வரூபம் ॥

**समानोदित**-ஒரே சமயத்தில் உதயமான, **अनेकसूर्येन्दुकोटि**-பலகோடி ஸூர்யசந்திரர்களின், **प्रभापूर**-ஒளி பிரவாஹத்திற்கு, **तुल्य**-ஸமமான, **द्युतिं**-காந்தியுள்ளவரும் (அதனால்) **दुर्निरीक्ष्यं**-பார்க்கமுடியாதவரும், **नशीतं**-குளிர்ச்சியற்றவரும், **नोष्णं च**-உஷ்ணமில்லாதவரும், **सुवर्णावदातप्रसन्नं**-தங்கம் போல நிர்மலராயும் ப்ரஸந்நராயும், **सदानन्दसंवित्स्वरूपं**-ஸச்சிதானந்தஸ்வரூபராயும் விஷ்ணுவை தியானிக்க வேண்டும்.

ஒரே சமயத்தில் உதித்த அனேக கோடி சூர்யன் சந்திரன் இவைகளின் ஒளிப்பிரவாஹத்திற்கு ஒப்பான ப்ரகாசத்தை உடையவரும், அதிக ஒளியின் காரணமாகக் கண்களால் காண முடியாதவரும் ஸூர்யன்போல் உஷ்ணமற்றவரும், சந்திரன்போல் சீதமற்றவரும் சுத்த தங்கக் கட்டிபோல் நிர்மலராயும் ப்ரஸன்னராயும் ஸத் சித் ஆனந்த ஸ்வரூபமாகவும் இருக்கும் பகவானை தியானிக்கவேண்டும். (4)

सुनासापुटं सुन्दरभ्रूललाटं
किरीटोचिताकुञ्चितस्निग्धकेशम् ।
स्फुरत्पुण्डरीकाभिरामायताक्षं
समुत्फुल्लरत्नप्रसूनावतंसम् ॥ ५ ॥

ஸுநாஸாபுடம் ஸுந்தரப்ரூ லலாடம்
கிரீடோசிதாகுஞ்சித ஸ்நிக்தகேஶம் ।
ஸ்புரத் புண்டரீகாபிராமாயதாக்ஷம்
ஸமுத்புல்ல ரத்ன ப்ரஸூநாவதம்ஸம் ॥

सुनासापुटं-அழகிய மூக்கு பிரதேசத்தை உடையதும், सुन्दरभ्रूललाटं-அழகிய புருவங்களையும் நெற்றியையும் உடையதும், किरीटोचित-கிரீடத்திற்கேற்றபடி, आकुंचित-வளைந்த, स्निग्धकेशं-மழமழப்பான கேசங்களையுடையதும், स्फुरत्पुण्डरीक-மலருகின்ற தாமரைபோல், अभिराम-அழகியதும், आयताक्षं-நீண்டதுமான கண்களை உடையதும், समुत्फुल्ल-மலர்ந்த, रत्नप्रसूनावतंसं-ரத்னம்போல் ஒளியுள்ள புஷ்பங்களை ஆபரணமாக அணிந்திருப்பதுமாக (பகவத் விக்ரஹத்தை தியானிக்கவேண்டும்.)

அழகிய நாஸிகையையுடையதும் அழகிய புருவங்கள் அமைந்த அழகிய விசால நெற்றியையுடையதும், கிரீடத்திற்கு ஏற்றவாறு வளைந்த மழமழப்பான குந்தளங்களையுடையதும், மலரும் தாமரைபோல் நீண்ட அழகிய கண்களைக்கொண்டதும், நன்கு மலர்ந்து பலவித ரத்னங்கள்போல் பிரகாசிக்கும் நறுமலர் முடிமாலையணிந்ததுமாக விஷ்ணு மூர்த்தியை தியானிக்க வேண்டும். (5)

लसत्कुण्डलामृष्टगण्डस्थलान्तं
जपारागचोराधरं चारुहासम् ।
अलिव्याकुलामोदिमन्दारमालं
महोरस्स्फुरत्कौस्तुभोदारहारम् ॥ ६ ॥

லஸத் குண்டலாம்ருஷ்ட கண்டஸ்தலாந்தம்
ஜபாராக சோராதரம் சாருஹாஸம் |
அளி வ்யாகுலாமோதி மந்தாரமாலம்
மஹோரஸ்ஸ்புரத் கௌஸ்துபோதார ஹாரம் ||

**लसत्**–ஒளிவிடும், **कुण्डलामृष्ट**–குண்டலங்கள் உராயும், **गण्डस्थलान्तं**–கன்னபிரதேசங்களின் ஓரத்தை உடையதும், **जपाराग**–செம்பரத்தைப்பூவின் சிகப்பு நிறத்தை, **चोराधरं**–திருடும் (அதுபோல் சிவந்த) அதரம் உடையதும், **चारुहासं**–அழகிய புன்சிரிப்புக்கொண்டதும், **अलिव्याकुलामोदि**–வண்டுக் கூட்டங்களை ஆனந்தப்படுத்தும் வாசனையுள்ள, **मन्दारमालं**–மந்தார மலர்மாலை உடையதும், **महोरस्स्फुरत्**–அகன்ற மார்பில் விளங்கும், **कौस्तुभोदारहारं**–கௌஸ்துப மணியால் சிறந்த ஹாரமுடையதுமாக தியானிக்க வேண்டும்.

ஜ்வலிக்கும் கர்ணாபரண குண்டலங்களோடு உரசி விளங்கும் இரு கன்ன ப்ரதேசங்களையுடையவரும் செம்பரத்தைப் புஷ்பம் போல் நன்கு சிவந்த உதடுகளையுடையவரும் அழகிய புன்சிரிப்புக் கொண்டவரும் வண்டுக்கூட்டங்களை (தேன் நிரம்பியிருப்பதால்) சந்தோஷப்படுத்தும் மந்தார புஷ்மாலை அணிந்தவரும், அகன்ற மார்பில் விளங்கும் கௌஸ்துப மணியால் சிறந்து விளங்கும் முக்தாஹாரத்தையுடையவருமாக தியானிக்கவேண்டும். (6)

सुरत्नाङ्गदैरन्वितं बाहुदण्डै-
श्चतुर्भिश्चलत्कङ्कणालंकृताग्रैः ।
उदारोदरालंकृतं पीतवस्त्रं
पदद्वन्द्वनिर्धूतपद्माभिरामम् ॥ ७ ॥

ஸுரத்னாங்கதைரந்விதம் பாஹுதண்டை-
ச்சதுர்பிச்சலத் கங்கணாலங்க்ருதாக்ரை: |
உதாரோதராலங்க்ருதம் பீத வஸ்த்ரம்
பதத்வந்த்வ நிர்தூத பத்மாபிராமம் ||

सुरत्नाङ्गदैः-சிறந்த ரத்னங்கள் பதித்த தோள்வளைகளை யுடையதும், चलत्कङ्कणालंकृताग्रैः-அசைகின்ற கங்கணங் களினால் (காப்புகளினால்) அலங்கரிக்கப்பட்ட நுனியை உடையதுமான, चतुर्भिः-நான்கு, बाहुदण्डैः-தண்டம்போன்ற கைகளோடு, अन्वितं-கூடியதும், उदारोदरालंकृतं-சிறப்பாக வயிற்றில் அலங்கரிக்கப்பட்டதும், पीतवस्त्रं-மஞ்சள்நிற ஆடை உடையதும், पदद्वन्द्व-இரு திருவடிகளால், निर्धूत-पद्माभिरामं-தாமரைகளின் அழகை வென்றதுமான பகவா னின் மூர்த்தியை தியானிக்கவேண்டும்.

உயர்ந்த ரத்தினங்கள் பதித்த தோள் வளைகளினால் அழகியதும், அசையும் கங்கணங்களினால் அலங்கரிக்கப்பட்ட நுனியை உடையதுமான அழகிய நான்கு கைகளோடு கூடிய வரும் வயிற்றில் (இடுப்பில்) ஒட்டியாணம் முதலியவைகளால் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டவரும் பீதாம்பரமணிந்தவரும் தனது இரு திருவடிகளின் அழகினால் தாமரையை வென்றவரு மான பகவானின் மூர்த்தியை தியானிக்கவேண்டும். (7)

स्वभक्तेषु संदर्शिताकारमेवं
सदा भावयन्संनिरुद्धेन्द्रियाश्वः ।
दुरापं नरो याति संसारपारं
परस्मै परेभ्योऽपि तस्मै नमस्ते ॥ ८ ॥

ஸ்வபக்தேஷு ஸந்தர்ஶிதாகாரமேவம்
ஸதா பாவயன் ஸந்நிருத்தேந்த்ரியாச்வ: ।
துராபம் நரோ யாதி ஸம்ஸார பாரம்
பரஸ்மை பரேப்யோऽபி தஸ்மை நமஸ்தே ॥

एवं-இவ்வாறு (கீழ்கண்ட சுலோகங்களில் கூறியவாறு) स्वभक्तेषु-தம் பக்தர்களிடம், सन्दर्शिताकारं-காண்பிக்கப்பட்ட உருவமுள்ள பகவானை, सन्निरुद्धेन्द्रियाश्वः-நன்கு அடக்கப் பட்ட இந்திரியங்களாகிற குதிரைகளை உடையவனாக, सदा-எப்பொழுதும், भावयन्-தியானம் செய்துகொண்டிருக்கும்

नरः–மனிதன், दुरापं-பிறரால் அடையமுடியாத, संसारपारं–ஸம்ஸாரஸாகரத்தின் அக்கரையை (பகவத்பதத்தை) याति–அடைகிறுன். परेभ्योपि–சிறந்த வஸ்துக்களைக் காட்டிலும், परस्मै–சிறந்தவரான, तस्मै–அந்த, ते–உமக்கு, नमः–நமஸ்காரம்.

முதல் இரண்டு சுலோகங்களில் கூறியுள்ளபடி உண்மையில் பகவத் தத்வம் நிர்குணமாயும் வடிவமற்றதும், மனஸ் இந்திரியம் இவைகளுக்கு எட்டாததாயும் உள்ளபோதிலும் கருணையால் பகவான் பக்தர்கள் கடைத்தேற தமது மாயையால் மனம், இந்திரியம், இவைகளுக்குப் புலப்படும்படியாக ஸகுணமான ஸாகாரமான வடிவத்தை எடுத்துக்கொண்டு பக்தர்களுக்குக் காட்டுகிறுர். இந்த வடிவம்தான் 3-வது சுலோகம் முதல் 7-வது சுலோகம்வரை வர்ணிக்கப்பட்டது இதில் கூறப்பட்டபடி பகவன் மூர்த்தியை எப்பொழுதும் மனதால் தியானிப்பவன் பகவானின் ஸ்தானத்தை அடைவான். வேறு ஒருவரும் இதை அடையமுடியாது. ஆனுல் முரட்டுக் குதிரைகள் போன்ற இந்திரியங்கள் தியானம் செய்ய வொட்டாமல் மனதை இழுத்து சப்தம் முதலான விஷய தேசத்திற்குக் கொண்டுபோய் விடும். குதிரைகள் தனக்கு அடங்கியிருந்தால் தான் சரியான வழியில் சென்று உத்தேசித்த இடத்தை அடைடமுடியும். அதுபோல் இந்திரியங்களை முதலில் அடக்கி ஸ்வாதீனம் செய்துகொண்டு தியானம் செய்யவேண்டும். அப்பொழுது மனம் பகவன் மூர்த்தியிலேயே நிலைத்து நிற்கும். பகவானைக்காட்டிலும் சிறந்த வஸ்துவே இல்லாததாலும் அவரே எல்லாவற்றிலும் சிறந்து விளங்குவதாலும் அவரை அடையவே தியானம் மூலம் முயற்சிக்க வேண்டும். அப்பேற்பட்ட உமக்கு நமஸ்காரம். (8)

श्रिया शातकुम्भद्युतिस्निग्धकान्त्या
धरण्या च दूर्वादलश्यामलाङ्ग्या ।
कलत्रद्वयेनामुना तोषिताय
त्रिलोकीगृहस्थाय विष्णो नमस्ते ॥ ९ ॥

ச்ரியா மாதகும்பத்யுதி ஸ்நிக்த காந்த்யா
தரண்யா ச தூர்வாதள ச்யாமளாங்க்யா ।

களத்ரத்வயேநாமுநா தோஷிதாய
த்ரிலோகீ க்ருஹஸ்தாய விஷ்ணோ நமஸ்தே ||

विष्णो-விஷ்ணுவே! शातकुम्भद्युति-ஸுவர்ணகாந்தி போல், स्निग्ध-அழகான, कान्त्या-ஒளியுள்ள, श्रिया-லக்ஷ்மியாலும், दूर्वादल-அருகம்புல்போல, श्यामलाङ्ग्या-பசுமைநிறமான தேஹம்கொண்ட, धरण्या च-பூமியினாலும், अमुना-இந்த कलत्रद्वयेन-இருமனைவிகளால், तोषिताय-ஸந்தோஷப்படுத்தப்பட்டவரும், त्रिलोकीगृहस्थाय-முவ்வுலகமாகிற கிருஹத்தில் வஸிக்கும் கிருஹஸ்தராயுமுள்ள, ते-உமக்கு, नमः-நமஸ்காரம்.

ஹே விஷ்ணோ! பொன்னின் ஒளிபோல் அழகிய காந்தியை உடைய லக்ஷ்மீ தேவி, அருகம்புல் போல் கருத்த அழகிய தேகமுடைய பூதேவி என்னும் இந்த இரண்டு மனைவிகளால் மகிழ்விக்கப்படுபவரும் மூன்று உலகமாகும் கிருஹத்தில் வஸிப்பவரும் (ஸர்வ வியாபகமாக இருப்பதுபற்றி) ஆன உமக்கு நமஸ்காரம். உலகில் இருமனைவிகள் உள்ளவர் அநேகமாக வாழ்க்கையில் சந்தோஷமடைவதில்லை. ஏதாவது ஒருசமயம் ஸந்தோஷம் ஏற்பட்டாலும் அது மனைவிகள் மூலம் ஏற்பட்டிருக்காது வேறு வஸ்துக்களால் ஏற்பட்டிருக்கும். ஆனால் பகவானுக்கோ வெவ்வேறு நிறமுள்ள இரு மனைவிகள் இருந்தும் அவர்கள் மூலமே ஸந்தோஷமடைகிறார். இது ஆச்சர்யமல்லவா! இதற்குக்காரணமும் கூறுகிறார். அவர் த்ரிலோகீ கிருஹஸ்தர். குறுகிய புத்தி உள்ள கிருஹஸ்தருக்கு தன்னுடையது, பிறருடையது. என்ற வேற்றுமை இருப்பதால் ஸந்தோஷம் ஏற்படுவதில்லை பகவானுக்கோ முவ்வுலகும் குடும்பம்தான். ஆகவே அந்த வேற்றுமை இல்லாததால் தான் ஸந்தோஷம் ஏற்படுகிறது.

(9)

शरीरं कलत्रं सुतं बन्धुवर्गं
वयस्यं धनं सद्म भृत्यं भुवं च ।
समस्तं परित्यज्य हा कष्टमेको
गमिष्यामि दुःखेन दूरं किलाहम् ॥ १० ॥

ஶரீரம் களத்ரம் ஸுதம் பந்துவர்க்கம்
வயஸ்யம் தநம் ஸத்ம ப்ருத்யம் புவம் ச ।
ஸமஸ்தம் பரித்யஜ்ய ஹா கஷ்ட மேகோ
கமிஷ்யாமி துக்கேந தூரம் கிலாஹம் ॥

**शरीरं**-உடலையும், **कलत्रं**-மனைவியையும், **सुतं**-தனயனை யும், **बन्धुवर्गं**-உறவினர் கூட்டத்தையும் **वयस्यं**-நண்பனையும் **धनं**-பணத்தையும், **सद्म**-வீட்டையும், **भृत्यं**-வேலைக்காரனை யும், **भुवं च**-பூமியையும், **समस्तं**-எல்லாவற்றையும், **परित्यज्य**-விட்டுவிட்டு, **अहं**-நான், **एकः**-ஒருவனாக, **दुःखेन**-சிரமத் துடன், **दूरं**-வெகுதூரத்திற்கு, **गमिष्यामि किल**-போகப் போகிறேன் அல்லவா, **हा कष्टम्**-ஐயோ கஷ்டம்!

*சரீரம், மனைவி, புத்ரன், உறவினர் கூட்டம், நண்பன், பொருள், வீடு, பணியாள், நிலம் இவை எல்லாவற்றையும் விட்டு, ஹா கஷ்டம்! தன்னந்தனியாகவே துன்பத்துடன் வெகுதூரம் நான் செல்லப்போகிறேனே! (மரணம் நிச்சய மாதலால் அதன் பிறகு முன் செய்த கர்மப்பயனை ஒட்டி யமலோகம், மறுபிறப்பு அடையவேண்டி இவ்வுலகிலுள்ள எல்லா வற்றையும் விட்டு தான் மட்டும் தனியாக சிரமத்துடன் வெகு தூரம் செல்லவேண்டும், இவ்வுலகில் நாம் அபிமானம் கொண்ட மனைவியோ, பிள்ளையோ, பணமோ மற்றும் எதுவும் அச்சமயம் நம்முடன் கூட வராது அவைகளால் நம்மைக் காப்பாற்றவும் முடியாது. ஆகையால் மரணமெய்வதற்கு முந்தியே இச்சரீர வாழ்க்கைக் காலத்திலேயே விஷயப் பற்றற்று பகவானை சரண மடைந்து நல்வழி பெறுவது உசிதம் எனக்கருத்து)* (10)

जरेयं पिशाचीव हा जीवतो मे
वसामत्ति रक्तं च मांसं बलं च ।
अहो देव सीदामि दीनानुकम्पि-
न्किमद्यापि हन्त त्वयोदासितव्यम् ॥ ११ ॥

ஜரேயம் பிஶாசீவ ஹா ஜீவதோ மே
வஸாமத்தி ரக்தம் ச மாம்ஸம் பலம் ச ।
அஹோ தேவ ஸீதாமி தீநானுகம்பின்
கிமத்யாபி ஹந்த த்வயோதாஸிதவ்யம் ॥

इयं-இந்த, जरा-கிழத்தன்மையானது, पिशाचीव-பிசாசு போல், जीवतः-உயிருடனிருக்கும், मे-என்னுடைய, वसां-கொழுப்பையும், रक्तं च-ரக்தத்தையும், मांसं-மாம்ஸத்தை யும், बलं च-பலத்தையும், अत्ति-தின்றுவிடுகிறது. हा-கஷ்டம், अहो-ஐயோ, देव-தேவனே, सीदामि-துன்புறுகிறேன் दीनानुकम्पिन्-தீனர்களிடம் கருணைகொண்டவரே, अद्यापि-இப்பொழுதும், त्वया-உம்மால், किं उदासितव्यं-உதாஸீனமாக இருக்கவேண்டுமா, हन्त-கஷ்டம்!

*நான் உயிருடன் ஜீவித்துக்கொண்டிருக்கும் சமயத்திலேயே பேய் போன்ற இந்த மூப்புப்பிணி, எனது ரக்தம், மாம்சம், வசை என்னும் நரம்பு நீர், பலம் எல்லாவற்றையும் உட்கொள்ளுகிறதே! ஐயோ ஹே! தேவ! வருந்துகிறேன். ஐயோ! தீனர்களிடம் கருணை கொண்டவரே! இப்பவும் கூடவா (இந்த சமயத்திலும் கூடவா) நீ என்னிடம் பராங்முகமாக இருக்கவேண்டும். அந்தோ கஷ்டம்! (கிழத்தன்மை வந்துவிட்டால் ரக்தம் மாம்ஸம் பலம் எல்லாம் குறைந்துவிடுகிறது.)* (11)

**कफव्याहतोष्णोल्बणश्वासवेग-**
**व्यथाविस्फुरत्सर्वमर्मास्थिबन्धाम् ।**
**विचिन्त्याहमन्त्यामसंख्यामवस्थां**
**बिभेमि प्रभो किं करोमि प्रसीद ॥ १२ ॥**

கப வ்யாஹதோஷ்ணோல்பண ச்வாஸ வேக
வ்யதா விஸ்புரத் ஸர்வமர்மாஸ்தி பந்தாம் I
விசிந்த்யாஹமந்த்யா மஸங்க்யாமவஸ்தாம்
பிபேமி ப்ரபோ கிம் கரோமி ப்ரஸீத II

कफव्याहत-கபத்தால் தடைபட்டதும், उष्णोल्बण-உஷ்ண மானதும் அதிகமானதுமான, श्वासवेग-மூச்சுக் காற்றின் வேகத்தை உடையதும், व्यथाविस्फुरत्-வலியுடன் துடிக்கும், सर्वमर्मास्थिबन्धां-எல்லா மர்மஸ்தானங்களையும் எலும்பு மூட்டுகளையும் உடையதும், असंख्यां-எண்ண முடியாததுமான, अन्त्यां अवस्थां-கடைசி அவஸ்த்தையை

(மரணாவஸ்தையை), **विचिन्त्य**-நினைத்துப்பார்த்து, **अहं**-நான், **बिभेमि**-பயப்படுகிறேன், **प्रभो**-ப்ரபுவே, **किं करोमि**-என்ன செய்வேன் ? **प्रसीद**-அருள் செய்யவேணும்.

மரண ஸமயத்தில் சரீரத்திலிருந்து ப்ராணன் பிரியும் பொழுது கபம் மேலிட்டு அதனால் மூச்சுவிட முடியாமல் தடைப்பட்டு உஷ்ணமாகப் பெருமூச்சு விடுவான். மர்ம ஸ்தானங்களிலும் எலும்பு முட்டுகளிலும் வலி தாங்காமல் துடிப்பான். மனதால் எண்ணிப் பார்க்கவே முடியாத இந்த மரணவஸ்தை பின்னால் வரப்போவதை நினைத்து மிகவும் பயப்படுகிறேன். நான் என்ன செய்வேன் என்னால் இதிலிருந்து மீளமுடியாது. ப்ரபுவான தங்களுக்கு எல்லா ஸாமர்த்யமும் உண்டு. மேலும் வேலைக்காரனின் துன்பத்தைப் போக்கவேண்டியது யஜமானரின் பொறுப்பல்லவா! ஆகையால் ப்ரபுவே தாங்கள்தான் அருள் செய்து என்னைக் காப்பாற்றவேண்டும். (12)

लपन्नच्युतानन्त गोविन्द विष्णो
मुरारे हरे नाथ नारायणेति ।
यथानुस्मरिष्यामि भक्त्या भवन्तं
तथा मे दयाशील देव प्रसीद ॥ १३ ॥

லபந்நச்யுதாநந்த கோவிந்த விஷ்ணோ
முராரே ஹரே நாத நாராயணேதி ।
யதாநுஸ்மரிஷ்யாமி பக்த்யா பவந்தம்
ததா மே தயாசீல தேவ ப்ரஸீத ॥

**अच्युत**-அச்யுதா, **अनन्त**-அநந்தா, **गोविन्द**-கோவிந்தா, **विष्णो**-விஷ்ணோ, **मुरारे**-முராரே, **हरे**-ஹரே, **नाथ**-நாதா, **नारायण**-நாராயணா, **इति**-என்று, **लपन्**-சொல்லிக்கொண்டு **भक्त्या**-பக்தியுடன், **भवन्तं**-உம்மை, **यथा**-எவ்வாறு, **अनुस्मरिष्यामि**-ஸ்மரிப்பேனோ, **तथा**-அவ்வாறு, **दयाशील**-கருணாஸ்வபாவமுள்ள, **देव**-தேவனே, **मे**-எனக்கு, **प्रसीद**-அருள்புரியவேணும்.

ஹே அச்யுத! அனந்த! கோவிந்த! விஷ்ணோ! ஹே முராரே, ஹே ஹரே! ஹே நாத! ஹே நாராயண என்று

சொல்லிக்கொண்டு பக்தியுடன் உன்னை எவ்விதம் பின் காலங்களிலும் நான் ஸ்மரிப்பேனே; ஹே தயைபுரியும் சீலமுடைய தேவனே! அவ்விதம் எனக்கு அருள் புரியவேண்டும். (13)

भुजङ्गप्रयातं पठेद्यस्तु भक्त्या
समाधाय चित्ते भवन्तं मुरारे ।
स मोहं विहायाशु युष्मत्प्रसादा-
त्समाश्रित्य योगं व्रजत्यच्युतं त्वाम् ॥ १४ ॥

புஜங்க ப்ரயாதம் படேத் யஸ்து பக்த்யா
ஸமாதாய சித்தே பவந்தம் முராரே ।
ஸ மோஹம் விஹாயாஶு யுஷ்மத் ப்ரஸாதாத்
ஸமாச்ரித்ய யோகம் வ்ரஜத்யச்யுதம் த்வாம் ॥

मुरारे-முராஸுரனைக் கொன்றவரே, यस्तु-எவனொருவனில், चित्ते-மனதில், भवन्तं-உம்மை, समाधाय-நிலைநிறுத்தி, भक्त्या-பக்தியோடு, भुजङ्गप्रयातं-புஜங்கப்ரயாத ஸ்தோத்ரத்தை, पठेत्-படிப்பானோ, सः-அவன், युष्मत्प्रसादात्-உமது அருளினால், मोहं-மோஹத்தை, विहाय-விட்டு, आशु-சீக்கிரம், योगं-யோகத்தை, समाश्रित्य-அடைந்து अच्युतं-அச்யுதரான, त्वां உம்மை, व्रजति-அடைகிறான்.

எவர் பக்தியுடன் உன்னை மனதில் தியானித்துக்கொண்டு இந்த புஜங்க ப்ரயாதம் என்னும் ஸ்தோத்ரத்தை, படிக்கிறாரோ, அவர், மோஹம் என்னும் அஞ்ஞானம் விலகி உனது அருளினால் வெகு சீக்ரமாகவே (உன்னை ஸாக்ஷாத்கரிக்க உதவும் ஸாதனமான) யோக நிலையை அடைந்து அச்யுதனை அழிவற்ற நித்யப்பரம்பொருளான உன்னை அடைவான். தான் நழுவாமலிருப்பதுடன் தன்னையடைந்தவர்களையும் நழுவவிடாமல் செய்வதால்தான் அச்யுதன் என்று பகவானுக்குப் பெயர். (14)

ஸ்ரீ விஷ்ணுபுஜங்க ப்ரயாத ஸ்தோத்ரம் முற்றிற்று.

|| श्रीः ||

# || गोविन्दाष्टकम् ||

## கோவிந்தாஷ்டகம்

[இந்த ஸ்தோத்திரத்தில் ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் **प्रणमत गोविन्दं परमानन्दं** (பேரானந்தரூபியான கோவிந்தனை வணங்குங்கள்) என்று கோவிந்த பதம் காணப்படுவதாலும், இவ்வாருன எட்டு சுலோகங்கள் இருப்பதாலும் இதற்கு 'கோவிந்தாஷ்டகம்' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது **गो** என்ற பதம் பல பொருள்களைக் குறிப்பதால் **गोविन्द** பதமும் பல பொருள்களைக் காட்டுகிறது 'வேத வாக்குகளாலேயே அறியத் தக்கவர்' இது நிர்குண பரப்ரஹ்மத்தைக் குறிக்கும். வராஹ அவதாரமெடுத்து ஹிரண்யாக்ஷனைக்கொன்று பூமியை அடைந்தவர். கோவர்த்தன மலையைத்தூக்கி மழையிலிருந்து கோக்களை காப்பாற்றியதால் காமதேனுவே நேரில் வந்து கோவிந்தன் எனப் பெயர் சூட்டித் துதித்தது. வேதவாக்கை நமக்கு அருளுவதாலும் கோவிந்தர். இவ்வாறு ஸகுணத்தையும் நிர்குணத்தையும் கோவிந்த பதம் கூறுவதால் இந்த ஸ்தோத்திரத்தில் பகவானை ஸகுணமாகவும் நிர்குணமாகவும் வர்ணிக்கிருர். ஆனாலும் அதிகமாக கிருஷ்ணலீலைகளையே வர்ணிக்கிருர். அத்துடன் இந்த கிருஷ்ணனே ஸர்வேசுவரன் என்றும் நிர்குண ப்ரஹ்மமென்றும் ஒவ்வொரு சுலோகத்திலும் கூறுகிருர். பலனைக்கூறும் கடைசி 9வது சுலோகத்தில் கோவிந்தர்தான் சரீரத்திற்குள் விளங்கும் ஆத்மவஸ்து என்று கூறி ஜீவப்ரஹ்மைக்யத்தையும் காட்டுகிருர்.]

सत्यं ज्ञानमनन्तं नित्यमनाकाशं परमाकाशं
गोष्ठप्राङ्गणरिङ्गणलोलमनायासं परमायासम् ।
मायाकल्पितनानाकारमनाकारं भुवनाकारं
क्ष्मामानाथमनाथं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ १ ॥

ஸத்யம் ஞாநமநந்தம் நித்யமநாகாஶம் பரமாகாஶம்
கோஷ்ட ப்ராங்கண ரிங்கண லோலமநாயாஸம்
பரமாயாஸம் ।

மாயா கல்பித நாநாகாரமநாகாரம் புவநாகாரம்
க்ஷ்மாமாநாதமநாதம் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் ||

**सत्यं**–உண்மைப்பொருளாகவும், **ज्ञानं**–அறிவுமயமாயும், **अनन्तं**–எவ்வித பரிச்சேதமுமின்றி அளவு கடந்ததாயும், **नित्यं** – அழிவற்று எல்லாக் காலங்களிலுமிருப்பதாயும், **अनाकाशं**–ஜட ஆகாய ரூபமாக இல்லாததும், எங்கும் வியாபித்திருப்பதால் இடைவெளியற்றதாயும், **परमाकाशं**–ஹிருதய குஹை வெளியில் சைதன்ய ரூப ஆகாயமயமாக விளங்குவதும் (இவ்விஷயம், **आकाशः तल्लिङ्गात्**–என்ற வ்யாஸ ஸூத்ர அதிகரணத்தில் விளக்கப்பட்டுள்ளது), **गोष्ठप्राङ्गणरिङ्गणलोलं**–கோஷ்டம் என்னும் மாடு கட்டும் அங்கணத்தில் ஓடி விளையாடுவதில் ஈடுபட்டவரும், **अनायासं**–ஸர்வ வல்லமையுடையவராதலால் எதைச்செய்வதிலும் சிரமங் கொள்ளாதவரும், **परमायासं**–தனது சக்திரூபமான அவ்யக்தம் எனப்படும் சிறந்த மாயையினிடம் அதை அடக்கி இருந்துவருபவரும் **परमायायां उत्कृष्टशक्तिमन्मायायां आस्ते वर्तत इति**, அல்லது அந்தப்பரமாயையையும் தன்னை ஆச்ரயித்தே இருக்கும்படி செய்பவரும், **परां मायां आसयति इति वा ।** (மாயை என்னும் தனிப்பொருள் உண்மையில் இல்லாததால் தோன்றும் பொய்ப்பொருள்களுக்கு மூலகாரணமான அம்மாயைக்கு ஆதாரமான உண்மை அதிஷ்டானப் பொருளாக பரபிரம்மரூப பகவான் இருக்கிறார்.) **मायाकल्पितनानाकारं**–தனது சக்தி ரூபமான த்ரிகுணமயமான மாயையினால் கல்பிக்கப்பட்ட பல உருவங்களைக் கொண்டவராயும் **अनाकारं**–உண்மையில் எவ்விதஉருவமுமில்லாதவரும், **भुवनाकारं** ஸகல உலகமாக இருப்பவரும், (குடம் முதலான காரிய வஸ்துக்கள் காரணப் பொருளான மண்மயமாகவே இருப்பதுபோல் காரிய வஸ்துவான இவ்வுலகம் தனது காரணவஸ்துவான பிரம்மமயமாகவும் மண் குடஸ்வரூபமாக இருப்பதுபோல் காரணமான பரப்ரம்மம் காரியமான உலகரூபமாகவும் இருப்பது உசிதமே.) **क्ष्मामानाथं**-பூதேவிக்கும் லக்ஷ்மிக்கும் நாயகரும், பூமிக்கும் செல்வத்

திற்கும் அதிபதியும் अनाथं–தனக்கு வேறு ஒரு யஜமானன் இல்லாதவராயும் परमानन्दं–உயர்ந்த பிரம்மானந்தஸ்வரூபி யாகவும் உள்ள, गोविन्दं–ஸ்ரீ பகவான் கோவிந்தனை, प्रणमत–நமஸ்கரியுங்கள்.

ஸ்ரீ தேவிக்கும் பூதேவிக்கும் நாயகனை மஹாவிஷ்ணு' கோகுலத்தில் கோவிந்தராக அவதரித்து கோஷ்டத்தில் மாடுகளுடனும் கோபால பாலர்களுடனும் ஓடியாடி விளையாடினர். அவரே எல்லா உலகங்களுக்கும் அதிபதி. அவருக்குமேல் யஜமானன் ஒருவரும் கிடையாது. அவர் இதுபோல், எத்தனையோ உருவமெடுத்திருக்கிறர். உலகம் முழுவதுமே அவருடைய தோற்றம்தான். இந்த உருவங்களெல்லாம் மாயையால் ஏற்பட்டது. ஆகையால் வாஸ்தவத்தில் அவருக்கு உருவமே கிடையாது. மாயையால் எவ்வளவு உருவங்கள் எடுத்த போதிலும் ஸர்வசக்தரான அவருக்கு சிரமம் கொஞ்சமும் கிடையாது. அவருடைய உண்மையான ஸ்வரூபம் ஸச்சிதாநந்த ரூபமானது, எல்லா இடங்களிலும் எல்லாக்காலத்திலும் எல்லாமாகவும் இருப்பதால் எல்லையில்லாதவர். ஆகாசத்திற்கும் காரணமான சிதாகாசரூபி. இவ்வாறு பகவானின் பரமார்த்த தத்வத்தையும் அறிந்து கோவிந்தரை வணங்கவேண்டும். இந்த சுலோகத்தில் मायाकल्पितनानाकारं என்ற பதம் பிரஹ்மாவை மோகிக்கச் செய்ய கோபர்கள், வத்ஸங்கள் முதலான பல உருவங்களை கிருஷ்ணன் எடுத்துக்கொண்ட லீலையையும் குறிப்பிடுகிறது. (1)

मृत्स्नामत्सीहेति यशोदाताडनशैशवसन्त्रासं
व्यादितवक्त्रालोकितलोकालोकचतुर्दशलोकालिम् ।
लोकत्रयपुरमूलस्तम्भं लोकालोकमनालोकं
लोकेशं परमेशं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ २ ॥

ம்ருத்ஸ்நாமத்ஸீஹேதி யசோதா தாடந சைசவ ஸந்த்ராஸம்
வ்யாதித வக்த்ராலோகித லோகாலோக சதுர்தச லோகாளிம் ।
லோகத்ரயபுர மூலஸ்தம்பம் லோகாலோகமநாலோகம்
லோகேசம் பரமேசம் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் ॥

इह-இங்கு, मृत्स्नां-மண்ணை, अत्सि-தின்கிருயே, इति-என்று (கூறிவரும்), यशोदाताडन-யசோதை அடிக்கப்போகும் சமயம், शैशवसंत्रासं-சிறு குழந்தைத்தன்மைக்குத்தக்க பயத்தை அடைந்தவரும், व्यादित-திறக்கப்பட்ட, वक्त्रा-लोकित-வாயில் காட்டப்பட்ட, लोकालोकचतुर्दशलोकालिं-லோகாலோக பர்வதங்களுடன் கூடிய பதினன்கு உலகங்களையும் உடையவரும், लोकत्रयपुरमूलस्तम्भं-மூன்று லோகங்களாகிற நகரத்திற்கு ஆதாரஸ்தம்பமாக இருப்பவரும், लोकालोकं-உலகங்களை பிரகாசப்படுத்துகிறவரும், லோகங்களைப் பார்க்கிறவரும், अनालोकं-தனக்கு வேறு பிரகாசமில்லாமல் தான் ஸ்வயம்ப்ரகாசமாக இருப்பவரும் அக்ஞானிகளால் காணப்படாதவரும், लोकेशं-உலகங்களுக்கு ஈசுவரனும், परमेशं-ஈசுவரர்களான தேவர்களுக்கும் மேலான ஈசுவரனும், परमानन्दं-உயர்ந்த ஆனந்தரூபியுமான, गोविन्दं-கோவிந்தனை प्रणमत-வணங்குங்கள்.

"இங்கு மண்ணை தின்னுகிருயே" என்று கூறிக்கொண்டு யசோதை கோபித்துக்கொண்டு அடிக்கவரும் சமயம் தனது பால்ய வயது வேஷத்திற்குத் தகுந்தவாறு பயந்து நடுங்குகிறவராயும் திறந்தவாயில் காண்பிக்கப்பட்ட லோகாலோக பர்வதங்களுடன் கூடிய பதினன்கு உலக வரிசையையுடையவரும் (ஒவ்வொரு உலகமும் கிழக்கிலும் மேற்கிலும் லோகாலோக பர்வதங்கள் எனும் உதய அஸ்தமன பர்வதங்களையுடையது. அப்பர்வதங்களின் ஒருபாகத்திலேயே சூர்ய சஞ்சாரமிருப்பதால் அப்பாகங்கள் வெளிச்சமுடையவை. மற்ருெரு பாகம் எப்பொழுதும் இருள் சூழ்ந்தது. ஆதலால் ப்ரகாசமும் அப்ரகாசமும் கொண்டுள்ளது பற்றி அப்பர்வதங்கள் லோகாலோக பர்வதங்கள் எனக் கூறப்படுகின்றன.

ஸ்வர்க்கம் பூமி பாதாளமென்னும் முவ்வுலகமாகிற நகரத்தை தாங்கி நிற்கும் ஆதாரத் தூணை விளங்குகிறவரும் உலகத்தைப் பிரகாசப்படுத்துகிறவரும் முவ்வுலகமும் அவரை ஆதாரமாகக் கொண்டு இருப்பதால் அதிஷ்டானமாக விளங்கும் அவரது சைதன்ய பிரகாசத்தினலேயே அவரிடம் கல்பிக்கப்பட்ட உலகமும் ப்ரகாசிக்கிறது. கல்பிக்கப்பட்ட பொய்ப் பொருள்

களுக்குத் தனியாக சொந்த ப்ரகாசமும் இருப்பும் கிடையாது. கிளிஞ்சலில் கல்பிக்கப்பட்ட வெள்ளிக்கும், பழுதைக் கயிறில் கல்பிக்கப்பட்ட பாம்பிற்கும், மண்ணில் கல்பிக்கப்பட்ட குடம் முதலானவற்றிற்கும் காரண அதிஷ்டானம் என்னும் ஆதாரப் பொருளான கிளிஞ்சல், பழுதைக்கயிறு, மண் இவைகளின் இருப்பைத்தவிற வேறு ஸத்தை உண்டா? அப்படி இருந்தால் கிளிஞ்சலும் வெள்ளியும், கயிறும் பாம்பும், மண்ணும் குடமும் என இரண்டு பொருள்கள் இருக்கின்றனவென்று தோன்ற வேண்டுமே! அப்படித் தோன்ருததால் ஆரோபித கல்பிதப் பொருள் தனது ஆதாரத்தின் இருப்பினுலேயே தோன்றுகிறது என்பது சித்தாந்தம். அவ்வித சித்தாந்தப்படி உலகம் பூருவும் பரப்பிரம்மத்தினிடம் கல்பிதமாதலால் அந்த ஆதார பரபிரம்மத் தினுலேயே ப்ரகாசிக்கிறது, தனிப்ரகாசமற்றது என்னும் உண்மை கூறப்பட்டுள்ளது.

**लोकान् आलोकयति स्वात्मभासा प्रकाशयति इति लोकालोकः।**

அல்லது உலகமனைத்தையும் அதில் பற்றுக்கொள்ளாது ஸாக்ஷி யாகப் பார்த்துக்கொண்டிருக்கிறவர் எனவும் பொருள் கொள்ள லாம். அல்லது லோகம் என்பது சரீரத்தைக் குறிக்கிறது. உபாஸகர்களை அனுக்ரஹிக்கப் பல அவதார சரீரம் எடுப்பதால் சரீரமுடையவராகவும், உண்மையில் சரீரமெடுப்பதற்குக் காரண மான புண்யம் பாபம் என்னும் கர்ம ஸம்பந்தமற்றவராதலால் சரீரமே இல்லாதவர் என்றும் பொருள் கொள்ளலாம். எல்லா வற்றையும் ப்ரகாசிக்கச் செய்யும் தனக்கு ப்ரகாசத்தையுண்டு பண்ணும் மற்ருெரு சைதன்யப்ரகாசப்பொருள் இல்லாதவராயும், (அவரது அருளின்றி காணமுடியாதவராயும் என்றும் கூறலாம்) உலகத்திற்கு இறைவனையும், லோகமென்னும் சரீரத்திற்கு ஈசனை ஜீவனுக இருப்பவரும், எல்லா யஜமானர்களுக்கும் மேற்பட்ட உயர்ந்த அடக்கி ஆளும் ப்ரபுவான பரமாத்மாவாகவும் உயர்ந்த ஆனந்த கனரூபமாயுமுள்ள ஸ்ரீ கோவிந்தனை நமஸ்கரியுங்கள். (2)

त्रैविष्टपरिपुवीरघ्नं क्षितिभारघ्नं भवरोगघ्नं
कैवल्यं नवनीताहारमनाहारं भुवनाहारम्।
वैमल्यस्फुटचेतोवृत्तिविशेषाभासमनाभासं
शैवं केवलशान्तं प्रणमत गोविन्दं परमानन्दम्॥ ३॥

த்ரைவிஷ்டப ரிபுவீரக்நம் க்ஷிதிபாரக்நம் பவரோகக்நம்
கைவல்யம் நவநீதாஹாரமநாஹாரம் புவநாஹாரம் 1
வைமல்ய ஸ்புட சேதோவ்ருத்தி விஶேஷாபாஸமநாபாஸம்
ஶைவம் கேவல ஶாந்தம் ப்ரணமத கோவிந்தம்
பரமாநந்தம் II

त्रैविष्टपरिपुवीरघ्नं-ஸ்வர்க்கத்தில் வாழும் தேவர்களின் எதிரிகளான அஸுரவீரர்களைக் கொன்றவரும், क्षितिभारघ्नं-பூமியின் பாரத்தைத் தொலைத்தவரும், भवरोगघ्नं-ஸம்ஸாரமாகிற (பிறவி மரணம்) வியாதியை அழிப்பவரும், कैवल्यं-(உண்மையில்)தான் ஒருவனுகவே இருப்பவரும், नवनीताहारं-வெண்ணையை உண்பவரும், अनाहारं-(உண்மையில்) ஆஹாரமில்லாதவரும், भुवनाहारं-(பிரளயத்தில்) உலகத்தை சாப்பிடுகிறவரும், वैमल्यस्फुट-தோஷங்கள் நீங்கி ஸ்பஷ்டமாக உள்ள, चेतोवृत्तिविशेषाभासं-சிறந்த மனோவிருத்தியில் விளங்குபவரும், अनाभासं-(மற்ற இடத்தில்) விளங்காதவரும், शैवं-மங்களஸ்வரூபரும், केवलशान्तं-தனித்து விகாரமற்று இருப்பவரும், परमानन्दं-சிறந்த ஆனந்த ரூபியுமான गोविन्दं-கோவிந்தனை, प्रणमत-வணங்குங்கள்.

ஸ்வர்க்கலோகவாஸிகளான தேவர்களுக்குச் சத்ருக்களான அசுரராக்ஷஸ வீரர்களைக் கொன்றவரும், பாபிகள் நிறைந்ததால் ஏற்பட்ட பூமியின் பாரத்தை, அப்பாபிகளை அழித்துப் போக்குகிறவரும், இச்சம்சாரப்பிணி ஏற்படுவதற்குக் காரணமான அக்ஞானத்தை ஒழிக்க அத்வைத ஆத்ம ஞானமென்னும் மருந்து கொடுத்து உதவுவதால் இச்சம்சாரபிணியைப் போக்குகிறவரும் தான் உண்மைப் பொருள் ஆதலாலும் மற்றப் பொருள்கள் பொய்ப் பொருள்களாதலாலும் அவை அக்ஞானத்தினல் தோன்றுபவையாதலாலும் அவைகளுடன் ஸம்பந்தமற்றுத் தனித்து ஒரே உண்மைப் பொருளாக இருப்பவரும் கிருஷ்ணவதாரத்தில் இளம் வயதில் வெண்ணை உண்ணுபவரும், ஜீவாத்மாக்களுக்கு ஏற்படும் பசி தாகம் தணிய உணவு அருந்துவது ஆவச்யகம்போல பரமாத்மாவிற்கு பசி தாகம் கிடையாததால் அதை நீக்க உணவு உண்பதும் தேவையில்லை. பசி தாக சீதோஷ்ண காமக்ரோதங்கள் ப்ராணன், சரீரம், மனது

இவைகளின் தர்மங்கள். அவைகளில் அபிமானங்கொள்வதால் ஜீவாத்மாவிற்கு அவை ஏற்படுகின்றன. அவைகளில் அஸங்கனுக இருப்பதால் பரமாத்மா அவ்வித பசிதாகாதி தோஷங்களால் தாக்கப்படுவதில்லை. ப்ரளய காலத்தில் ஸம்ஹாரமூர்த்தியா யிருந்து உலகம் அனைத்தையும் பக்ஷிப்பதுபோல் அழிக்கிறார். இத்தத்வம் 'यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः' என்ற உபநிஷத் வாக்ய பொருள் விசாரரூபமான 'अत्ता चराचरग्रहणात्' என்ற வ்யாஸஸூத்ர அதிகரணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. யோகிகளின் நிர்மலமாக விளங்கும் மனோவிருத்திகளில் சிறந்த ப்ரம்மாகார அகண்ட விருத்தியில் ப்ரகாசிப்பவரும் 'प्रतिबोधविदितं मतं', 'आत्मबुद्धिप्रकाशं' என்பது போன்ற பல வசனங்கள் ப்ரமாணங்கள். மந்த புத்தியுள்ளவர்களின் மனோவிருத்தியில் ப்ரகாசிக்காதவரும் உண்மை ப்ரகாசரூபமாதலால் கண்ணாடியில் தெரியும் ப்ரதிபிம்பம் ஆபாசம் எனச்சொல்லப்படுவதுபோல் ஆபாசம், பொய் என்று பின்னால் நிர்ணயிக்கப்படும் ப்ரகாசரூபமற்றவர், சூர்யன் சந்திரன் நக்ஷத்ரங்கள் அக்னிபோன்ற தேஜோவஸ்துக்களையும் தனது ப்ரகாசத்தால் ப்ரகாசப்படுத்தும் பொருள், உயர்ந்த ப்ரகாசப் பொருளே, அல்ப ப்ரகாச வஸ்துவல்ல, அவைகளால் பிரகாசப் படுத்தமுடியாதவர் எனவும் பொருள் கொள்ளலாம். மங்களரூபி சிவபெருமானிடம் பக்தி கொண்டவர். இவ்வுண்மை பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ஸத்யபாமையுடன் உபமன்யு மஹர்ஷியிடம் சிவ தீக்ஷை பெற்று சிவபஞ்சாக்ஷர உபதேசம் பெற்ற கதையில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அது பற்றியே ஸ்ரீகிருஷ்ணனுக்கு 'शिवकीर्तनः' என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டுள்ளது. 'शान्तं शिवं' என்று மாண்டூக்ய உபநிஷத்தில் கூறியபடி துரீய அவஸ்தையில் எந்தவித ஸம்பந்தமும் அற்றுத் தனித்து பரமசாந்தமாக விளங்குபவரும், பரமானந்த ஸ்வரூபியாயும் உள்ள ஸ்ரீகோவிந்தனை நமஸ்கரியுங்கள். (3)

गोपालं भूलीलाविग्रहगोपालं कुलगोपालं
गोपीखेलनगोवर्धनधृतिलीलालालितगोपालम् ।
गोभिर्निगदितगोविन्दस्फुटनामानं बहुनामानं
गोधीगोचरदूरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ४ ॥

கோபாலம் பூலீலா விக்ரஹ கோபாலம் குலகோபாலம்
கோபீ கேலந கோவர்த்தனத்ருதி லீலா லாலித கோபாலம் I
கோபிர் நிகதித கோவிந்த ஸ்புட நாமாநம் பஹுநாமாநம்
கோதீகோசர தூரம் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் II

गोपालं-வேதத்தைக் காப்பாற்றுகிறவரும், प्रभुलीलाविग्रहगोपालं-தான் எல்லா உலகங்களுக்கும் பிரபுவாக இருந்தும் விளையாட்டாக கோபசரீரம் எடுத்தவரும், कुलगोपालं-இடையர் வம்சத்தைச் சேர்ந்தவரும், गोपीखेलन-கோபியர்களுடன் விளையாடல், गोवर्धनधृति-கோவர்த்தன மலையைத் தூக்கி கையில் தாங்குதல், लीला-இந்த விளையாட்டுகளால் लालितगोपालं-கோபர்களை ஸந்தோஷப்படுத்தியவரும், गोभिः பசுக்களால், निगदित-கூறப்பட்ட, गोविन्दस्फुटनामानं-'கோவிந்தன்' என்ற பிரஸித்தமான பெயர்கொண்டவரும், बहुनामानं-அநேகம் பெயர்கள் உள்ளவரும், गोधीगोचरदूरं-இந்திரியங்கள், புத்தி இவைகளுக்கு விஷயமாவதிலிருந்து வெகுதூரத்திலிருப்பவரும், परमानन्दं-மேலான ஆனந்த ரூபியுமான, गोविन्दं-கோவிந்தனை, प्रणमत-வணங்குங்கள்.

'गो' என்ற பதத்திற்கு பசு, சப்தம், பூமி முதலான பல பொருள்கள் உண்டு ஆதலால் பசுக்களை, வேதங்களை, பூமியை பசுதுல்யர்களான ஜீவர்களைக் காப்பாற்றுகிறவர் என்று சொல்லலாம் எளிதில் எல்லாவற்றையும் செய்ய ஆற்றலுள்ள தனது (மற்றவர்களால் செய்யமுடியாத) விளையாட்டுருபமான லீலையாகவே (கர்மபலத்தை அனுபவிக்க ஜீவர்கள் எடுக்கும் சரீரம்போல் அல்லாது) இச்சையினாலேயே எடுத்துக்கொள்ளப்பட்ட அழகிய திரு உருவமான கோபவேஷம் கொண்டவரும், அல்லது லீலையாகவே எடுத்துக்கொள்ளப்பட்ட சரீரமுடைய கோபால பிரபு ரூபமாயும், இடைய வேஷத்துடனிருந்தாலும் இவர் மற்ற இடையரைப் போன்றவர் அல்ல, ஸர்வலோக ப்ரபு என்பதும் அப்பேற்பட்ட பிரபுவாக இருந்தாலும் கருணையால் கோப சரீரமெடுத்தார் என்பதும் காட்டப்படுகிறது. கோப வம்சத்தைச் சேர்ந்தவரும், கோபிகா ஸ்திரீகளுடன் விளையாடுவதாலும் இந்திரனின் கர்வத்தை அடக்க கோவர்த்தன பர்வதத்தைப் பெயர்த்துத் தூக்கிப்பிடிப்பது என்ற விளையாட்டி

னுலும் சந்தோஷிக்கும்படி செய்யப்பட்ட இடையர்களை உடைய வரும் (இந்திரனுல் பொழிவிக்கப்பட்ட பலத்த இடிமின்னல் மழையிலிருந்து பயமின்றி காப்பாற்றப்பட்டனர்.) பசுக்களால், ஜீவர்களால், சப்தருபமான வேதங்களினுல், ஸரஸ்வதீ, பூமி, லக்ஷ்மீ முதலிய தேவதைகளினுல் போற்றிக்கூறப்படும் 'கோவிந்தன்' என்ற ப்ரசித்த பெயர் கொண்டவரும் அனந்த கல்யாண குணங்களை வெளியிடும் பல பெயர்களை உடையவரும், பக்தர்களின் மனதை அதிகமாக தன்னிடம் பற்றுக்கொண்டு வளையும்படி, வணங்கும்படி செய்கிறவரும், நன்கு மதித்து தியானம் செய்யப்பட வேண்டிய திருநாமங்கொண்டவரும், பசுபோல் மந்தபுத்தியுள்ளவர்களின் புத்திக்கு வெகு தூரத்தில் இருப்பவரும் இந்திரியங்களாலும் புத்தியாலும் அறியமுடியாதவரும் பரமானந்த ஸ்வருபியுமான பகவான் கோவிந்தனை நமஸ்கரியுங்கள். (4)

गोपीमण्डलगोष्ठीभेदं भेदावस्थमभेदाभं
शश्वद्गोखुरनिर्धूतोद्गतधूलीधूसरसौभाग्यम् ।
श्रद्धाभक्तिगृहीतानन्दमचिन्त्यं चिन्तितसद्भावं
चिन्तामणिमहिमानं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ५ ॥

கோபீமண்டல கோஷ்டீபேதம் பேதாவஸ்த்தமபேதாபம்
ஶச்வத் கோகுர நிர்தூதோத்கத தூளீ தூஸர
ஸௌபாக்யம் ।
ச்ரத்தா பக்தி க்ருஹீதாநந்த மசிந்த்யம் சிந்தித ஸத்பாவம்
சிந்தாமணி மஹிமாநம் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் ॥

गोपीमण्डलगोष्ठीभेदं–கோபீமண்டலங்களின் பல கோஷ்டிகளை உடையவரும், भेदावस्थं–(மாயையால்) வெவ்வேறுன பல அவஸ்த்தைகளை உடையவரும், अभेदाभं–(உண்மையில்) வேற்றுமையற்ற ஒரே சைதன்யமாக இருப்பவரும், अभेदा आभा यस्येति ஞானிகளுக்கு வேற்றுமை இல்லாமல் ஒரே வஸ்துவாக பிரகாசிப்பவரும், शश्वत्–அடிக்கடி, गोखुर–பசுக்களின் குளம்புகளால், निर्धूत–கிளப்பப்பட்டு, उद्गत–மேலே பரவிய, धूलीधूसरसौभाग्यं–புழுதிகளால் மங்கிய அழகை உடையவரும், श्रद्धाभक्तिगृहीतानन्दं–(பக்தர்களால்) சிரத்தையாலும் பக்தியாலும் அறிந்துகொள்ளப்பட்ட ஆனந்தஸ்வ

ரூபரும், **अचिन्त्यं**—ஆலோசித்து அறியமுடியாதவரும், **चिन्तितसद्भावं**-(உபநிஷத்துக்கள் மூலம்) விசாரித்து அறிந்து கொள்ளப்பட்ட ஸத்வஸ்துவாக உள்ளவரும், **चिन्तामणिमहिमानं**—சிந்தாமணி ரத்னத்திற்கொப்பான மஹிமை உள்ளவரும், **परमानन्दं**—சிறந்த ஆனந்த ரூபியுமான, **गोविन्दं**—கோவிந்தரை, **प्रणमत**—வணங்குங்கள்.

ராஸக்கிரீடை, ஜலக்கிரீடை செய்யும் காலங்களில் கோபிகா மண்டலங்களின் பல கோஷ்டிகளில் கலந்து கொள்கிறவரும், பல கூட்டங்களில் ஆடல் பாடல் முதலிய கோஷ்டி விசேஷங்களில் ஈடுபடுகிறவரும் மாறுபாடுள்ள பல அவஸ்தைகளையுடையவரும், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, பால்யம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்யம் என்று மாறுபட்ட பல அவஸ்தைகளிலும் சித்ரூப ஆத்மரூபமாகத் தான் மாருமல் இருப்பவரும், பரப்ரம்ம ஸ்வரூபமான பகவான் தன்னிடம் அறியாமையினல் ஜீவர்கள் காணும் கல்பித பொய்யான த்வைதமென்னும் பேதத்திற்கு ஆதார அதிஷ்டானமாக இருப்பவரும் உண்மையில் பேதமற்ற ஒரே சித் பொருள், ஞான ஒளியாக இருப்பவரும் பசுக்களை மேய்த்து ஓட்டும் சமயம், அடிக்கடி அங்குமிங்கும் ஓடும் மாடுகளின் குளம்புகளிலிருந்து உயரக்கிளம்பி பரவி விழும் மண் புழுதிகளினல் மங்கிய அழகையுடையவரும், அல்லது புழுதிகளினல் சரீரம் அழுக்கடைந்தாலும் மங்காத அழகையுடையவரும், நம்பிக்கை, பக்தி இவைகளினல் பக்தர்களிடம் ஆனந்தமடைகிறவரும் பக்தர்கள் தங்களது சிரத்தை பக்திகளினல் அதன் பலனக ஆனந்தத்தை அடையும்படி செய்கிறவரும் சிந்தனைக்கு எட்டக்கூடிய நாமரூபமற்றவராதலால், மற்றப் பொருள்களைப்போல் நினைக்கமுடியாதவரும், யோகிகள் ஞானிகள் இவர்களால் தத்வ விசாரம் செய்து த்யானம் செய்யப்படும் ஸத் வஸ்து ஸ்வரூபமாக இருப்பவரும், ப்ரம்மம் ஒன்றே ஸத் என்னும் உண்மைப்பொருள், மற்றப்பொருள்கள் யாவும் அக்ஞான காரணத்தால் தோன்றி, பின் அக்ஞானம் விலகியவுடன் அழிவதால் அஸத், உண்மையில் இல்லாத பொருள்கள். பக்தர்களின் மனோரதங்களைப் பூர்த்தி செய்வதில் சிந்தாமணி என்னும் ரத்னத்திற்கொப்பான மஹிமையையுடையவரும் சிந்தாமணி ரத்னத்திற்கும் அச்சக்திரூப மஹிமையை அளித்தவரும் பரம ஆனந்த ஸ்வரூபருமான ஸ்ரீ கோவிந்தனை நமஸ்கரியுங்கள். (5)

स्नानव्याकुलयोषिद्वस्त्रमुपादायागमुपारूढं
व्यादित्सन्तीरथ दिग्वस्त्रा दातुमुपाकर्षन्तं ताः ।
निर्धूतद्वयशोकविमोहं बुद्धं बुद्धेरन्तःस्थं
सत्तामात्रशरीरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ६ ॥

ஸ்நாந வ்யாகுல யோஷித் வஸ்த்ரமுபாதாயாகமுபாரூடம்
வ்யாதித்ஸந்தீரத திக்வஸ்த்ரா தாதுமுபாகர்ஷந்தம் தா: I
நிர்தூத த்வய ஶோக விமோஹம் புத்தம் புத்தே
ரந்தஸ்த்தம்
ஸத்தாமாத்ர ஶரீரம் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் ll

स्नानव्याकुल-குளிப்பதில் ஈடுபட்டுள்ள, योषिद्वस्त्रं-கோபிகாஸ்திரீகளின் ஆடையை, उपादाय-எடுத்துக்கொண்டு, अगं-மரத்தில், उपारूढं-ஏறிக்கொண்டவரும், अथ-பிறகு, दातुं-ஆடைகளைக் கொடுப்பதற்கு, व्यादित्सन्तीः-(புடவைகளை) வாங்கிக்கொள்வதற்கு விரும்புகிற, दिग्वस्त्राः-திசைகளை ஆடைகளாகக்கொண்ட (ஆடையில்லாமலிருக்கும்), ताः-அவர்களை, उपाकर्षन्तं-சமீபத்தில் அழைக்கிறவரும் निर्धूतद्वयशोकविमोहं-வேற்றுமை, அதனாலுண்டாகும் சோக மோஹங்கள் இவைகள் அற்றவரும், பக்தர்களிடமுள்ள வேற்றுமை, சோகம் மோகம் இவற்றைப்போக்கடிப்பவரும், बुद्धं-(எப்பொழுதும் எல்லாவற்றையும் ஸாக்ஷியாக) அறிந்து கொள்கிறவரும், बुद्धेः-புத்திக்கும், अन्तःस्थं-உள்ளே இருப்பவரும் (புத்தியால் அறியமுடியாதவரும்) सत्तामात्रशरीरं-ஸத்தை, இருப்பது என்பதை மட்டுமே ஸ்வரூபமாகக் கொண்டவரும், परमानन्दं-மேலான ஆனந்தஸ்வரூபருமான, गोविन्दं-கோவிந்தரை, प्रणमत-நமஸ்கரியுங்கள்.

ஸ்னானம் செய்வதில் ஈடுபட்டிருந்த கோபிகா ஸ்திரீகளின் ஆடையை (கரையில் வைக்கப்பட்டிருந்ததை) எடுத்துக்கொண்டு, கரையில் உள்ள ஓர் மரத்தில் ஏறிக்கொண்டவரும் பிறகு ஆடைகளைக் கொடுப்பதற்கு திரும்பப் பெற்றுக்கொள்ள விரும்புகிறவர்களும் ஆடையின்றி நிர்வாணமாக நிற்கின்றவர்களுமான அந்த

கோபிகா ஸ்திரீகளைத் தன் சமீபம் வரும்படி அழைக்கிறவரும் பக்தர்களுக்கு ஏற்பட்டிருக்கும் வேற்றுமை, சோகம், மோஹம் என்னும் கஷ்டங்களைப் போக்குகிறவரும், (அனாத்ம வஸ்துக்களில் நான் என்னுடையது என அத்யாஸம் மோஹம், அப்பொருள்களின் அழிவால் தனக்கே அவ்வழிவு வந்ததாகக்கருதி அடையப்படும் துன்பம் சோகமெனப்படும்) என்றும் எல்லாவற்றையும் ஸாக்ஷியாக அறிந்து கொண்டிருப்பவரும், மனோவிருத்தியினுடைய உள்ளே இருந்து அவ்விருத்தியையும் தனது ப்ரதிபிம்ப ஒளியால் ப்ரகாசப்படுத்திக்கொண்டிருப்பவரும், (பிம்பத்தை அதன் பிரதிபிம்பத்தைப்பார்த்து அறிந்துகொள்வது போல் மனோவிருத்தி என்னும் புத்திவிருத்திகளின் ப்ரகாசத்தைக் கொண்டு அவைகளை ப்ரகாசிக்கச்செய்யும் ப்ரகாச ஆன்ம வஸ்துவை அறிகிறார்கள். புத்திக்கும் உள்ளே இருப்பதால் நேரிடையாக புத்தியால் அறியமுடியாதவர். 'प्रतिबोधविदितं मतं' 'आत्मबुद्धिप्रकाशं' என்பது போன்ற வசனங்கள் இவ்விஷயத்தில் பிரமாணம். என்றும் மாறாமல் இருப்பது எனப்படும் தன்மை ஸத்தை எனப்படும். பரபிரம்மம் அந்த ஸத்தா ஸ்வரூபத் தன்மையைத்தவிற வேறு எந்த சரீரத்தையும் உருவத்தையும் உடையது அல்ல. மற்றப்பொருள்கள் இந்த ப்ரம்ம ஸத்தையை ஆதாரமாகக்கொண்டு பல சரீர உருவங்களில் அறியப்படுகின்றன. எல்லா வஸ்துக்களும் இருக்கின்றன என்று கூறக் காரணமான, இருக்கும் தன்மை என்பது உண்மைப்பொருள். அதையுடையதாகத் தோன்றும் உருவங்கள் கல்பிதமாதலால் பொய்ப்பொருள்களே. இவ்விதமான பரமானந்த ஸ்வரூப கோவிந்தனை நமஸ்கரியுங்கள். (6)

कान्तं कारणकारणमादिमनादिं कालघनाभासं
कालिन्दीगतकालियशिरसि सुनृत्यन्तं मुहुरत्यन्तम् ।
कालं कालकलातीतं कलिताशेषं कलिदोषघ्नं
कालत्रयगतिहेतुं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ७ ॥

காந்தம் காரண காரணமாதி மநாதிம் காலகநாபாஸம்
காளிந்தீகத காளிய ஶிரஸி ஸுந்ருத்யந்தம்
முஹுரத்யந்தம் ।

காலம் காலகலாதீதம் கலிதாஶேஷம் கலிதோஷக்நம்
காலத்ரயகதி ஹேதும் ப்ரணமத கோவிந்தம் பரமாநந்தம் ll

**कान्तं**-மிகஅழகியவரும், **कारणकारणं**-காரணப்பொருள் களுக்கும் காரணமாக, மூலகாரணமாக இருப்பவரும், **आदिं**-எல்லாப் பொருள்களுக்கும் முன்னால் இருப்பவரும், **अनादिं**-தனக்கு முன்னதாக காரணமாக வேறுபொருளற்றவரும், **कालघनाभासं**-நீருண்ட மேகத்தின் ஒளியுள்ளவரும், **कालिन्दीगत**-யமுனையில் உள்ள, **कालियशिरसि**-காளிய ஸர்ப்பத்தின் தலையில், **मुहुः**-அடிக்கடி, **अत्यन्तं**-நன்றாக, **सुनृत्यन्तं**-அழகாக ந்ர்த்தனம் செய்கிறவரும், **कालं**-காலஸ்வரூபியும், **कालकलातीतं**-காலத்தின் செய்கைக்கு உட்படாமல் அதற்கு அப்பாலிருப்பவரும், **कलिताशेषं**-எல்லாவற்றையும் உண்டு பண்ணியவரும், **कलिदोषघ्नं**-கலியின் தீங்குகளைப்போக்குகிற வரும், **कालत्रयगतिहेतुं**-மூன்று காலங்களும் செயல்படுவதற்குக் காரணமாக இருப்பவரும், **परमानन्दं**-சிறந்த ஆனந்த ஸ்வரூபியுமான, **गोविन्दं**-கோவிந்தரை, **प्रणमत**-வணங்குங்கள்

*மிக்க அழகுடையவரும், யாவராலும் விரும்பப்படுகிறவரும், எல்லா வஸ்துக்களுக்கும் ஆதிகாரணமாக ஊஹிக்கப்பட்டுள்ள த்ரிகுணாத்மக மூல ப்ரகிருதிக்கும் காரணமாக இருப்பவரும் (ஸாங்கியமதத்தில் அந்த மூலப்ரகிருதி என்னும் மூலகாரணம் நித்யம், தனக்குக் காரணமில்லாதது என்று கூறப்பட்டாலும் அதனால் ஆத்மா, மூலப்ரகிருதி என இரண்டு உண்மைப் பொருள்கள் இருப்பதாக எற்படுவதால் இரண்டாவது பொருள் இல்லையென கூறும் அத்வைதம் ஸித்திக்காது என, வேதாந்திமதத்தில் அந்த மூலகாரண மூலப்ரகிருதியும் அந்த பிரம்மத்தில் கல்பிக்கப்பட்டதே. பழுதைக்கயிறு, அதில் கல்பிக்கப்பட்ட பாம்பிற்குக் காரணம். பழுதைக்கயிறு இல்லையேல் எங்ஙனம் பாம்பு என எண்ணம் உண்டாகும். அதுபோல் மூலகாரண மூல ப்ரகிருதிக்கும் காரணமாய் பரமாத்மா இருப்பது பற்றி காரண காரணம் என்று கூறப்படுகிறது.) இவ்விதம் எல்லாவற்றிற்கும் காரணமாகவிருப்பதால், காரணம், கார்யம் உண்டாவதற்கு முன்பே இருக்கவேண்டுமாதலால் எல்லாவற்றிற்கும் முந்திய பொருள். தனக்குக்காரணமாக ஆகக்கூடிய வேறு*

பொருள் அற்று இருப்பதால் தனக்கு முந்தியிருக்கக்கூடிய பொருள் அற்றது, பக்தர்களை அனுக்ரஹிக்க ஸகுண உருவம் கொள்ளும் சமயம், நீலமேகத்தின் காந்தியைக்கொண்டவரும், யமுனாநதீ மடுவில் இருந்த காளியன் எனக்கூறப்படும் கிருஷ்ண ஸர்ப்ப அரசன் துஷ்டன் தலையில் அடிக்கடி அவன் சோர்ந்து சரணாகதி அடையும்வரை நன்கு அழகாக நர்த்தனம் செய்கிற வரும், அழிவைக்கடந்தவரும், மற்றபொருள்கள் போல் அழியாத வரும், ப்ரளய காலத்தில் எல்லாவற்றையும் நன்கு அழித்து விடுபவரும், கால ஸ்வரூபியாகவும், மற்ற பொருள்களை காலத்தினால் அளந்து சொல்வதற்கு ஏற்பட்ட அகண்ட காலத்தின் அம்சமான க்ஷணம், நாள், மாதம், வருஷம் யுகம் போன்ற காலபேதங்களைக் கடந்தவரும் காலத்தினால் பரிச்சேதம் செய்ய முடியாதவரும், தன்னைத் தவிர எல்லாப்பொருள்களையும் ஸ்ருஷ்டித்தவராயும், எல்லாவற்றையும் அறிகிறவராயும், கலிபுருஷனால் மக்களுக்கு ஏற்படும் பாபங்களைப் போக்குகிற வரும், பூதம், பவிஷ்யத், வர்த்தமானமென்று முப்பிரிவுள்ள காலச்சக்கரம் சுற்றுவதற்கு காரணமாயும், அசேதனமான காலச்சக்ரத்தை சுழலச்செய்ய ஓர் சேதனன் தேவை. அச்சேதனன் பரமாத்மாவே. குயவன் சக்ரத்தை சுழலவைத்து அதன் பல சுழல்களால் மண்ணில் பல பொருள்களைச் செய்வது போல பகவான் தன்னால் முதலில் சிருஷ்டிக்கப்பட்ட காலசக்ரத்தை சுழலவைத்து அதன் பல சுழல்களுக்குத் தக்கவாறு முக்குண ப்ரகிருதியினால் பல நாம ரூபப் பொருள்களை சிருஷ்டிக்கிறார் என்பது கருத்து. இவ்விதமான பரமானந்த ஸ்ரீ கோவிந்தனை நமஸ்கரியுங்கள். (7)

वृन्दावनभुवि वृन्दारकगणवृन्दाराधितवन्द्याङ्घ्रिं
कुन्दाभामलमन्दस्मेरसुधानन्दं सुमहानन्दम् ।
वन्द्याशेषमहामुनिमानसवन्द्यानन्दपदद्वन्द्वं
नन्द्याशेषगुणाब्धिं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ८ ॥

ப்ருந்தாவனபுவி ப்ருந்தாரககண ப்ருந்தாராதித
வந்த்யாங்க்ரிம்
குந்தாபாமல மந்தஸ்மேர ஸுதானந்தம் ஸுமஹானந்தம் ।

வந்த்யாஶேஷ மஹாமுநிமாநஸ வந்த்யாநந்த பதத்வந்த்வம்
நந்த்யாஶேஷ குணாப்திம் ப்ரணமத கோவிந்தம்
பரமாநந்தம் ॥

**वृन्दावनभुवि**-பிருந்தாவன ப்ரதேசத்தில், **वृन्दारकगण**-தேவர்களின் கூட்டத்தாலும், **वृन्दाराधित**-பிருந்தையாலும் பூஜிக்கப்பட்ட, **वन्द्याङ्घ्रि**-வணங்கத்தக்க பாதங்களை உடையவரும், **कुन्दाभामल**-குந்த புஷ்பம்போல் ஒளியுள்ளதும் நிர்மலமானதுமான, **मन्दस्मेर**-புன்சிரிப்பாகிற, **सुधानन्दं**-அமிருதத்தால் ஸந்தோஷப்படுத்துகிறவரும், **सुमहानन्दं**-சிறந்த பேராநந்தஸ்வரூபியும், **वन्द्याशेषमहामुनि**-வணங்கத் தக்க எல்லா முனிவர்களின், **मानसवन्द्यानन्द**-மனதில் போற்றத்தக்கதும் ஆனந்தமளிப்பதுமான, **पदद्वन्द्वं**-இரு திருவடிகளை உடையவரும், **नन्द्याशेषगुणाब्धि**-போற்றத்தக்க எல்லா நற்குணங்களுக்கும் ஸமுத்திரமாக இருப்பிடமாக விளங்குபவரும், **परमानन्दं**-பேராநந்தஸ்வரூபியுமான **गोविन्दं**-கோவிந்தரை, **प्रणमत**-வணங்குங்கள்.

பிருந்தாவனம் என்னும் பூங்காவன ப்ரதேசத்தில் தேவக் கூட்டங்களினாலும் பிருந்தையென்னும் தன்னிடம் பக்திகொண்ட மங்கையாலும் பூஜிக்கப்பட்ட போற்றத்தக்க பாதங்களையுடைய வரும் குந்த புஷ்பத்தின் ப்ரகாசமுடையதும் நிர்மலமானதுமான புன்சிரிப்பு ரூபமான அமிருததாரையினால் தன்னைக்காணும் பக்தர்களை ஆனந்தமடையச் செய்கிறவரும் சிறந்த அகண்ட பேரானந்த ஸ்வருபமானவரும் சிறந்த உத்ஸவங்களில், தன்னை ஆராதிக்கச் செய்யப்படுபவைகளில் இன்பமடைகிறவரும், அவ் வுத்ஸவத்தில் ஈடுபடுவோரைக் களிக்கச் செய்கிறவரும் எனவும் பொருள்கொள்ளலாம். நமஸ்கரிக்கத்தக்க எல்லா உத்தம முனிவர்களினாலும் தங்களது மனதுகளில் ஆராதிக்கத்தக்கதும், ஆனந்தமளிப்பதுமான இரு திருவடிகளை உடையவரும் பாஹ்ய பூஜையைக் காட்டிலும் மானஸ பூஜை சிறந்ததுபற்றி முனிவர் கள் மானஸ பூஜை செய்யுங்கால் பகவானின் திருவடியை வழிபட்டுப் பேரானந்தமடைகிறார்கள் என்று கருத்து. எல்லோ ராலும் சிலாகிக்கத்தக்க எல்லா நற்குணங்களுக்கு இருப்பிடமாக விளங்குகிறவருமான பரமானந்த கோவிந்தனை வணங்குங்கள். (8)

गोविन्दाष्टकमेतदधीते गोविन्दार्पितचेता यो
गोविन्दाच्युत माधव विष्णो गोकुलनायक कृष्णेति ।
गोविन्दाङ्घ्रिसरोजध्यानसुधाजलधौतसमस्ताघो
गोविन्दं परमानन्दामृतमन्तस्स्थं स तमभ्येति ॥ ९ ॥

கோவிந்தாஷ்டகமேததீதே கோவிந்தார்பித சேதா யோ
கோவிந்தாச்யுத மாதவ விஷ்ணோ கோகுலநாயக
க்ருஷ்ணேதி ।
கோவிந்தாங்க்ரி ஸரோஜத்யாந ஸுதா ஜலதௌத
ஸமஸ்தாகோ
கோவிந்தம் பரமாநந்தாம்ருதமந்தஸ்த்தம் ஸ தமப்யேதி ॥

यः–எவன், गोविन्दार्पितचेताः–கோவிந்தனிடம் மனதைச் செலுத்தி, गोविन्द–கோவிந்தா! अच्युत–அச்யுதா! माधव–மாதவா! विष्णो–விஷ்ணோ! गोकुलनायक–கோகுலத்திற்குத் தலைவனே! कृष्ण–கிருஷ்ணா! इति–என்று (சொல்லிக் கொண்டு), एतत्–இந்த, गोविन्दाष्टकं–கோவிந்தாஷ்டகம் என்னும் ஸ்தோத்ரத்தை, अधीते–அர்த்த ஞானத்துடன் அடிக்கடி படிக்கிறானோ, सः–அவன், गोविन्दांघ्रिसरोजध्यान–கோவிந்தனின் தாமரைபோன்ற திருவடிகளை தியானம் செய்வதாகிற, सुधाजल–அமிருத தீர்த்தத்தால், धौतसमस्ताघः–எல்லாப் பாபங்களும் போக்கடிக்கப்பட்டவனாக, अन्तस्स्थं–உள்ளே ஆத்மஸ்வரூபமாக இருக்கும், परमानन्दामृतं–பேரானந்த மோக்ஷஸ்வரூபனை, तं–அந்த, गोविन्दं–கோவிந்தனை, अभ्येति–அடைகிறான்.

எந்த பக்தன், ஹே கோவிந்த! (பசுக்களை அடைந்தவன், வேதத்தை, வேதப் பொருளை உணர்ந்தவன், அசுரர்களால் அபகரிக்கப்பட்ட பூமியை மீட்டினவன், கோரூபமான தர்ம தேவதையை ரக்ஷித்தவன், பசுரூபமான ஜீவாத்மாக்களைத் தன்னிடம் ஸுஷுப்தி காலத்தில் லயமடைய அழைத்தவன், மோக்ஷ சுகமென்னும் பேரானந்தத்தை என்றும் உடையவன் என்று गो என்னும் சொல்லின் பல பொருள்களுக்கு ஏற்றவாறு

பல் வ்யாக்யானம் செய்யலாம்.) ஹே அச்யுத (ப்ருகிருதி குணங்களுக்கு வசமாகாமல் என்றும் ஒரே மாருத நிலைமையை உடையவன், பக்தர்கள் மனதினின்று என்றும் விலகாதவன் உலகமனைத்தும் ப்ரளய காலத்தில் அழிவுறும் சமயத்திலும் அதைக்கண்டு மனக்கலக்கம் பயம் கொள்ளாதவன். பொய் எனத் தெரிந்த வஸ்து மறைவதினல் ஹர்ஷவிஷாதங்கள் ஏற்படுவதில்லை. अचि 'அச்' என்னும் உயிர் எழுத்துக்களாகிற ஜீவன்களிடம் युतः பேதமற்றுப் பிணைந்தவனுக இருப்பவன்.) லக்ஷ்மீ தேவியின் ப்ராண நாயகனே (மாதவமென்னும் வஸந்தருதுவிற்கு அதிஷ்டான ப்ரியதேவதையாக விளங்குபவன். அந்த ருதுவில் செய்யப்படும் யாகம் முதலிய கர்மாவிற்கு பல ப்ரதாதாவாக இறைவனுக இருப்பவன். மா என்னும் மாயைக்கும் யஜமானனுக இருந்து அதற்கு வச்யமாகாமல் அதை அடக்கி வருகிறவன். मा என்னும் அஷ்டைச்வர்யங்களும் கொண்டு உபாசிப்பவர்களுக்கு அதை அளிப்பவன். मा அழகு. அழகுகள் எல்லாம் கூடியிருக்குமிடத்திற்கு அதிபதி மிக்க அழகுடையவன்.) ஹே விஷ்ணே! (எங்கும் வ்யாபித்து இருப்பதால் நிறைந்த பூர்ண ஸ்வரூபன். எங்கும் எல்லோராலும் துதிக்கப் படுபவன் ஸம்ஸார துக்கரூப விஷத்தை அகற்றுகிறவன்) கோகுலம் என்னும் நகரத்தின் தலைவ! பசுக் கூட்டங்களின் இறைவா! ஜீவக்கூட்டங்களின் இறைவா! அந்த ஜீவக்கூட்டங்களுக்கு கர்ம பல சுக துக்கங்களையோ, முக்தர்களுக்கு மோக்ஷ பலத்தையோ அடையும்படி செய்பவனே, ஸரஸ்வதியின் அருள் பெற்ற வித்வத்குலத்திற்குத்தலைவ! எல்லாம் அறிந்த ஸர்வக்ஞ! ஹே கிருஷ்ண பாபிகளை இழுத்து அழிப்பவனே காலசக்ரத்தையோ, மூல ப்ரகிருதியையோ இழுத்து சுழலச் செய்து உலக வ்யவஹாரம் நடக்கும்படி செய்பவனே. ஜீவர்களுக்கு கர்மபல சுக துக்கங்களை வலிய வரவழைத்து அனுபவிக்கச் செய்கிறவனே. பக்தர்களை தன்னிடம் பக்தி கொள்ளும்படி இழுப்பவனே துஷ்டமாடுகளை இழுத்து நேர்வழியில் திருப்புவதுபோல் துஷ்டர்களை இழுத்து நேர்வழியில் திருப்பி விடுகிறவனே. அழகிய கருநிற முடையவனே என்று கோவிந்தனிடம் அர்ப்பணம் செய்யப்பட்ட மனதை உடையவனு யிருந்து கொண்டு, இந்த கோவிந்தாஷ்டகம் என்னும் ஸ்துதி கிரந்தத்தை பாராயணம் செய்கிருனே அர்த்தத்தை அறிகிருனே, அந்த பக்தன் ஸ்ரீ கோவிந்தனது திருவடி கமலத் தியானமாகிற அமிருத

ரூப ஜலத்தினுல் (அவனை த்யானம் செய்வதே அமிருதம்போன்ற ஆனந்தவெள்ளத்தை யுண்டுபண்ணுமாதலால் தியானமே அமிருதஜல ப்ரவாஹம்) நன்கு அலம்பப்பட்ட (கழுவி அகற்றப் பட்ட) எல்லா பாபங்களையும் உடையவனுகை ஆகி (அவனுடைய ஸகல பாபங்களும் பகவானின் திருவடிமலர் தியானத்தினுல் போகின்றன எனக்கருத்து) தனது உள்ளேயே அந்தராத்மா வாக இருப்பவனும், முடிவில் உலகரூப கார்ய வர்க்கங்களைத் தன்னுள் மறையச் செய்வதால் மாயை அந்தமெனப்படுகிறது அதை தனது இருப்பிடமாகக்கொண்டு அதை ப்ரவிருத்திக்கச் செய்கிறவருமான கோவிந்தனென்று திருநாமம்கொண்டு போற்றப்படும் உத்தம ஆனந்தமாக விளங்கும் மோக்ஷத்தை இரண்டற அதனுடன் கலப்பதை அடைகிறுன். இரண்டறக் கலந்து பேரின்பமடைகிறுன். (9)

கோவிந்தாஷ்டகம் முற்றிற்று.



|| श्रीः ||

# || पाण्डुरङ्गाष्टकम् ||

## பாண்டுரங்காஷ்டகம்

[பண்டரீபுரம் என்னும் புண்ய க்ஷேத்திரத்தில் புண்டரீகன் என்னும் பக்தனுக்கு அருள் செய்வதற்காக ஆவிர்பவித்த மூர்த்தி பாண்டுரங்கர். இருகால்களையும் சேர்த்து செங்கல்லில் வைத்துக்கொண்டும் இடுப்பில் கையை வைத்துக் கொண்டும் நிற்கும் அவஸரத்திலுள்ள பாண்டுரங்க மூர்த்தியை இந்த ஸ்தோத்ரத்தால் பகவத்பாதாள் துதிக்கிறார், பலச்ருதியுடன் 9 சுலோகங்கள் கொண்ட இந்த ஸ்தோத்ரத்தை ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாள் தமது விஜய யாத்திரையில் இந்த க்ஷேத்திரம் வந்து மூர்த்தியை தர்சித்த ஸமயம் இயற்றியிருக்கலாமென்று தோன்றுகிறது. பாண்டுரங்க மூர்த்தியின் உண்மை தத்வம் பரப்ரஹ்மம்தான் என்பதை ஒவ்வொரு சுலோகத்திலும் காட்டுகிறார்.]

महायोगपीठे तटे भीमरथ्या
वरं पुण्डरीकाय दातुं मुनीन्द्रैः ।
समागत्य तिष्ठन्तमानन्दकन्दं
परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ १ ॥

மஹாயோகபீடே தடே பீமரத்யா
வரம் புண்டரீகாய தாதும் முனீந்த்ரை : I
ஸமாகத்ய திஷ்டந்தமாநந்த கந்தம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் II

**मुनीन्द्रैः**-முனிபுங்கவர்களுடன் கூட, **पुण्डरीकाय**-புண்டரீகன் என்னும் பக்தனின்பொருட்டு, **वरं**-அவன் விரும்பும் வரத்தை, **दातुं**-கொடுப்பதற்கு, **भीमरथ्याः**-பீமரதி என்னும் நதியினுடைய, **तटे**-கரையில், **समागत्य**-வந்து, **महायोगपीठे**-சிறந்த உயரமான யோகபீடத்தில், **तिष्ठन्तं**-அமர்ந்து நிற்

பவரும், **आनन्दकन्दं**—ஆனந்தக் கிழங்காகவும், **परब्रह्मलिङ्गं**—சுத்த பரப்ரம்மஸ்வரூபத்தை அறிய ஸாதனமான அர்ச்சா உருவமாயுமுள்ள, **पाण्डुरङ्गं**-பாண்டுரங்கனை, **भजे**—ஸேவிக்கிறேன்.

பண்டரீபுர க்ஷேத்திர ஸ்தல புராணத்தின்படி பகவான், தன்னருள் பெறப் பலகாலம் இதர முனிவர்களுடன் தவம்செய்து கொண்டிருந்த புண்டரீகன் என்னும் உத்தம பக்தனை அனுக்ரஹிக்க வைகுண்டத்திலிருந்து பீமரதீ என்னும் நதியின் கரையை அடைந்து உத்தமமான யோகபீடத்தில் நின்று காட்சி அளிப்பவரும், உலகமனுபவிக்கும் ஆனந்தமெல்லாவற்றிற்கும் காரண ஆனந்தக்கட்டி ரூபமாதலால் (**तस्यैवानन्दस्य मात्रामन्यानि भूतानि**) ஆனந்தக்கிழங்கு என வர்ணிக்கப்படுகிறவரும் நிர்குண சுத்த பிரம்ம ஸ்வரூபத்தை எளிதில் தியானம் செய்ய முடியாத மத்யம அதிகாரிகளை அனுக்ரஹிக்க அதற்கு ஸாதகமான ஸகுண வடிவம் கொண்டிருப்பவருமான ஸ்ரீ பாண்டுரங்கனை ஸேவிக்கிறேன். (1)

**तटिद्वाससं नीलमेघावभासं**
**रमामन्दिरं सुन्दरं चित्प्रकाशम् ।**
**वरं त्विष्टकायां समन्यस्तपादं**
**परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ २ ॥**

தடித்வாஸஸம் நீலமேகாவபாஸம்
ரமாமந்திரம் ஸுந்தரம் சித்ப்ரகாஶம் I
வரம் த்விஷ்டகாயாம் ஸமந்யஸ்த பாதம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் II

**तटिद्वाससं**—மின்னல்போல் ஒளியுள்ள மஞ்சள்நிறப் பட்டாடையுடுத்தியவரும், **नीलमेघावभासं**—கருமேகத்தின் ஒளியுடையவரும், **रमामन्दिरं**—லக்ஷ்மீதேவியின் வாஸஸ்தானமாக விளங்குபவரும் (அவரது மார்பில் லக்ஷ்மீ நித்யவாஸம் செய்வதால்), **सुन्दरं**—அழகியவடிவமுடையவரும், **चित्प्रकाशं**—சுத்தஞான ரூபியாக ப்ரகாசிப்பவரும், **वरं**—சிரேஷ்டமானவரும், அனைவராலும் வரிக்கத்தக்கவரும், **इष्टकायां**—பீடரூப

மான செங்கல்லில், **समन्यस्तपादं**-இணைத்து வைத்துக்கொண்டுள்ள இரு திருவடிகளையுடையவரும், **परब्रह्मलिङ्गं** -பரப்ரம்ம லிங்கமாக இருப்பவருமான, **पाण्डुरङ्गं**-பாண்டுரங்கனை, **भजे**-ஸேவிக்கிறேன்.

—: பகவான் பீதாம்பரதாரியானதால் மின்னல்போல் ஒளிக்கும் மஞ்சள் பட்டாடை உடுத்தினவரும், நீருண்ட கருநிறமேகம்போல் விளங்குகிறவரும், ஸ்ரீ லக்ஷ்மீ தேவி அவரது மார்பில் நித்யவாஸம் செய்வதுபற்றி லக்ஷ்மீ தேவியின் வாஸஸ்தானமாக விளங்கும் திவ்ய தேஹங்கொண்டவரும் எல்லா அழகுகளும் சேர்ந்து இருக்குமிடமாக மிக்க அழகுடன் விளங்குபவரும் சூர்யன் சந்திரன், அக்னி, நக்ஷத்ரம் முதலிய ஒளிக்கும் பொருள்களும் ஜடமானதால், தானே ஒளிக்க சக்தியற்றவைகள். அவைகளும் எந்தப் பொருளின் அருள் பெற்று ப்ரகாசிக்கின்றனவோ அப்பொருள் மெய்ப்பொருளான ஞானப்பொருளே. அவ்வுயர்ந்த ஞானப்பொருளான பரமாத்ம ஸ்வரூபமாக இருந்து எல்லாவற்றையும் தானே ப்ரகாசப்படுத்திக் கொண்டிருப்பவரும், பண்டரீபுர க்ஷேத்ரத்தில் செங்கல்லினால் அமைக்கப்பட்ட மஹா பீடத்தில் சேர்த்து இணைத்து பாதங்களை வைத்துக்கொண்டு நின்று காக்ஷி அளிப்பவருமான பரபிரம்மரூபமான அப்பாண்டுரங்கனை ஸேவிக்கிறேன். (2)

**प्रमाणं भवाब्धेरिदं मामकानां**
**नितम्बः कराभ्यां धृतो येन तस्मात् ।**
**विधातुर्वसत्यै धृतो नाभिकोशः**
**परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ३ ॥**

ப்ரமாணம் பவாப்தேரிதம் மாமகாநாம்
நிதம்ப: கராப்யாம் த்ருதோ யேந தஸ்மாத் ।
விதாதுர் வஸத்யை த்ருதோ நாபிகோஶ:
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

**मामकानां**-என்னைச்சார்ந்த பக்தர்களுக்கு, **भवाब्धेः प्रमाणं**-இச்சம்ஸார ஸமுத்திரத்தின் ஆழ அளவு, **इदं** - இதுதான் இடுப்பளவுதான். **तस्मात्** -ஆகையினுல்தான் (என்றுகாட்ட)

**येन**–எவரால், **कराभ्यां**-தமது இருகைகளினுல், **नितम्बः**-தனது இடுப்பு, **धृतः**–தொடப்படுவதாக அர்ச்சாவிக்ரஹம் விளங்கு கிறதோ. **येन**–எவரால், **विधातुः**–உலகமனைத்தையும் படைக் கும் பிரம்மதேவனுடைய, **वसत्यै**–வாஸத்தின் பொருட்டு வாஸஸ்தலத்தை சுட்டி காட்டுவதன் பொருட்டு, **नाभिकोशः**– தொப்புள் கமலமும், **धृतः**–சுட்டிக்காட்டப்படுகிறதோ (தொப்புள் குழிதெரியும்படி அதற்குக் கீழாகவே ஆடை உடுத்தியிருப்பதால்) அவ்விதமான, **परब्रह्मलिङ्गं**–பரப்பிரம்ம ஸ்வரூபியான, **पाण्डुरङ्गं**–பாண்டுரங்கனை, **भजे**–ஸேவிக் கிறேன்.

அங்கு விளங்கும் அர்ச்சாவிக்ரஹம் கொண்ட பாண்டுரங்கன் தனது இரு கைகளையும் தனது நிதம்பமென்னும் இடுப்பின்கீழ் வைத்துக்கொண்டு நிற்பதற்கும், தொப்புளுக்குக்கீழே ஆடை யணிந்திருப்பதற்கும் காரணம் கூறுகிருர் பகவான். தனது பக்தர்கள் விஷயத்தில், இச்சம்ஸாரஸாகரம் இடுப்பளவு ஆழமுடையதுதான் அதிக ஆழமில்லை. ஆதலால் எனது பக்தர்கள் இச்சம்ஸாரஸாகரம் பற்றி பயங்கொள்ளவேண்டாம் என அறிவிக்கிருர் மேலும் இவ்வுலகம் அனைத்தையும் படைக்கும் நான்முக பிரம்மதேவனும் பகவானது நாபி கமலத்தின் கண் பிறந்து அங்கேயே வாசம் செய்கிருன் என்ருல் பாண்டுரங்கனின் தேகம் உலகமனைத்தையும் அதைப்படைத்த பிரம்மனையும் தனது ஒரு சிறு பாகத்திலேயே அடக்கிவைத்துக்கொண்டிருப் பதும் பூர்ண தேகம் மிக்க வியாபகமானதென்றும் தெரிகிறது. அவ்விதப் பெருமைவாய்ந்த பரபிரம்மரூபமான பாண்டுரங்கனை ஸேவிக்கிறேன். (3)

**स्फुरत्कौस्तुभालंकृतं कण्ठदेशे**
**श्रिया जुष्टकेयूरकं श्रीनिवासम् ।**
**शिवं शान्तमीड्यं वरं लोकपालं**
**परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ४ ॥**

ஸ்புரத் கௌஸ்துபாலங்க்ருதம் கண்டதேஶே
ச்ரியா ஜுஷ்ட கேயூரகம் ச்ரீநிவாஸம் ।

ஶிவம் ஶாந்தமீட்யம் வரம் லோகபாலம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

कण्ठदेशे–கழுத்தில், श्रिया–அழகுடன், स्फुरत्–ஒளிக்கும் कौस्तुभालंकृत–கௌஸ்துப ரத்னத்துடன்கூடிய ஹாரத்தால் அலங்கரிக்கப்பட்டவரும், जुष्टकेयूरकं–தோள்வளைகளை அணிந்தவரும், श्रीनिवासं–(மார்பில் லக்ஷ்மி வஸிப்பதால்) லக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாக இருப்பவரும், शिवं–மங்களரூபியும், மங்களங்களைத்தருபவரும், शान्तं–(ராகம் த்வேஷம் காமம் முதலிய சித்தவிகாரமேதுமின்றி இருப்பதால்) சாந்தமான நிலைமை கொண்டவரும், ईड्यं–எல்லோராலும் துதிக்கத்தக்கவரும், वरं–வரமளிப்பவரும், சிறந்தவரும், लोकपालं–உலகமனைத்தையும் ரக்ஷிப்பவரும், परब्रह्मलिङ्गं–பரப்ரஹ்ம ஸ்வரூபியுமான, पाण्डुरङ्गं – பாண்டுரங்கனை, भजे–ஸேவிக்கிறேன்.

மார்பில் பூஷணமாக அணியப்பட்டிருக்கும் கௌஸ்துப மணியின் மேல் நோக்கிப் பரவும் ஒளிகளினால் அழகுறும் கண்ட தேசத்தையுடையவரும் (காதுகளில் அணியப்படும் குண்டலம் முதலிய கர்ணாபரணங்களினால் கன்னப்ரதேசம் அலங்கரிக்கப் படுவதுபோல மார்பிலுள்ள கௌஸ்துபம் கழுத்தை அழகுறச் செய்கிறது.) மிக்க அழகாக தரித்துக்கொள்ளப்பட்ட தோள் வளைகளையுடையவரும், லக்ஷ்மீ தேவி சஞ்சல ஸ்வபாவமுடையவளானபோதிலும் விஷ்ணுவிடம் சஞ்சல ஸ்வபாவத்தைவிட்டுக் காதலுற்று விட்டுப் பிரியாமல் நித்ய வாஸம் செய்யும்படியாக வசீகரிக்கும் உயர்ந்த அழகு குணங்களின் மேன்மை உடையவரும் ராகம், த்வேஷம், காமம், க்ரோதம் முதலிய எந்ததோஷமுமின்றி சுத்தமாகவிருப்பதால் பரம சாந்த ஸ்வரூபியாக விளங்குகிறவரும், முக்குண மூலபிரகிருதி ஸம்பந்தமற்றிருப்பதால் शान्तं शिवं अद्वैतं चतुर्थं मन्यन्ते என்று மாண்டூக்ய உபநிஷத்தில் கூறப்பட்டபடி துரீய ஸ்வரூபமாக உள்ளவரும், ஜீவராசிகள் எல்லாவற்றாலும் துதிக்கத்தக்கவரும், அவ்விதம் உயிர்களால் சரணமடையத் தகுந்தவரும், தன்னால் படைக்கப்பட்ட உலகமனைத்தையும் காப்பாற்றுபவருமான பாண்டுரங்க பரபிரம்மத்தை ஸேவிக்கிறேன். (4)

शरच्चन्द्रबिम्बाननं चारुहासं
लसत्कुण्डलाक्रान्तगण्डस्थलान्तम् ।
जपारागबिम्बाधरं कञ्जनेत्रं
परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ५ ॥

ஶரச்சந்த்ர பிம்பாநநம் சாருஹாஸம்
லஸத்குண்டலாக்ராந்த கண்டஸ்தலாந்தம் ।
ஜபாராகபிம்பாதரம் கஞ்ஜநேத்ரம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

**शरच्चन्द्रबिम्बाननं** – சரத்காலத்தில் மேகாவரணமின்றி ப்ரகாசிக்கும் சந்திரமண்டலம்போன்ற முகத்தையுடையவரும், **चारुहासं**–அழகான புன்சிரிப்பு உடையவரும், **लसत्कुण्डलाक्रान्तगण्डस्थलान्तं** –ப்ரகாசிக்கும் குண்டலங்கள் என்னும் காது அணிகளின் ஒளிகளினால் சூழப்பட்டு விளங்கும் இருகன்னப்ரதேச ஓரங்களையுடையவரும், **जपारागबिम्बाधरं**–செம்பரத்தைப் புஷ்பத்தின் சிவப்புநிறங்கொண்ட கோவைப்பழம்போன்ற உதடுகளையுடையவரும், **कञ्जनेत्रं**–தாமரைமலர்போன்ற கண்களையுடையவரும், **परब्रह्मलिङ्गं**-பரப்ரஹ்ம ரூபியுமான, **पाण्डुरङ्गं**-பாண்டுரங்கவிட்டலரை, **भजे**–ஸேவிக்கிறேன்.

வருஷருதுவிற்கு அடுத்துவரும் சரத்ருதுவில் மேகங்களின் ஆவரணம் விலகிவிடுவதால் சரத்ருது பௌர்ணமி சந்திர மண்டலம் மிக்க அழகுடையது. அதுபோல் விளங்குகிறது பாண்டுரங்கனின் திருமுகம். தன்னை சரணமடையும் உயிர்களுக்கு பயத்தை நீக்கி அருள்புரிய சித்தமாய் இருப்பதைத் தெரிவிக்க தனது மனதில் நிறைந்துள்ள அன்பு வெள்ளத்தை வெளிக்காட்ட அழகிய மந்தஹாஸம் என்னும் புன்சிரிப்புக்கொண்டவரும், முன் கூறியபடி காதுகளில் அணியப்பட்ட இரு குண்டலங்களால் அழகுறச் செய்யப்பட்டு விளங்கும் கன்னப்ரதேச ஓரங்களையுடையவரும், சம்பரத்தைப்பூ கோவைப்பழம் இவைபோல சிவந்த மிருதுவான வடிவம் கொண்ட உதடுகளையுடையவரும் செந்தாமரை மலர் போன்ற கண்களையுடையவருமான பாண்டு ரங்க பரபிரம்மத்தை ஸேவிக்கிறேன். (5)

किरीटोज्ज्वलत्सर्वदिक्प्रान्तभागं
सुरैरर्चितं दिव्यरत्नैरनर्घैः ।
त्रिभङ्गाकृतिं बर्हमाल्यावतंसं
परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ६ ॥

கிரீடோஜ்வலத் ஸர்வ திக்ப்ராந்தபாகம்
ஸுரைரர்சிதம் திவ்யரத்னைரனர்கை: ।
த்ரிபங்காக்ருதிம் பர்ஹமால்யாவதம்ஸம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

**किरीटोज्ज्वलत्सर्वदिक्प्रान्तभागं**–எல்லா திக்குகளின் எல்லைகளையும் ப்ரகாசிக்கச்செய்யும் கிரீடமணிந்தவரும், **सुरैः**-தேவர்களினால், **अनर्घैः**–விலைமதிக்க முடியாத, **दिव्यरत्नैः**–சிறந்த ரத்னங்களினால், **अर्चितं**-பூஜிக்கப்படுகிறவரும், **त्रिभङ्गाकृतिं**–முழங்கால், இடுப்பு, கழுத்து, என மூன்று இடங்களில் கொஞ்சம் சாய்ந்து வளைந்த உருவமுடையவரும், **बर्हमाल्यावतंसं**–மயில்தோகை இறக்கைகளினால் செய்யப்பட்ட மாலையை சிரோபூஷணமாக அணிந்துகொண்டிருப்பவரும் **परब्रह्मलिङ्गं**–பரப்ரஹ்மஸ்வரூபியுமான, **पाण्डुरङ्गं**–பண்டரிநாதரை, **भजे**–ஸேவிக்கிறேன்.

எல்லாப்பக்கத்திலும் உயர்ந்த ரத்னங்கள் பதித்த கிரீடமணிந்திருப்பதால் அக்கிரீட ரத்னங்களின் கிரணங்களினால் நான்கு திக்குகளும் அதன் கோடிவரை ப்ரகாசிக்கின்றன. பகவானின் அருளால் மேன்மை பெற்ற தேவர்கள் மேலும் அவ்விதம் மேன்மை அடையவெண்ணி தங்களது சொத்தாக விளங்கும் உயர்ந்த பல ரத்னங்களால் பகவானை பூஜிக்கின்றனர். பகவான் பாண்டுரங்கன் பக்தர்களை அனுக்ரஹிக்க ஒய்யாரமாக நின்று காக்ஷியளிப்பதால் அச்சமயம் அவரது தேகம், முழங்கால் அல்லது பாதம், இடுப்பு, கழுத்து என்ற மூன்று இடங்களில் கொஞ்சம் சாய்ந்த வளைவு கொண்டுள்ளது தலையில் மயில் தோகை சிறகினால் செய்யப்பட்ட மாலையை அழகாக அணிந்துள்ளார். இவ்விதம் விளங்கும் பாண்டுரங்க பிரம்மத்தை ஸேவிக்கிறேன். (6)

विभुं वेणुनादं चरन्तं दुरन्तं
स्वयं लीलया गोपवेषं दधानम् ।
गवां बृन्दकानन्ददं चारुहासं
परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ७ ॥

விபும் வேணுநாதம் சரந்தம் துரந்தம்
ஸ்வயம் லீலயா கோபவேஷம் ததாநம் ।
கவாம் ப்ருந்தகாநந்ததம் சாருஹாஸம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

विभुं–எங்கும் வியாபகமாக விளங்குபவரும் எல்லோருக்கும் யஜமானனுக விளங்குபவரும், எதையும் செய்யவல்லமை கொண்டவரும், वेणुनादं-புல்லாங்குழல் ஊதிக்கொண்டிருப்பவரும், चरन्तं–பக்தர்களை அனுக்ரஹிக்க அவர்கள் உள்ளங்களில் சஞ்சரிப்பவரும், दुरन्तं–(முடிவு இல்லாததால்) கண்டுபிடிக்க முடியாத முடிவையுடையவரும், स्वयं लीलया–தானுகவே கர்மாவிற்கு அதீனமாகாமல் விளையாட்டாகவே அனுயாஸமாகவே தனது இச்சையினுலேயே, गोपवेषं–இடையனுருவத்தை, दधानं–தரித்திருப்பவரும், गवां–பசுக்களுடைய, बृन्दकानन्ददं-கூட்டங்களுக்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறவரும், चारुहासं-அழகிய புன்சிரிப்புடையவரும் परब्रह्मलिङ्गं–பரப்ரஹ்மரூபியுமான, पाण्डुरङ्गं–பாண்டுரங்கனை, भजे–ஸேவிக்கிறேன்.

உண்மையில் பகவான் பரபிரம்மரூபமாதலால் எங்கும் வ்யாபித்தவர், எதையும் செய்யத்தக்க ஆற்றல் படைத்தவர், எல்லா உலகங்களையும் அடக்கி ஆட்சி செய்யும் திறமையுங் கொண்டவர் என 'விபு' என்னும் பதத்தால் கூறப்படுகிறது. ஜீவராசிகள் அனைத்தையும் இன்பத்தில் மெய்மறந்து லயிக்கச் செய்யும் கானரஸத்தில் ஈடுபட்டு பகவான் புல்லாங்குழல் ஊதி, களிக்கச்செய்தும் களித்துக் கொண்டுமிருக்கிருர். பக்தர்களை அனுக்ரஹிக்க வேண்டி அவர்கள் விரும்பும் எவ்விடத்திலும் உருவம் எடுத்துக்கொண்டு சஞ்சரிக்கிருர். மாடுகளையும் மேய்க்

கிறார். அவர் முடிவு கண்டுபிடிக்க முடியாதது. உண்மையில் இல்லாதது. முடிவே அற்றவர். நித்யப் பொருளாக விளங்குவதால் முடிவு ஏது? ஜீவராசிகள் பூர்வஜன்ம கர்மாக்களின் அதீனமாகப் பலன்களை அனுபவிக்க எடுக்கும் சரீரம் போன்றது அல்ல பகவான் எடுக்கும் சரீரம். ஜீவர்களை அனுக்ரஹிக்கத் தனது இச்சையினலேயே தான் விரும்பும் எந்த சரீரத்தையும் எடுக்க சக்தி வாய்ந்திருப்பதால், ஒரு சமயம் அவ்விச்சையினல் கிருஷ்ணவதாரத்தில் இடைய வேஷசரீரம் கொண்டுள்ளார். அந்த கோபால வேஷத்திற்குத் தகுந்தபடி பசுக்களை அன்புடன் மேய்த்து பராமரித்து வேணுகானரசம் பருகச் செய்து இன்புறச்செய்தார். அவ்விதமான பாண்டுரங்கத்திருநாம திரு உருவங்கொண்ட பர பிரம்மத்தை ஸேவிக்கிறேன். (7)

अजं रुक्मिणीप्राणसंजीवनं तं
परं धाम कैवल्यमेकं तुरीयम् ।
प्रसन्नं प्रपन्नार्तिहं देवदेवं
परब्रह्मलिङ्गं भजे पाण्डुरङ्गम् ॥ ८ ॥

அஜம் ருக்மிணீ ப்ராண ஸஞ்ஜீவநம் தம்
பரம் தாம கைவல்யமேகம் துரீயம் ।
ப்ரஸந்நம் ப்ரபந்நார்த்திஹம் தேவதேவம்
பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் ॥

अजं-பிறப்பற்றவரும், रुक्मिणीप्राणसंजीवनं-கிருஷ்ணவதாரத்தில் ருக்மிணீயென்னும் பெயருடன் விளங்கும் லக்ஷ்மீ தேவியின் உயிர் மருந்தாக விளங்குபவரும், परंधाम-எல்லோராலும் அடையப்பட வேண்டிய உயர்ந்த இடமாகவும் உயர்ந்த தேஜோ வஸ்துவாகவும் இருப்பவரும், कैवल्यं-இரண்டாவது வஸ்து இன்றி தனித்த ஒரே பொருளாக உண்மையில் உள்ளதாகவும், एकं-எவ்வித பேதமும் கூற முடியாது ஒரே பொருளாக இருக்கக்கூடியதும், तुरीयं-ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளில் விளங்கும் விச்வன், தைஜஸன், ப்ராஜ்ஞன் என்ற பேதங்கள் நீங்கி நான்காவது அவஸ்தையில் சுத்தஸ்வ

ரூபனுக விளங்குபவனும், प्रसन्नं-பக்தர்களுக்கு அருள் செய்பவனும் நிர்மல மனமுடையவனும், प्रपन्नार्तिहं-சரணமடைந்தோரின் கஷ்டங்களை போக்கடிப்பவரும், देवदेवं-தேவதைகளுக்கும் அருள்புரியும் தேவதையாக விளங்குபவரும், परब्रह्मलिङ्गं-பரப்ரஹ்ம ஸ்வரூபியுமான, तं-அந்த, पाण्डुरङ्गं-பாண்டுரங்கனை, भजे-ஸேவிக்கிறேன்.

மூலப்ருகிருதி ஸம்பந்தமுள்ள மற்றப் பொருள்கள்போல பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, சிதைவு, அழிவு முதலிய விகாரங்கள் அற்றவன் "राघवत्वेऽभवत् सीता रुक्मिणी कृष्णजन्मनि विष्णोरनपायिनी सा ।" என்ற வசனப்படி கிருஷ்ணவதாரத்தில் ருக்மிணீ ரூபமாக விளங்கும் லக்ஷ்மீதேவியின் உயிர்க் காதலனுக விளங்குபவர் 'ज्योतिषां ज्योतिः न तत्र सूर्यो भाति' இது போன்ற வசனங்களால் எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச் செய்துகொண்டிருக்கும் ப்ரகாச ஞான ரூபமானவர். எல்லோரும் அடைய வேண்டிய உயர்ந்த ஸ்தானமாக விளங்குபவர் உண்மையில் வேறு இரண்டாவது பொருள் இல்லாததால் தனித்த ஒரே பொருளாக விளங்குபவர் மாண்டுக்ய உபநிஷத்தில் கூறியவாறு ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தியென்னும் மூன்று அவஸ்தைகளுக்கப்பால் நான்காவதாக விளங்குபவர் முக்குண ஸம்பந்தமற்றிருப்பதால் எப்பொழுதும் பிரஸன்னமாக இருப்பவர் கருணை வள்ளல் ஆதலால் சரணமடைவோரின் துக்கங்களை போக்குகிறவர் இந்திராதி தேவர்களுக்கும் சக்தியளித்துப் பரிபாலிக்கும் தேவன் இவ்விதமான பரபிரம்ம பாண்டுரங்கனை ஸேவிக்கிறேன். (8)

स्तवं पाण्डुरङ्गस्य वै पुण्यदं ये
पठन्त्येकचित्तेन भक्त्या च नित्यम् ।
भवाम्भोनिधिं तेऽपि तीर्त्वाऽन्तकाले
हरेरालयं शाश्वतं प्राप्नुवन्ति ॥ ९ ॥

ஸ்தவம் பாண்டுரங்கஸ்ய வை புண்யதம் யே
படந்த்யேகசித்தேன பக்த்யா ச நித்யம் ।

பவாம்போநிதிம் தேஃபி தீர்த்வாஃந்த காலே
ஹரேராலயம் ஶாச்வதம் ப்ராப்நுவந்தி ॥

**ये**–எவர்கள், **पुण्यदं**–புண்யமளிக்கக்கூடிய, **पाण्डुरङ्गस्य स्तवं**–ஸ்ரீ பாண்டுரங்கனுடைய ஸ்துதியை, **नित्यं**–எப்பொழுதும், **भक्त्या**–பக்தியுடனும், **एकचित्तेन च**–ஏகாக்ரமனதுடனும் வேறு ஒன்றையும் நினைக்காத மனதுடனும் **पठन्ति**–படனம் செய்கிறார்களோ, பாராயணம் செய்கிறார்களோ, **ते**–அந்த பக்தர்கள், **भवाम्भोनिधिं**–ஸம்ஸார ஸாகரத்தை **तीर्त्वा**–சுலபமாகக் கடந்து, (ஜீவிக்கும் சமயத்திலும் அதன் கஷ்டமின்றி). **अन्तकालेऽपि**–முடிவு காலத்திலும் (மரண சமயம்) **शाश्वतं**–அழிவற்று என்றும் நிலைத்திருக்கும், **हरेरालयं**–விஷ்ணுவின் இருப்பிட வைகுண்டத்தை, (ஸகுண பிரும்மரூபமான விஷ்ணுவிற்கும் எந்த நிர்குண பரப்ரம்மம் ஆதாரமானதோ அந்த சுத்த பரப்ரம்மத்தை), **प्राप्नुवन्ति**–அடைகிறார்கள். (அந்த ஸ்வரூபமாக ஆகிறார்கள்).

*எந்த பக்தர்கள் எப்பொழுதும் பக்தியுடனும் ஏகாக்ர மனதுடனும், பாண்டுரங்கனின் இந்த ஸ்துதியைப் படிக்கிறார்களோ அவர்கள் ஸம்ஸார வாழ்க்கை காலத்திலும் அவனது அருளால் ஞானம்பெற்று அந்த ஞானத்தின் பயனாக அறியாமையினால் தோன்றும் ஸம்ஸாரத்தில் பற்று நீங்கி, அதனால் ஏற்படும் துன்பங்கள் இல்லாமல் வாழ்ந்து முடிவில் மரணமடையும் சமயம் அவரது அருளாலேயே அவனது வைகுண்ட உலகம் அடைந்து அப்ராக்ருத திவ்ய ஸுகத்துடன் வைகுண்டத்தில் வாழ்ந்து அவனது அருளால் ஏற்படும் ஆத்மஞானத்தின் பயனாக, விஷ்ணுவின் உண்மை ஸ்வரூபமான ஸச்சிதானந்த சுத்த பிரம்மத்தில் இரண்டறக்கலந்து பேரின்பமடைகிறார்கள். (9)*

பாண்டுரங்காஷ்டகம் முற்றிற்று.

॥ श्रीः ॥

# ॥ जगन्नाथाष्टकम् ॥

## ஜகந்நாதாஷ்டகம்

[ ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் நான்கு திசைகளில் நான்கு ஆம்நாய பீடங்களை ஸ்தாபித்ததும், அங்கு தமது நான்கு சிஷ்யர்களை பீடாதிபதிகளாக நியமித்து அவர்கள் மூலம் குரு பரம்பரையைத் தோற்றுவித்ததும் யாவரும் அறிந்ததே. அவற்றில் கிழக்கு ஸமுத்திரக்கரையிலுள்ள புரீ என்ற ஜகந்நாதக்ஷேத்திரத்தில் பூர்வாம்நாய பீடமாகிய கோவர்த்தன பீடத்தை ஸ்தாபித்தார். இங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ஜகந்நாத பகவானின் பேரில் ஆசார்யாளால் இயற்றப்பட்ட ஸ்தோத்ரம்தான் ஜகந்நாதாஷ்டகம் என்பது. இது எட்டு சுலோகங்கள் கொண்டது. இங்கு நடைபெறும் ஸர்வப்ரஸித்தமான ரதோத்ஸவத்தை 5-வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார். இந்த க்ஷேத்ரம் நீலாத்ரி என்றும் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் தம் கண்களால் பார்க்கும்படியாக தர்சனம் கொடுக்கவேண்டுமென்று பகவானை பிரார்த்திக்கிறார். ]

कदाचित्कालिन्दीतटविपिनसंगीतकवरो
　　मुदा गोपीनारीवदनकमलास्वादमधुपः ।
रमाशंभुब्रह्मामरपतिगणेशार्चितपदो
　　जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ १ ॥

கதாசித் காளிந்தீதட விபிந ஸங்கீதகவரோ
　　முதா கோபீநாரீ வதந கமலாஸ்வாத மதுப: ।
ரமா ஶம்பு ப்ரஹ்மாமரபதி கணேஶார்சிதபதோ
　　ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

कदाचित्-ஒரு சமயம், कालिन्दीतटविपिनसङ्गीतकवरः-யமுனா நதிக் கரையோரத்திலுள்ள வனத்தில் சிறந்த பாடகராக விளங்குபவரும், मुदा-ஸந்தோஷத்துடன், गोपीनारीवदन-

**कमलास्वादमधुपः**–கோபிகா ஸ்திரீகளின் முககமல மலரின் ரஸத்தைப் பருகும் வண்டாக இருப்பவரும், **रमाशम्भुब्रह्मामरपतिगणेशार्चितपदः** – லக்ஷ்மீதேவி, சிவன், பிரம்ம தேவன், தேவேந்திரன், கணபதி இவர்களினால் பூஜிக்கப் பட்ட திருவடிகளையுடையவரும், **स्वामी**–எல்லோருக்கும் யஜமானருமான, **जगन्नाथः**-ஜகன்னாதனென்னும் திருநாம முடைய பகவான், **मे**–என்னுடைய, **नयनपथगामी**–கண்கள் பார்க்கும் வழியை அடைந்தவராக (கண்களுக்குத் தெரிகிற வராக), **भवतु**–ஆகவேண்டும்.

புரீ க்ஷேத்திரத்தில் 'ஜகந்நாதன்' என்ற பெயருடன் விளங்கும் பகவான் எல்லா உலகங்களுக்கும் ஸ்வாமி, யஜமானர் என்பது அவருடைய பெயரிலிருந்தே தெரிகிறது இவர்தான் ஒரு சமயம் கிருஷ்ணவதாரமெடுத்து யமுநாநதிக்கரையிலுள்ள பிருந்தாவனத்தில் வேணுகானம் செய்தார். நதியின் பிரவாஹம், கரையில் சோலை நிறைந்தவனம் முதலான இயற்கைக் காக்ஷி களுடன் அழகுற விளங்குமிடத்தில் நடத்திய ஸங்கீதத்தால் தான் மகிழ்ந்ததுடன் எல்லா பிராணிகளையும் மெய்மறக்கச் செய்தார். இந்த வேணுகானத்தால் இழுக்கப்பட்டு அங்கு ஓடிவந்தனர் கோபியர்கள். வண்டுகள் தாமரை மலரின் மகரந் தத்தைப் பருகுவதுபோல அவர்களுடைய தாமரைபோல் அழகிய முகத்திலுள்ள அதர ரஸத்தைப்பானம் செய்தார். இவர் இடையராகத்தோன்றியபோதிலும் உண்மையில் ஜகந்நாதரான படியால் லக்ஷ்மி, சம்பு, ப்ரஹ்மா, கணேசர் முதலான எல்லா தேவர்களும் இவருடைய திருவடிகளைப் பூஜிக்கின்றனர். கோபியர்களுக்கு காக்ஷியளித்ததுபோல் எனது கண்களுக்குப் புலப்படும்படி எதிரில் வந்து தோன்றவேண்டும். (1)

**भुजे सव्ये वेणुं शिरसि शिखिपिञ्छं कटितटे**
**दुकूलं नेत्रान्ते सहचरकटाक्षं विदधते ।**
**सदा श्रीमद्वृन्दावनवसतिलीलापरिचयो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ २ ॥**

புஜே ஸவ்யே வேணும் ஶிரஸி ஶிகிபிஞ்ச்சம் கடிதடே
துகூலம் நேத்ராந்தே ஸஹசரகடாக்ஷம் விதததே ।

ஸதா ஸ்ரீமத்ப்ருந்தாவன வஸதி லீலா பரிசயோ
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

सव्ये भुजे–இடது கையில், वेणुं–புல்லாங்குழலையும், शिरसि–தலையில், शिखिपिञ्छं–மயில் தோகை சிறகையும், कटितटे–இடுப்பில், दुकूलं–பட்டாடையையும், नेत्रान्ते–கண்களின் ஓரத்தில், सहचरकटाक्षं–எப்பொழுதும் சேர்ந்து விளங்கும் கடைக்கண் பார்வையையும், विदधते–(எவர்) தரித்திருக்கிறாரோ, सदा–எப்பொழுதும், श्रीमद्वृन्दावनवसतिलीलापरिचयः–பெருமைவாய்ந்த பிருந்தாவனத்தில் வாஸம் செய்வது, க்ரீடிப்பது இவைகளில் பழக்கமுடையவரும், स्वामी–ஸர்வேச்வரனுமுள்ள, जगन्नाथः–(அந்த) ஜகன்னாதர் मे–என்னுடைய, नयनपथगामी–கண்களுக்கு விஷயமாகிறவராக भवतु–இருக்கவேண்டும்.

*இடதுகையில் புல்லாங்குழலும், சிரஸ்ஸில் மயில்தோகை அலங்காரமும் இடுப்பில் பீதாம்பரமும் தரித்து கடைக்கண் பார்வையால் கோபியர்களை அனுக்ரஹித்துக்கொண்டு எப்பொழுதும் பிருந்தாவனத்தில் வாஸம் செய்து பலவித லீலைகள் புரிந்த ஜகந்நாத ஸ்வாமி இதே வேஷத்துடன் என் கண்முன் தோன்றி என்னை அநுக்ரஹிக்கவேணும்.* (2)

महाम्भोधेस्तीरे कनकरुचिरे नीलशिखरे
वसन्प्रासादान्तः सहजबलभद्रेण बलिना ।
सुभद्रामध्यस्थः सकलसुरसेवावसरदो
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ २ ॥

மஹாம்போதேஸ்தீரே கநகருசிரே நீலஶிகரே
வஸன் ப்ராஸாதாந்த: ஸஹஜபலபத்ரேண பலிநா ।
ஸுபத்ராமத்யஸ்த்த: ஸகலஸுர ஸேவாவஸரதோ
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

महाम्भोधेः तीरे–மஹாஸமுத்திரத்தின் கரையில், नीलशिखरे–நீலாசலம் என்ற புரிக்ஷேத்திரத்தில், कनकरुचिरे–

ஸுவர்ணம்போல் ஒளியுள்ள, प्रासादान्तः—தேவாலயத்திற்குள், बलिना—பலத்துடன்கூடிய, सहजबलभद्रेण—கூடப்பிறந்தபலராமரோடுகூட, वसन्—வஸித்துக்கொண்டிருக்கிறவரும், सुभद्रामध्यस्थः—ஸுபத்ரைக்கும் பலராமருக்கும் நடுவில் இருக்கிறவரும், सकलसुरसेवावसरदः—எல்லா தேவர்களும் தம்மை ஸேவிக்க ஸமயமளிப்பவராயும், स्वामी—ஸர்வேசுவரனுமுள்ள, जगन्नाथः—ஜகந்நாதர், मे—என்னுடைய, नयनपथगामी—கண்களின் வழியை அடைகிறவருக, भवतु—ஆகவேண்டும்.

கிழக்கு ஸமுத்திரக்கரையில் உள்ள புரி க்ஷேத்திரத்திற்கு நீலாசலமென்றும் பெயருண்டு. அங்கு ஸுவர்ணத்தால் கட்டப்பட்டு ஒளியுடன் விளங்கும் தேவாலயத்திற்குள் ஜகந்நாத ஸ்வாமி கூடப்பிறந்தவர்களான பலராமன், ஸுபத்ரை இவர்களுடன் வாஸம் செய்கிறார். இங்கு மனுஷ்யர்கள் மட்டுமல்லாமல் எல்லா தேவர்களும்கூட வந்து முறையாக அந்தந்த ஸமயங்களில் ஸேவித்து அருள்பெறுகின்றனர். இவர் நான் பார்க்கும்படி என் கண்முன் தோன்றட்டும். (3)

कृपापारावारः सजलजलदश्रेणिरुचिरो
रमावाणीसोमस्फुरदमलपद्मोद्भवमुखैः ।
सुरेन्द्रैराराध्यः श्रुतिगणशिखागीतचरितो
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ४ ॥

க்ருபாபாராவார: ஸஜலஜலத ச்ரேணிருசிரோ
ரமா வாணீ ஸோம ஸ்புரதமல பத்மோத்பவ முகை: ।
ஸுரேந்த்ரை ராராத்ய: ச்ருதிகணசிகாகீத சரிதோ
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

कृपापारावारः—கருணைக்கடலாக விளங்குபவரும், सजलजलदश्रेणिरुचिरः—நீருண்ட மேக வரிசைபோல் அழகிய காந்தியினால் பக்தர்களின் மனதிற்கு இன்பமளிப்பவரும், रमा-वाणी-सोम—லக்ஷ்மீ ஸரஸ்வதீ, சந்திரன், स्फुरदमल—பிரகாசிக்கும் நிர்மலமான, पद्मोद्भवमुखैः—தாமரை மலரில்

ஆவிர்பவித்த பிரம்மதேவன் முதலிய **सुरेन्द्रैः**–தேவ சிரேஷ்டர்களினுல், **आराध्यः**–ஆராதிக்கத் தக்கவரும், **श्रुतिगणशिखा-गीतचरितः**–வேதக் கூட்டங்களின் சிகைபோன்ற உபநிஷத்துக்களில் புகழப்படும் தனது லீலாவிலாஸ காரியங்களை உடையவருமான, **जगन्नाथः स्वामी**–ஜகந்நாதஸ்வாமி, **मे**-என்னுடைய, **नयनपथगामी**–கண்களுக்குப் புலப்படுகிற வராக **भवतु**–ஆகவேண்டும்.

ஜகந்நாதர் நீருண்ட கார்மேகம் போன்ற தமது நீல நிற ஒளியால் அழகாக விளங்கிக்கொண்டு பக்தர்களுக்கு இன்ப மளிக்கிருர். லக்ஷ்மீ, ஸரஸ்வதி, சந்திரன், பிரம்மதேவன் முதலான தேவ சிரேஷ்டர்களாலும் பூஜிக்கத்தக்கவர் ஸமுத்திரம் போல் எல்லையற்ற தமது கருணையினுல் பக்தர்களின் துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கிவிடுகிருர். மனதாலும் சிந்தித்துப் பார்க்கமுடியாத அமைப்புக்கொண்ட இவ்வுலகங்கள் எல்லா வற்றையும் படைத்துக் காத்து அழிப்பவர் என்று வேதாந்தங் களெல்லாம் பகவானின் சரித்திரத்தைப் புகழ்ந்து கூறுகின்றன. இப்பேற்பட்ட ஜகந்நாதர் எனக்கு தர்சனம் கொடுக்கவேண்டும்.

रथारूढो गच्छन्पथि मिलितभूदेवपटलैः
स्तुतिप्रादुर्भावं प्रतिपदमुपाकर्ण्य सदयः ।
दयासिन्धुर्बन्धुः सकलजगतां सिन्धुसुतया
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ५ ॥

ரதாரூடோ கச்சன் பதி மிளித பூதேவ படலை:
ஸ்துதி ப்ராதுர்பாவம் ப்ரதிபதமுபாகர்ண்ய ஸதய: I
தயாஸிந்துர் பந்து: ஸகலஜகதாம் ஸிந்துஸுதயா
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே II

**सिन्धुसुतया**–ஸமுத்திரகுமாரியான லக்ஷ்மியோடுகூட, **रथारूढः**–ரதத்தில் ஏறிக்கொண்டு, **गच्छन्**–செல்லுகிறவருய், **पथि**-மார்க்கத்தில், **मिलितभूदेवपटलैः**-ஒருங்குகூடிய பிருமணர் களின் மண்டலங்களினுல், **स्तुतिप्रादुर्भावं** – ஸ்பஷ்டமாக உச்சரிக்கப்படும் தனது ஸ்துதியான வேதத்தை, **प्रतिपदं**–

ஒவ்வொரு பதத்தையும் (விடாமல்) **उपाकर्ण्य**-ஆதரவுடன் கேட்டு, **सदयः**-அவ்வந்தணர்களிடம் கருணையுடையவராக விளங்குபவரும், **दयासिन्धुः**-கருணைக்கடலாக இருப்பவரும், **सकलजगतां**-எல்லா உலகங்களுக்கும், **बन्धुः** - பந்துபோல் ஹிதம் செய்கிறவரும், **स्वामी**-ஸ்வாமியுமான, **जगन्नाथः**-ஜகந்நாதர், **मे**-என்னுடைய, **नयनपथगामी** -கண்களுக்குக் காண்பவராக, **भवतु**-ஆகவேண்டும்.

புரீ க்ஷேத்திரத்தில் நடைபெறும் ரதோத்ஸவம் உலக பிரஸித்தமானது. அதை இந்த சுலோகத்தில் வர்ணிக்கிறார். பகவான் லக்ஷ்மியோடுகூட ரதத்தில் ஆரோஹணித்துக்கொண்டு பக்தர்கள் ரதத்தை இழுக்க அவர்களுக்கு அருள் செய்து கொண்டு செல்கிறார் பிராமணர்களெல்லோரும் கோஷ்டியாகச் சேர்ந்துகொண்டு உரத்த குரலில் ஸ்பஷ்டமாக வேதம் முதலியவைகளால் பகவானை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். அவர்களிடம் மிகுந்த கருணைகாட்டி அவர்கள் சொல்லும் ஒவ்வொரு பதத்தையும் ஆதரவுடன் கேட்டு அநுக்ரஹம் செய்கிறார் கடல்போல் எல்லையில்லாதது அவர் கருணை. உலகிலுள்ள யாவருக்கும் எல்லா நன்மைகளையும் புரியும் உறவினர் அவர் ஒருவர்தான். அவர் என் எதிரில் வந்து காக்ஷிதரவேண்டும். (5)

परब्रह्मापीडः कुवलयदलोत्फुल्लनयनो
निवासी नीलाद्रौ निहितचरणोऽनन्तशिरसि ।
रसानन्दो राधासरसवपुरालिङ्गनसुखो
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ६ ॥

பரப்ரஹ்மாபீட; குவலயதளோத்புல்ல நயனோ
நிவாஸீ நீலாத்ரௌ நிஹித சரணோऽநந்தசிரஸி ।
ரஸாநந்தோ ராதாஸரஸ வபுராலிங்கநஸுகோ
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

**परब्रह्म**-தத்வதசையில் பரப்ரம்மஸ்வரூபியாகவும், **अपीडः**-எந்தவிதமான பீடை துக்கமில்லாதவரும், அல்லது **परब्रह्मापीडः**-பரப்ரஹ்மத்தின் ஸகுண உருவங்களில் சிறந்த

வரும், பரபிரம்மத்தைத் தனது சிறந்த பிரதிஷ்டையாக உடையவரும், कुवलयदलोत्फुल्लनयनः-நீலோத்பல புஷ்ப இதழ் போல் மலர்ந்த கண்களையுடையவரும், नीलाद्रौ-நீலமலையில் निवासी-வாஸம் செய்பவரும், अनन्तशिरसि-ஆதிசேஷன் தலையில், निहितचरणः-வைத்துள்ள தனது திருவடிகளை உடையவரும், रसानन्दः-சிருங்காரரஸ ஆனந்தத்தை அனுபவிக்கிறவரும், ப்ரஹ்மானந்தஸ்வரூபமாக இருப்பவரும், राधासरसवपुरालिङ्गनसुखः-ராதையென்னும் ப்ரிய நாயிகை ஆவலுடன் தனது சரீரத்தை வலிய இறுகித் தழுவும் சமயம் அதனால் ஏற்படும் சுகத்தையுடையவரும், அல்லது ராதையின் சரீரத்தை தான் இறுக ஆசையுடன் தழுவி ஆலிங்கனம் செய்வதால் தனக்கும் அவளுக்கும் சுகத்தை உண்டுபண்ணுகிறவருமான, जगन्नाथः स्वामी-ஸ்வாமி ஜகன்னாதர், मे नयनपथगामी-என் கண் முன்புலப்படுபவராக भवतु-ஆகவேண்டும்.

परब्रह्म अपीडः என்று பதம் பிரித்துக் கூறினால் பரப்ரஹ்ம ஸ்வரூபி என்பதும் பீடையில்லாதவர் கிலேசமில்லாதவர் என்பதும் பொருள் கிடைக்கிறது. परब्रह्मणः आपीडः என்று விக்ரஹம் சொன்னால் பரப்ரஹ்மத்தின் ஸகுண உருவங்களில் சிறந்தவர் என்றும் परब्रह्म आपीड यस्य सः என்று விக்ரஹம் சொன்னால் பரப்ரஹ்மத்தைத் தனக்குச் சிறந்த ப்ரதிஷ்டையாக, ஆதாரமாக அதிஷ்டானமாகக்கொண்டவர் என்றும் பொருள் கிடைக்கும் சிரோபூஷணத்தைக் கூறும் ஆபீட பதத்திற்கு இங்கு சிறந்தது என்று பொருள் கொள்ளவேண்டும். மலர்ந்த நீலோத்பல மலர்போல் விளங்கும் நேத்ரசோபையுடன் கூடியவர். நீலாத்ரியில், புரீ க்ஷேத்ரத்தில் வஸிப்பவர். தமது பக்தனை ஆதிசேஷனுக்கு அருள் செய்வதற்காக அவன் சிரஸ்ஸில் தமது பாதங்களை வைத்துக்கொண்டிருக்கிறார். கிருஷ்ணாவதாரத்தில் கோபியர்களுக்கு சிருங்காரரஸ ஆனந்தத்தைக் கொடுத்தவர். 'रसो वै सः' ப்ரஹ்மமே ரஸம். ப்ரஹ்மானந்த ஸ்வரூபமாக விளங்குகிறார். ராதை ப்ரேமையுடன் தம் சரீரத்தை ஆலிங்கனம் செய்வதாலும், ராதையின் அழகிய சரீரத்தை அன்புடன் தாம் ஆலிங்கனம் செய்துகொள்வதாலும்

தாம் ஸுகத்தை யடைவதுடன் அவளுக்கும் ஸுகத்தை அருளு கிறார். அப்பேற்பட்ட ஸ்வாமி ஜகந்நாதர் என் கண் முன்னால் நான் பார்க்கும்படியாகத் தோன்றட்டும். (6)

न वै प्रार्थ्यं राज्यं न च कनकता भोगविभवो
न याचेऽहं रम्यां निखिलजनकाम्यां वरवधूम् ।
सदा काले काले प्रमथपतिना गीतचरितो
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ७ ॥

ந வை ப்ரார்த்யம் ராஜ்யம் ந ச கநகதா போகவிபவோ
ந யாசேऽஹம் ரம்யாம் நிகிலஜநகாம்யாம் வரவதூம் ।
ஸதா காலே காலே ப்ரமதபதிநா கீதசரிதோ
ஜகந்நாத: ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

ஹே ஜகன்னாத! राज्यं-(மற்றவர்கள் விரும்பும்) ராஜ்யம் न वै प्रार्थ्यं-என்னால் தங்களிடம் வேண்டுமென்று பிரார்த்திக் கத்தக்கதல்ல. कनकता च-தங்கக்குவியலும், न-பிரார்த்திக் கத்தக்கதல்ல. भोगविभवः-சுகானுபவப்பெருக்கும் न-பிரார்த் திக்கத்தக்கதாக இல்லை. अहं-நான், निखिलजनकाम्यां-எல்லா புருஷர்களாலும் விரும்பத்தக்க, रम्यां-மிக்க அழகுவாய்ந்த वरवधूं-சிறந்த மணக்கத்தக்க பெண்மணியையும், न याचे-யாசிக்கவில்லை. कालेकाले-ஒவ்வொரு காலத்திலும் (காலம் தவறாமல்), प्रमथपतिना-ப்ரமத கணங்களுக்கு அதிபதியான பரமசிவனாலும், गीतचरितः-புகழப்பட்ட சரித்திரத்தை உடையவரான, जगन्नाथः स्वामी-ஜகந்நாதஸ்வாமி, सदा-எப்பொழுதும், मे-என்னுடைய, नयनपथगामी-கண்களின் வழியில் செல்பவராக, भवतु-இருக்கட்டும்.

உலகில் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை இம்மூன்று ஆசைகளையும் விடுவது மிகவும் கடினம். ஸ்தோத்ரத்தாலும் தவம் முதலியவற்றாலும் பகவானது அருளைப்பெற்றும் பலர் அவரிடம் மண்ணையும் பொன்னையும் பெண்ணையும் வரமாகக் கேட்டுஏமாந்து போகின்றனர். எனக்கு அவ்வித ஆசை ஒன்றும் கிடையாது. ராஜ்யத்தையோ, பொன்னையோ, பெண்ணையோ,

விஷயபோகங்களையோ ஒன்றையும் வேண்டுமென்று உங்களிடம் நான் பிரார்த்திக்கவில்லை. ஈசுவரனும் உம்மைப் புகழுகிறுர். அவ்வித மஹிமையுள்ள நீர் என் கண்களால் பார்க்கும்படியாக என் எதிரில் வந்து நின்று தர்சனம் கொடுக்கவேண்டும். எப்பொழுதும் உம்மை தர்சனம் செய்துகொண்டிருப்பதையே நான் விரும்புகிறேன். (7)

हर त्वं संसारं द्रुततरमसारं सुरपते
हर त्वं पापानां विततिमपरां यादवपते ।
अहो दीनानाथं निहितमचलं पातुमनिशं
जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ८ ॥

ஹர த்வம் ஸம்ஸாரம் த்ருததரமஸாரம் ஸுரபதே
ஹர த்வம் பாபாநாம் விததிமபராம் யாதவபதே ।
அஹோ தீநாநாதம் நிஹிதமசலம் பாதுமநிஶம்
ஜகந்நாதঃ ஸ்வாமீ நயநபதகாமீ பவது மே ॥

हे-सुरपते! ஹே தேவர்களின் தலைவா! असारं-ஸார மற்ற, संसारं-ஸம்ஸாரபந்த வாழ்க்கையை, त्वं-நீங்கள், द्रुततरं-வெகுசீக்கிரமாக हर-போக்கவேண்டும். त्वं-தாங்கள் अपरां-சிறந்ததாக இல்லாத மிக்கஅதமமான, पापानां विततिं-பாபக்கூட்டத்தையும், हे यादवपते-ஹே யாதவகுலத்தோர் தலைவ! हर-அழித்துப் போக்கவேண்டும். अहो-ஐயோ! दीनानाथं-தீனனையும் வேறு ரக்ஷகநாதனற்றவனையும் अचलं-கல்லாக அசைவற்று வேறிடம் செல்லாமல் உன்னிடமே சரண்புகுந்து, निहितं-நிற்பவனுமான என்னை, अनिशं-எப்பொழுதும், पातुं-ரக்ஷிப்பதற்கு, स्वामी-ஸ்வாமியான, जगन्नाथः-ஜகந்நாதர், मे-என்னுடைய, नयनपथगामी-கண்களின் வழியை அடைந்தவராக, भवतु-இருக்க வேண்டும்.

இப்பிரபஞ்சத்தில் சரீரத்துடன் பிறப்பது, சில நாட்கள் வாழ்வது, பிறகு இறப்பது மறுபடியும் பிறப்பது. இதுதான் ஸம்ஸாரமென்பது 'இதில் ஸாரமே கிடையாது. ஸுகமுமில்லை.

இதுவாஸ்தவமுமல்ல ஆனாலும் மாயையால் மயக்கமுற்று இதில் ஆழ்ந்து தீனனாகத் தவிக்கிறேன். என்னைக்காப்பாற்ற உம்மைத் தவிர வேறு யாருமில்லை. ஒரு இடமும் செல்லத்தெரியாமல் கல்லுப்போல அசைவற்று உட்கார்ந்துகொண்டிருக்கிறேன். தாங்கள் தான் எனக்கு தரிசனம் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும். இச்சம்ஸார வாழ்க்கைக்கு மூலகாரணமாக என்னிடம் குவிந்துள்ள பாபக்கூட்டங்களையெல்லாம் போக்கி ஸம்ஸார வாழ்வைத் தொலைத்து பிறப்பு இறப்பற்ற நிலையை அருளவேண்டும். (8)

ஜகந்நாதாஷ்டகம் முற்றும்.



|| श्रीः ||

# || श्लोकानुक्रमणिका ||

| ச்லோகம் | பக்கம் | ச்லோகம் | பக்கம் |
|---|---|---|---|

---